# நாமக்கல் கவிஞரின் உரைநடைப் படைப்புகளில் காந்தியமும் தேசியமும்

கி.ர. அனுமந்தன்






உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

நாமக்கல் கவிஞரின்

# உரைநடைப் படைப்புகளில் காந்தியமும் தேசியமும்

முனைவர் கி.ர. அனுமந்தன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்,
தரமணி, சென்னை-600113

நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அறக்கட்டளைச் சொற்பொழிவு

(அறக்கட்டளை நிறுவியவர் திரு. இரா. ராஜா, அமெரிக்கா)

வரிசை எண் : 3

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Nāmakkaḷ Kaviñarin̲ Urainaṭaip Paṭaippukaḷil Kāntiyamum Tēciyamum |
| Author | : | K.R. Hanumanthan (Late) Professor of History (Retd.) |
| Publisher & © | : | International Institute of Tamil Studies II Main Road, C.I.T. Campus, Chennai-600 113. Ph: 22542992 |
| General Editor | : | Dr. D. Renganathan Associate Professor International Institute of Tamil Studies Faculty of Language and Linguistics |
| Publication No. | : | 507 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | vii + 118 = 125 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.35/- (Rupees Thirty Five Only) |
| Printed by | : | Pavai Printers, 142, Johny John Khan Road, Royapettah, Chennai-600 014 Ph. 28482441, 28482973. |
| Subject | : | A Critical Study on the Contributions of Nāmakkal Kaviñar |


---

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

# அணிந்துரை

'நாமக்கல் கவிஞர் அறக்கட்டளைச் சொற்பொழிவு,' வரிசையில் மூன்றாம் சொற்பொழிவு வெளியீடாக இந்நூல் அமைகிறது. காந்தியத்தையும் தேசியத்தையும் இரு கண்களாகக் கொண்ட நாமக்கல் கவிஞரின் படைப்புகள் தமிழ் மக்களின் நெஞ்சங்களில் ஆழமாகப் பதிந்து தேசப்பற்றையும் விடுதலை வேட்கையையும் வளர்க்கச் செய்தன என்றால் அது மிகையாகாது.

நாமக்கல் கவிஞர் காந்தியத்தையும், தேசியத்தையும் தமிழகத்தில் மட்டுமல்லாமல் உலக மக்களுக்கும் பரப்புவதையே தமது குறிக்கோளாகக் கொண்டிருந்தார். இதனை அவர்தம் எளிய இனிய கவிதைகளிலும், கட்டுரைகளிலும், கதைகளிலும், நாடகங்களிலும் காணலாம்.

பாரதியாரின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தேசியத்தை நாடெங்கும் பரப்புதல், தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் காந்தியத்தைப் பரப்புதல் ஆகிய இவ்விரு நோக்கங்களும் அவருடைய அனைத்துப் படைப்புகளிலும் இழையோடியிருப்பதைக் காணலாம்.

இந்நூலாசிரியர் முனைவர் கி.ர.அனுமந்தன் அவர்கள் இந்நிறுவனத்தில் ஏற்கெனவே நாமக்கல் கவிஞரின் கவிதைகளைப் பற்றி ஒரு சொற்பொழிவாற்றியுள்ளார். அதனை இந்நிறுவனம் நூலாக வெளியிட்டுள்ளது.

அதைத் தொடர்ந்து 'நாமக்கல் கவிஞரின் உரைநடைப் படைப்புகளில் காந்தியமும் தேசியமும்' என்ற தலைப்பில் பேராசிரியர் அவர்களால் இச்சொற்பொழிவு நிகழ்த்தப்பட இருந்தது. சொற்பொழிவுக்குரிய நாளும் குறிக்கப்பட்டுவிட்டது. பேராசிரியர் கி.ர. அனுமந்தன் அவர்கள் இந்நிறுவனத்திற்கு வந்து சொற்பொழிவாற்றுவதற்கு அணியமாகவும் இருந்த நிலையில், இயற்கை அதற்கு இடம் கொடுக்கவில்லை. பேராசிரியர் அவர்கள் 3.7.2004 அன்று அனைத்துத் தமிழ்நெஞ்சங்களிலும் துயரத்தைத் தந்துவிட்டு அமரராகிவிட்டார்.

இவர் சேலம் மாவட்டம் போடிநாயக்கன்பாளையத்தில் 1922ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 25ஆம் தேதி பிறந்தார். வரலாற்றுத்துறைப் பேராசிரியராகத் தம் வாழ்க்கையைத் தொடங்கித் தமிழ் உலகிற்கு அளப்பரிய பணிகளைச் செய்துவந்தார். பல்வேறு அரிய நூல்களையும், கட்டுரைகளையும் வெளியிட்டுச் சிறப்புச் சேர்த்துள்ளார். தமிழக வரலாற்றை எழுதுவதற்கான அரசின் வல்லுநர் குழுவில் இடம்பெற்றிருந்த பேராசிரியர் அவர்கள், இம்மண்ணுலகை விட்டு விண்ணுலகம் சென்றுவிட்டமை ஈடுசெய்ய இயலாத ஓர் இழப்பாகும்.

குறித்த காலத்தில் அறக்கட்டளைச் சொற்பொழிவு எழுத்துருவை அவர் வழங்கியிருந்தார். இச்சொற்பொழிவை இந்நிறுவனம் நூலாக வெளியிடுகிறது. இந்நூல் நாமக்கல் கவிஞரின் படைப்புகள் பற்றி ஆய்வு செய்வோர்க்கு ஒரு சிறந்த வழிகாட்டியாக அமையும் என்பதில் ஐயமில்லை.

நாமக்கல் கவிஞரின் பெயரில் ஓர் அறக்கட்டளையை இந்நிறுவனத்தில் நிறுவுவதற்குக் காரணமாக இருந்த பேராசிரியர் கிர.அனுமந்தன் அவர்கள் நாமக்கல் கவிஞரின் மூத்த மருமகன் என்பது குறிப்பிடத்தக்கது. அமரராகிவிட்ட பேராசிரியர் கி.ர. அனுமந்தன் அவர்களுக்கு இந்நூலை நிறுவனத்தின் சார்பில் காணிக்கையாக்குகிறோம். இந்நூலை வெளிக்கொணர்வதில் முனைப்புடன் செயல்பட்ட இவ்வறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் தா.ரெங்கநாதன் அவர்களுக்கு என் பாராட்டுகள்.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த கணிப்பொறி உதவியாளர் திருமதி பி. கௌசல்யாவுக்கும், அழகுற அச்சிட்டுத்தந்த பாவை அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
16-07-2004

இயக்குநர்

## ஆசிரியரைப் பற்றி



முனைவர் கி.ர. அனுமந்தன் அவர்கள், சேலம் மாவட்டத்திலுள்ள போடி நாயக்கன் பட்டியில் 1922-ஆம் ஆண்டு, ஜூலை மாதம் 25-ஆம் தேதியில் ஒரு எளிய வேளாண் குடியில் பிறந்தவர். திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரி மூலமாக பி.ஏ., பட்டமும், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் மூலமாக எம்.ஏ., பட்டமும் (வரலாறு, அரசியல்) பெற்றவர் (1947). எம்.ஏ., பட்டமும் (வரலாறு, அரசியல்) பெற்றவர் (1947). அமெரிக்க ஐக்கிய நாட்டின், விஸ்கான்சின் பல்கலைக் கழகம் மூலமாக எம்.எஸ். பட்டத்தையும், சென்னைப் பல்கலைக் கழகத்தின் மூலமாக பிஎச்.டி. பட்டத்தையும் பெற்றவர். 'தமிழ் நாட்டில் தீண்டாமை' என்பது இவரது முனைவர் பட்டத்துக்கான தலைப்பாகும், வரலாற்று உதவிப் பேராசிரியராகவும், பேராசிரியராகவும், முதன்மை வரலாற்றுப் பேராசிரியராகவும் மாநிலக் கல்லூரியில் முப்பது ஆண்டுகள் பணியாற்றியபின், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தில் பண்டைய வரலாற்றுப் பேராசிரியராக நான்கு ஆண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழக வளாகத்திலுள்ள மரபுவழிப் பண்பாட்டு நிறுவனத்தின் இயக்குநராக இருந்தார். ஆங்கிலத்திலும், தமிழிலும் நல்ல புலமை பெற்றுள்ள இவர், அவ்விரு மொழிகளிலும் வரலாறு தொடர்பான பதினைந்து நூல்களையும், பல கட்டுரைகளையும், எழுதி வெளியிட்டுள்ளார். அவரது பிச்.டி. ஆராய்ச்சிக் கட்டுரையும் நூலாக வெளிவந்துள்ளது. இவர் நாமக்கல் கவிஞரின் மூத்த மருமகனுமாவார். ஆங்கிலத்திலும், தமிழிலும், நாமக்கல் கவிஞரைப் பற்றி இவர் எழுதியுள்ள, நூல்களைச் சாகித்ய அகாடமி வெளியிட்டுள்ளது. தமிழக வரலாற்றை முறையாக எழுதி வெளியிடுதற்காகத் தமிழ்நாட்டு அரசாங்கத்தால் அமைக்கப் பட்டுள்ள வல்லுநர் குழுவில் இவரும் ஒரு உறுப்பினராகப் பணியாற்றினார். இவர் 3.7.2004 அன்று மறைந்தார்.

# நன்றியுரை

கவிஞரின் இருபெருங் கொள்கைகளான காந்தியமும், தேசியமும் அவரது கவிதைகளில் எவ்வாறு வெளிப்படுத்தப் பட்டுள்ளன என்பதைப் பற்றி ஏற்கெனவே யான் சொற்பொழிவாற்றியுள்ளேன். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அப்பொழிவை ஒரு சிறு நூலாக வெளியிட்டுள்ளது. இப்போது அந்நிறுவனத்தின் வேண்டுகோளுக்கேற்ப "நாமக்கல் கவிஞரது உரைநடைப் படைப்புகளில் காந்தியமும் தேசியமும்" எவ்வாறு மறைமுகமாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்பதைப் பற்றிச் சொற்பொழிவாற்ற முன்வந்துள்ளேன். இந்த அரிய வாய்ப்பை எனக்கு நல்கியதற்காக, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்துக்கும், சிறப்பாக என்னைச் சொற்பொழிவாற்றுவதற்காகத் தேர்ந்தெடுத்த தெரிவுக்குழுவுக்கும், நிறுவன இயக்குநர் முனைவர் சா.கிருட்டின மூர்த்தி அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கி.ர. அனுமந்தன்

# பொருளடக்கம்

# முன்னுரை

காந்தியமும் தேசியமும் நாமக்கல் கவிஞரது படைப்புகளின் இரு கண்களெனலாம். இவ்விரண்டு கொள்கைகளையும் தமிழகம் முழுவதிலும் ஏன் உலகம் முழுவதிலும்கூடப் பரப்புவதே தனது படைப்புகளின் குறிக்கோள்கள் என்பதை அவர் தமது கவிதைகள் பலவற்றில் எடுத்துக் கூறியுள்ளார். தனது குறிக்கோள்களைப் பற்றிக் கூறும் போது முதலாவதாகப் பாரதியின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தேசியத்தை நாடெங்கும் பரப்புதல் என்றும், இரண்டாவதாகத் தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம், காந்தியத்தைப் பரப்புவது என்றும் தனது நண்பரொருவருக்கு எழுதிய சீட்டுக்கவி ஒன்றில்

**கன்னிமுதல் வேங்கடத் தமிழ்நாடு முழுவதும்**
**காந்திய சேவைசெய்ய**
**களைதீரச் சத்திய சாந்த நெறிபாடிடும்**
**கவி இராமலிங்கன்**[1]

என்று தன்னைப்பற்றிக் கூறுகிறார். காந்தியத்தை நாம் காப்பது மட்டுமன்றி உலகெங்கும் அதைப் பரப்பவேண்டியது இந்தியர் யாவரது கடமையாகும் என்பதை

**காந்தியம் நம் உடைமை – அதனைக்**
**காப்பது நம் கடமை**[2]

என்றும்,

**யுத்தக் கொடுமைகள் உலகினில் ஒழிய**
**உதித்த நம்காந்தியின் உயர்ந்த நல்வழியை**
**இத்தரையெங்கணும் பரப்பிடும் கடமை**
**இந்தியமக்களின் பரம்பரை உடைமை**[3]

என்ற கவிதைகளில் அவர் எடுத்துக் காட்டுகிறார்.

---

1. நாமக்கல் கவிஞர் பாடல்கள் "தொகுப்பும் குறிப்பும்", பூம்புகார்ப் பதிப்பகம், சீட்டுக்கவி, பக்.489, 2001, சென்னை.
2. Op. cit., தமிழா மறக்காதே, பாடல் 268, ப.433.
3. அற்புதன் காந்தி, பாடல் 247, ப.394.

அவரது தேசப் பற்றும், விடுதலை வேட்கையும் நாடறிந்த உண்மைகள். ஓவியம் வரைவதையே தொழிலாகக் கொண்டு வாழ்க்கை நடத்தி வந்த அவர் தன்னை ஓவியத்திலிருந்து காவியத்துக்கு ஈர்த்தது இந்திய விடுதலையில் தான் கொண்டிருந்த தீராத தாகமேயாகும் என்று அவர் தன் சுய சரிதையில் கூறுகிறார்.[4] உப்புச் சத்தியாக்கிரகத்தின் போது, திருச்சியிலிருந்து வேதாரண்யத்துக்கு உப்புக் காய்ச்சுவதற்காக ராஜாஜி தலைமையில் ஊர்வலம் சென்றபோது அவர்கள் வழிநெடுகப் பாடிக்கொண்டு செல்வதற்காகப் பாடிய வழிநடைப் பாட்டை இயற்றியவர் நாமக்கல் கவிஞர்.

கத்தியின்றி இரத்தமின்றி
யுத்தமொன்று வருகுது
சத்தியத்தின் நித்தியத்தை
நம்பும் யாரும் சேருவீர்[5]

என்ற அந்தப் பாடல்தான், கவிஞருக்குத் தேசியக்கவிஞர் என்ற பட்டத்தை வாங்கித் தந்தது. அதைக் கேட்ட ராஜாஜி அவர்கள் "இந்த சத்தியாக்கிரகத்தின் போது பாட்டொன்றைப் பாடப் பாரதி இல்லையே என்று கவலைப் பட்டேன். அக்கவலையை நீ போக்கிவிட்டாய்" என்று தனது நண்பரான கவிஞரைப் புகழ்ந்தார். இதே கருத்தைக் கவிஞரே ஒரு பாடலில் தெரிவித்துள்ளார்

நாரத கீத மென்ன
    நலந்திகழ் பாட லாலே
பாரத நாட்டை என்றும்
    பணிந்திடும் சுப்ர மண்ய
பாரதி பாட்டைக் கண்ட
    பழைய இத் தமிழர் நாட்டில்
யாரது என்று கேட்க
    யானுமிக் கவிகள் சொன்னேன்.[6]

இவ்வாறு நாமக்கல் கவிஞர் தேசியத்தையும், தேசத்தையும் பற்றிப் பாடுவதில் சுப்பிரமணிய பாரதியின் வழித்தோன்றல் எனத் தன்னைப்பற்றிக் கூறிக் கொள்கிறார். மக்களும் அதை ஏற்றுக் காந்தியக் கவிஞர், தேசியக் கவிஞர் என அவரைப் பாராட்டலாயினர்.

---

4. கி.ர. அனுமந்தன், நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, சாகித்திய அகாடமி, 26, புதுடில்லி, 1988.

5. பூம்புகார்ப் பதிப்பகம் op. cit. பஞ்.376.

6. மேலது நூல், நாமக்கல் கவிஞர் பாடல்கள், ப.511.

பொதுவாக எழுத்தாளர்கள், தங்களது உள்ளத்தில் ஆழப் பதிந்துள்ள குறிக்கோள்களையும், கொள்கைகளையும், தங்களது படைப்புகளில் வரும் கதாபாத்திரங்கள் மூலமும், அவர்களது உரையாடல்கள் மூலமும் மறைமுகமாக வெளிப்படுத்துவது இயல்பு. சான்றாகத் திரு. ஜெயகாந்தன் தமது புதினங்களில், அவரது சமதர்மக் கொள்கைகளையும், திரு கல்கி தமது தேசப்பற்று, கலைப்பற்று போன்ற கொள்கைகளையும் தங்களது புதினங்களில் வெளிப்படுத்தியுள்ளதை எடுத்துக்காட்டலாம். நாமக்கல் கவிஞரும் இவ்விதிக்கு விலக்கானவரல்லர் என்பதை எடுத்துக் காட்டுவதே இப்பொழிவின் நோக்கமாகும்.

# அன்பு செய்த அற்புதம்

"அன்பு செய்த அற்புதம்" என்ற புதினம் கவிஞரின் உரைநடைப் படைப்புகளில் நூதனமான ஒன்று. ஏனெனில் அதில் பாதிக்கு மேல் செய்யுள் வடிவிலும் மீதி உரை நடை வடிவிலும் அமைந்துள்ளது. இது ஒரு புதுமை. 'உரைநடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' என்று சிலப்பதிகாரத்தை வர்ணிப்பது போல் இதையும் ஓரளவு கூறக் கூடும்.

அகவல் போன்று அமைந்துள்ள செய்யுள் பகுதியும்கூட ஏறக்குறைய உரைநடை போன்றும், அதே சமயம் சந்தம் செறிந்த செய்யுள் போன்றும் அமைந்துள்ளது இதன் மற்றொரு தனிச் சிறப்பாகும்.

இப்புதினத்தின் கதாநாயகியான மங்களம் எனும் மாதரசியின் தந்தையான மகாதேவரை வர்ணிக்க வந்த கவிஞர் அவரை ஒரு பழுத்த காந்தியவாதியாகவே நமக்குக் காட்டுகிறார்.

கற்பிதம் கடந்த அற்புதப் பிறவியாம்
காந்தியின் வாழ்வில் கரையிலாக் காதலும்
உள்ளவர் ஆதலால் ஒழுக்க ரீதியாய்
கதராடையல்லால் வேறுடை கட்டார்
நித்தமும் நூற்பதை நியமமாய்க் கொண்டு
அகில முழுவதும் அஹிம்சா தர்மம்
நிலவிடவிரும்பும் நித்திய தியானமும்
அன்பும் அருளும் அறமும் செறிந்த
பொதுநலச் சேவை புரிவதில் ஆசையும்
முதலிய சிறப்புகள் முற்றப் பெற்றவர்[1]

என அவரைக் கவிஞர் வர்ணிக்கிறார். கதராடை மட்டுமே அணிதல், தினமும் நூல் நூற்றல், அஹிம்சையில் ஆர்வம், பொதுநலச் சேவையில் விருப்பம் போன்ற காந்தியக் கொள்கைகளில் பிடிப்புள்ள ஒரு பெரியாரையே நாம் மகாதேவரிடம் காண்கிறோம்.

---

1. நாமக்கல் கவிஞர், அன்பு செய்த அற்புதம், ப.13, பழநியப்பா பிரதர்ஸ், சென்னை.

இப்புதினத்தின் கதாநாயகனான சங்கரலிங்கம் ஒரு தற்கால வாலிபன். அஹிம்சை, இயந்திர ஒழிப்பு போன்ற காந்தியக் கருத்துகளில் அவனுக்குச் சிறிதும் உடன்பாடில்லை. எனவே அவன் மாமனாரிடம் ஒரு நாள் தனது ஐயப்பாடுகளை வெளியிட்டு வாதம் செய்கிறான். அது கேள்வி பதில் முறையில் அமைந்துள்ளது. "காந்திய சல்லாபம்" என்ற தலைப்பில் அமைந்துள்ள ஒரு அத்தியாயத்தில் முழுக்க, முழுக்கக் காந்தியக் கருத்துகளே விளக்கமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

விவாதத்தின் தொடக்கத்தில் அஹிம்சையைப் பற்றிய சர்ச்சை எழுகிறது. இந்திய நாட்டை அடிமைப்படுத்தி ஆண்டு கொண்டிருந்த ஆங்கிலேயரை நாட்டை விட்டே ஓட்டவும், நாடு அந்நிய ஆட்சியிலிருந்து விடுபடவும் பலாத்காரம் நிறைந்த கிளர்ச்சியும் போர் முறையுமே சாலச் சிறந்தது என்று அவன் தனது மாமனாரிடம் கூறுகிறான்.

நாட்டைக் காக்கவும் நல்லன செய்யவும்
உயிரைக் கொடுக்கிற உயர்ந்த தியாகம்
சேனாவீரனே செய்திட முடியும்[2]

என அவன் கூறுகிறான். நாட்டைக்காக்க உயிரையே பணயம் வைக்க முன்வரும் போர் வீரனே உண்மையான தியாகி, நாட்டுப் பற்றுள்ளவன் என்பது அவனது நம்பிக்கை. மற்றும் நம்நாடு மேலைநாடுகளைப் போல் முன்னேற வேண்டுமானால் விஞ்ஞான வளர்ச்சியும், இயந்திரங்களைப் பயன்படுத்துதலும் மிக இன்றியமையாதன என அவன் எடுத்துரைக்கிறான்.

விஞ்ஞான அறிவும் வீரமும் செறிந்த
யுத்தப் பழக்கமே மெத்தவும் நல்லது[3]

என்கிறான்.

அதற்கு மாற்றுரை பகரும் வகையில் மாமனார் மகாதேவர், ஒரு மனிதனின் நோக்கம் மட்டும் உயர்ந்ததாகவும், தூய்மையானதாகவும் இருந்தால் மட்டும் போதாது. அதை அடையும் வழி முறைகளும் தூய்மையானவையாகவும், பிறருக்குத் துன்பம் ஏற்படுத்தாததாகவும் இருக்க வேண்டும். அதுவே காந்தியக் கொள்கை என்கிறார்.

நோக்கம் தனையே நோக்குவதல்லால்
நோக்கம் பெறுகிற மார்க்கம் அதனை

2. மேலது நூல், ப.171.
3. மேலது, ப.172.

மக்கள் சிறிதும் மதிப்பதே இல்லை, என்றும்
எண்ணிய ஒன்றை எப்படியாகிலும்
அடைந்தால் போதும், அதனால் பிறர்க்கு
எத்துணைத் துன்பம் எப்படி நேரினும்
உயர்ந்த நோக்கம் உள்ளன என்று
கொடுமை செய்யவும் கூசுவதில்லை[4]

என்று கூறி தேசவிடுதலைக்குப் பலாத்காரத்தையும் போரையும் கடைப்பிடித்தல் நல்லதல்ல என்கிறார். பிரிட்டிஷாரைத் துன்புறுத்தி விடுதலை பெறுவதைவிட சாத்வீக முறையில் அவர்களை எதிர்த்து அவர்களை மனம் மாறச் செய்து விடுதலை பெறுவதே சிறந்தது என்ற காந்தியத் தத்துவத்தை எடுத்துக் கூறுகிறார். சுபாஷ் போன்றவர்கள் போர்முறையைக் கையாண்டுதான் சுதந்திரம் பெற முடியும் என்ற போது காந்திஜி அவர்கள் பலாத்காரத்தைப் பலாத்காரத்தால் வெல்ல நினைப்பது தீயைத் தீயால் அணைக்க முற்படுவது போன்றது என்று கூறினார். நெருப்பை நீரால்தான் அணைக்க முடியும். பலாத்காரத்தை அன்பு, அருள், சாத்வீக முறைபோன்றவற்றால்தான் தடுக்க முடியும். அஹிம்சா வழியைப் பின்பற்றிப் பெறுகிற விடுதலையே நிலைக்கும். மற்றது நிலைக்காது என்ற காந்தியக் கருத்தை வற்புறுத்துகிறார் மகாதேவர். சங்கரனுக்குத் தனது மாமனாரின் வாதம் ஏற்புடையதாக இல்லை. உலகின் பல பகுதிகள் போர் முறையைக் கடைப்பிடித்தே விடுதலை பெற்றுள்ளன. ஏன்? பிரிட்டன்கூட ஆயுத பலத்தையே நம்புகிறது. வன்முறை மூலமே நமது அறப்போரை அடக்கப் பார்க்கிறது. சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுவோரை அவர்கள் சிட்டுக் குருவிகள் போல் சுட்டு வீழ்த்தத் தயங்குவதில்லை. அப்படியிருக்கும் போது நாம் மட்டும் ஏன் சாத்வீகமாகப் போரிட வேண்டும் என அவன் வினா எழுப்புகிறான்.

அதற்கு மாற்றாகத் மகாதேவர் பலாத்காரப் போரில் சாகின்றவர்களின் எண்ணிக்கையை விட சாத்வீகப் போரில் இறக்கின்றவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாகவே இருக்கு மென்றும், மற்ற உலகநாடுகள் இக்கருத்தை ஏற்காவிடினும் இந்தியா அதை ஏற்று நடைமுறைப்படுத்தி ஏனைய நாடுகளுக்கு ஒரு வழி காட்டியாக இருக்க வேண்டுமென்றும் பகர்கின்றார். காந்திய வழியை உலகுக்கு எடுத்துக்காட்டவேண்டியது இந்தியரின் கடமை என்கிறார்.

சாத்வீக எதிர்ப்பில் சாவோர் வெகுசிலர்
ஆயுத எதிர்ப்பில் அழிவுகள் அனந்தம்

4. மேலது நூல், ப.172.

அன்பின் வழியில் கோபமும் அடங்கும்
வம்பின் வழியில் வெறியே வளரும்
மற்றுள நாட்டினர் மதிக்காவிடினும்
மேதினிக்கெல்லாம் மெய்ஞ்ஞானதீபம்
இந்தியா காந்தி சொல் இகழ்ந்திடலாமா?[5]

என்று அவர் கேட்கிறார். அதற்குச் சங்கரன்

உலகில் போல் புரிவது மனித சுபாவம்
அதை முற்றிலும் உலகிலிருந்து போக்கு
வதென்பது முடியாத காரியம்

என்று கூறுகிறான் சங்கரன். அதற்குப் பதிலாக மகாதேவர் கூறுவதாவது.

கல்விகள் மிகுந்த நல்லோர் தம்முள்
சிலரேயாயினும் சிந்தனை செய்து
காந்தியின் வழியைக் கடைப்பிடித்திட்டால்
கொலைமிகும் யுத்தக் கொடுமை குறையும்
உலகுக்கு அதுபெரும் உபகாரமாகும்[6]

என்பதாகும்.

இதற்கேற்ப உலகநாடுகளிடையே ஏற்படும் வழக்குகளைப் போரின் மூலம் தீர்க்கக் கூடாது. பேச்சு-வார்த்தைகள் மூலமும் சர்வதேச நீதி மன்றம் (International Court of Justice) மூலமும் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற குறிக்கோளோடுதான் ஐக்கிய நாடுகள் சபை (United Nations Organisation) என்ற நிறுவனம் இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் ஏற்படுத்தப்பட்டது. பல சிறிய நாடுகளிடையே ஏற்படும் வழக்குகள் பலவற்றை அது தீர்த்து வைத்துள்ளது என்பது உண்மை. பெரிய வல்லரசுகள் தங்களது ஆயுத பலத்தைக் கொண்டு பிற நாடுகளோடு போர் புரியும் போதுதான் ஐ.நா. சபையால் ஒன்றும் செய்ய முடியாமல் போகிறது. உலக வல்லரசுகள் சாத்வீக முறையைக் கடைப்பிடிக்கும் போதுதான் உலகத்தில் போரின் கொடுமைகள் ஒழியும் என்பது ஒரு தலை. இக்கருத்தையே மகாதேவர்

காந்திமகாத்மா வாழும் காலம்
இப்போதாவது இந்தப் போர்வெறி
மாறிடுமானால் மாநிலம் வாழுமே[7]

என்ற வரிகளில் எடுத்தியம்பியுள்ளார்.

---

5. மேலது நூல், ப.173. 6. மேலது நூல், ப.174. 7. மேலது நூல், ப.173.

அடுத்தாற்போல் சங்கரன், "இது விஞ்ஞான உலகம். விஞ்ஞானத்தால் கண்டுபிடிக்கப்பட்ட பல இயந்திரங்களால் தான் மக்கள் சுகபோகமாக வாழ்கின்றனர். நீங்கள் சொல்கிறபடி வெறும் கைத்தொழில்களால் இந்தியா முன்னேறாது. உலகில் நாம், பின்தங்கி விடுவோம். இயந்திரங்கள் இங்குப் பெருக வேண்டும். தொழிற்சாலைகள் பெருக வேண்டுமெனக் கூறுகிறான். அதற்கு மாறாக மகாதேவர் இந்தியா தன் இயந்திர மோகத்தைக் கைவிட வேண்டும் என்ற காந்தியக் கருத்தை எடுத்துக் கூறுகிறார். இயந்திரச் சாலைகள் பெருகி விட்டால் நாட்டில் தலை விரித்தாடும் பஞ்சமும், பிணியும், வேலையில்லாமையும் பறந்திடும் என நம்புவது வெறும் மயக்கமே என அவர் கூறுகிறார்

எந்திரப் பெருக்கு ஏற்பட்டு விட்டால்
நன்மை மிகுமென நம்புவதெல்லாம்
கல்லைக் கட்டிக் கடலில் குதித்து
நீச்சல் பழகிட நினைப்பது போலாம்[8]

என அவர் உரைக்கின்றார். மற்றும் ஏழைத் தொழிலாளிகள் செய்து வரும் வேலைகளை எல்லாம் எந்திரமே செய்து விடுமாயின் ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் வேலை இழப்பர். வேலையில்லாத் திண்டாட்டம் நாட்டில் பெருகும். வேலை இழந்தோரெல்லாம் வீண் வம்பளப்பிலும் சச்சரவிலும் ஈடுபடுவர். நாட்டின் அமைதி குலையும் என அவர் எடுத்துரைக்கிறார்.

எத்தனைக் கெத்தனை எந்திரச் சாலையோ
அத்தனைக் கத்தனை ஆயிரக் கணக்கில்
மக்கள் பிழைப்பில் மண்ணைப் போடும்
கைத்தொழிலெல்லாம் கட்டாய் ஒழியும்
எல்லாத் தொழிலையும் எந்திரம் செய்தால்
மனிதருக்கெல்லாம் மற்றென்ன வேலை?
வேலையில்லாதவர் திண்டாட்டமே மிகும்
வேலையில்லாதவர் வேறென்ன செய்வர்?
பசிப்பிணி அவர்களைப் படுத்தும் பாடால்
பொறுமை இழந்து ஆத்திரம் பொங்கி
எதையும் செய்திட இடமுண்டாகும்
சமுதாயத்தில் சச்சரவே மிகும்[9]

என்று எந்திரங்களால் ஏற்படும் தீயபலன்களை அழகாக எடுத்துக் காட்டுகிறார்.

---

8. மேலது நூல், ப.174.

9. மேலது நூல், ப.175.

விஞ்ஞானத்தின் உச்சியில் இயங்கிக் கொண்டிருக்கும் இக்கால உலகில் எந்திரமே கூடாது என்பது கேலிக் கூத்தாகும் எனப் பலர் பழிக்கக்கூடுமே எனச் சங்கரலிங்கம் தனது ஆதங்கத்தை வெளிப் படுத்துகிறான். அதற்கு மாற்றாக அவனது மாமனார், "காந்திஜி இயந்திரங்களைப் பயன்படுத்துவதை முற்றிலுமாக விட்டுவிடச் சொல்லவில்லை என்றும், மனிதர்கள் தங்களது கைகளால் செய்ய இயலாத தொழில்களில் இயந்திரங்களைப் பயன்படுத்துவதில் தவறில்லை" என்றும் கூறியுள்ள கருத்தைத் தன் மருமகனுக்குப் பின்வருமாறு நினைவூட்டுகிறார்.

**கையில் செய்ய முடியாத காரியம்**
**எந்திரம் செய்வது ஏற்புடைத்தாகும்**
**சிற்சில தொழில்கள் எந்திரம் செய்வது**
**தப்பிதம் என்றே தடைபோட வேண்டும்**
**எத்தொழில் மற்றது எப்படித்தாயினும்**
**உணவும் உடையும் உற்பத்தியாவது**
**கட்டாயமாகக் கைத்தொழிலாகவே**
**இருக்கும்படிக் கொரு ஏற்பாடு செய்தால்**
**பெரும்பாலோர்க்குப் பிழைப்பு நடக்கும்**
**வேலையில்லாதவர் வேதனை குறையும்**
**உத்தமன் காந்தி உபதேசிக்கும்**
**சத்தியம் இதனைச் சரிவரச் செய்தால்**
**சமுதாய வாழ்வில் சங்கடம் குறையும்.**[10]

இப்பாடல் வரிகள் இக்காலத்துக்கும் ஏற்புடையதாய் அமைந்துள்ளது. ஏனெனில் இயந்திரங்கள் ஆடைகள் நெய்வதிலும், நூல் நூற்பதிலும் ஈடுபடுத்தப்பட்டதன் காரணமாக ஆயிரக்கணக்கான நெசவாளிகள், வேலையின்றி அலைவதையும், ஒருவேளை உணவுக்கும்கூட வழி இன்றித் தவிப்பதையும் நாம் கண்கூடாகக் காண்கிறோம். விவசாயத்திலும் இயந்திரங்கள் அதிகமாகப் பயன்படுத்தப்படுமானால், விவசாயத்தை நம்பி வயிறு வளர்க்கும் ஏழைத் தொழிலாளிகள் கஞ்சிக்கும் வழியின்றித் தவிக்க நேரிடும். அதனால் உணவு, உடை இவற்றைத் தயாரிப்பதில் மட்டுமாவது இயந்திரங்கள் பயன்படுத்தப்படுவது தடுக்கப்படவேண்டும் என்பது இங்கே விளக்கப்பட்டுள்ளது. நன்கு வளர்ந்த நாடுகள் இவ்விரு துறைகளில் ஈடுபடுவதில் தவறில்லை.

---

10. மேலது நூல், ப.176.

ஏனெனில் அங்குப் பொருள் வளம் உள்ளது. ஆனால் மனித வளம் (Human Resources) இல்லை. இவற்றில் ஈடுபடக்கூடிய மனித உழைப்பாளிகள் அங்குப் போதிய அளவில் இல்லை. ஆனால் நம் நாட்டைப் போன்ற பின்தங்கிய, வளம் குறைந்த நாடுகளில் இயந்திரங்கள் பெருமளவில் நுழைந்தால் வேலையில்லாத் திண்டாட்டம் நிச்சயம் அதிகமாகும். வேலை இல்லாத இளைஞர்கள் என்ன செய்வதெனத் தெரியாமல் போதை மருந்துகளை அருந்தி மயங்கிக் கிடப்பதும், ஒழுக்கம் இழந்து கிரிமினல் குற்றங்களில் ஈடுபடுவதும், நக்சலைட் போன்ற தீவிரவாதக் கும்பல்களோடு போய்ச் சேர்ந்து கொள்வதும் இன்றைக்குக் கண்கூடாக நாம் காணும் காட்சியாகும். மற்றும் இயந்திரங்களைப் பயன்படுத்தி வளரும் நாடுகள் உற்பத்தியிலீடுபடுவதில் அவர்களது நாடுகளுக்குத் தேவையான பொருள்களோடு, மேலும் பலமடங்கு அதிகமான பொருள்களை உற்பத்தி செய்கின்றனர். தங்களது தேவைக்கு மீறி உற்பத்தியாகும் பொருள்களை நம் நாடு போன்ற பின்தங்கிய நாடுகளில் கொண்டு வந்து குவிக்கின்றனர். அதனால் பொருட்களின் விலை குறைகிறது. மக்கள் அவற்றையே விரும்பி வாங்குவதால் உள்நாட்டுத் தொழில்களில் உற்பத்தியாகும் பொருள்கள் விற்பனையாவதில்லை. அதனால் சுதேசியத் தொழில்கள் நசித்துப் போகின்றன. உலகளாவிய பொருளாதாரம் (Globalisation), தாராள வாணிபம் (Free Trade) என்ற பெயர்களில் இப்போது மேற்கண்ட நிலைதான் ஏற்பட்டுள்ளது. அந்த நிலை மேலும் மோசமடைவது தடுக்கப்படவேண்டுமானால், மக்கள் பெரும்பாலும் பயன்படுத்தும் அத்தியாவசியப் பொருள்களான உணவு, உடை இவற்றை உற்பத்தி செய்யும் தொழில்களையாவது மானுடத் தொழிலாளிகளிடம் ஒப்படைக்க வேண்டும் என்ற மேற்கண்ட வாதம் முற்றிலும் சரியானதென்றே நினைக்கத் தோன்றுகிறது. இல்லாவிட்டால் "சமுதாயத்தில் சச்சரவே மிகும்" என்ற காந்திஜியின் வாக்குதான் கட்டாயம் பலிக்கும்.

விஞ்ஞானம் இன்றைய சமுதாயத்துக்கு ஓரளவு வேண்டுமென்பதை எவரும் மறுக்க முடியாது. சான்றாக, ஒருநாள் மின்சாரம் நின்றுபோனபோது அமெரிக்க நாடே ஸ்தம்பித்து விட்டது என்பதை நாமறிவோம். ஆனால் அதே விஞ்ஞானம் அளவுக்கு மீறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். "அளவுக்கு மீறினால் அமுதமும் நஞ்சு" என்ற பழமொழிப்படி அளவுக்கு மீறிய விஞ்ஞான வளர்ச்சியினால் உலகமே அழியக்கூடிய நிலை ஏற்பட்டுவிடுமென்பதில் ஐயமில்லை. சான்றாக அமெரிக்கா, ருஷ்யா,

சீனா போன்ற நாடுகளில் குவித்து வைத்திருக்கப்பட்டுள்ள நூற்றுக் கணக்கான அணுகுண்டுகளில் ஏதாவது ஒன்று தப்பித்தவறி வெடித்தாலும், உலகமே அழிந்து விடும் என்று விஞ்ஞானிகளே கூறுகின்றனர். மற்றும் இயந்திரங்களில், திருப்பித் திருப்பி ஒரே வேலையைச் செய்யும் தொழிலாளியின் மூளை சரிவர வேலை செய்வதில்லை. சிந்தித்துச் செயலாற்றும் திறனை அவன் இழந்து விடுகிறான். சுருங்கச் சொல்லின் அவன் ஒரு மனநோயாளியாகவோ இயந்திரமனிதனாகவோ மாறிவிடுகிறான். இதனால் சமுதாயத்துக்கே ஏற்படும் பேரிழப்பு சொல்லில் அடங்காதது. எனவே தான் நம் பெரியோர்கள் வளர்த்துள்ள மெய்ஞ்ஞான அறிவு குறையாத வகையில்தான் விஞ்ஞானம் வளர வேண்டுமென மகாதேவர் கூறுகிறார்.

> **மெய்ஞ்ஞான அறிவை மேன்மைப் படுத்தவே**
> **விஞ்ஞானம் உதவியாய் விளங்கிட வேண்டும்**
> **மனிதப் பண்புகள் மாண்டு விடும்படி**
> **விஞ்ஞான மோகம் வெறியாகி விட்டால்**
> **எண்ணிப் பார்த்தே எதையும் செய்கிற**
> **மனிதனும்கூட ஓர் மனமென்பதில்லா**
> **எந்திரமாகவே இயங்கிட நேரும்**[11]

உளவியல் அறிஞர்களும் (Psychologists) இக்கருத்தை ஏற்றுக் கொள்கின்றனர். தொழிற்சாலையில் பணிபுரியும் பலர் மனநோய்க்கு உட்படுவதற்கு அவர்கள் செய்யும் இயந்திர மயமான தொழிலே காரணம் என்பதை அவர்கள் ஐயந்திரிபற எடுத்துரைக்கின்றனர். எனவே மனிதப் பண்புகள் (Humanism) உலகில் மாண்டு போகாமலிருக்க, இயந்திரப் பெருக்கம் தடுக்கப்பட வேண்டுமென்பது மகாதேவரின் கொள்கை. அதுவே காந்திஜியின் கொள்கையுமாகும்.

சங்கரலிங்கத்தின் குணாதிசயங்களை வர்ணிக்கும் நாமக்கல் கவிஞர் அவனை ஒரு தேசபக்தியுள்ள இளைஞனாகவும் அதே சமயம் அஹிம்சையில் நம்பிக்கை இல்லாதவனாகவும் சித்திரித்துள்ளார். அஹிம்சை முறை என்பது கோழைத்தனமேயன்றி வீரமான செயல் அன்று என்ற பொதுவான கருத்தையே அவன் கொண்டிருப்பதாகக் கூறுகிறான். ஆனால் அஹிம்சையைக் கடைப்பிடிப்பவனே உண்மையான வீரன் என்று மகாதேவர் திட்டவட்டமாகச் சாதிக்கிறார். சங்கரலிங்கத்தைப் பற்றிக் கூறும் போது,

> **தேசபக்தியில் தீவிரம் கொண்டவன்**
> **அடிமை வாழ்க்கையில் அருவருப்புள்ளவன்**

---

11. மேலது நூல், ப.176.

அச்சம் என்பதை அறவே மறந்தவன்
சத்தியம் தவறா உத்தமன் ஆனால்
சாத்வீகம் என்பதில் சந்தேகம் உள்ளவன்[12]

என்று அவனை வர்ணிக்கிறார். கவிஞரின் குறிக்கோள்களான சத்தியம், தேசபக்தி ஆகிய கொள்கைகளை அவர் சங்கரலிங்கத்திடம் புகுத்தியுள்ளார். அதே சமயம் அஹிம்சையில் நம்பிக்கையில்லாதவனாக்கிக் காட்டி, மகாதேவர் மூலம் அஹிம்சையின் இயல்பையும், அதன் பெருமையையும் கவிஞர் மறைமுகமாக எடுத்துக் காட்டுகிறார். மேலும் சங்கரலிங்கம், மகாத்மா காந்தியை மதிப்பவன். ஆனால் அதே சமயம் அவரது அஹிம்சை வழி நடைமுறைக்கு ஒத்து வராதது. கோழைத்தனமானது என்ற எண்ணமுடையவன் என்று கவிஞர் அவனைச் சித்திரிக்கிறார்.

மகாத்மா காந்தி மாபெரும் பிறவிதான்
வழிபட்டு தினமும் வணங்கத் தக்கவர்
ஆயினும் அவர் தரும் அஹிம்சாமார்க்கம்
உலகத்தின் இயல்புக்கு ஒவ்வாது சற்றும்
அவரைத் தவிர அப்படி நடப்பது
எவருக்காயினும் என்றும் முடியுமா?

என்ற வினாவை அவன் எழுப்புகிறான். அடுத்து அவன் அஹிம்சை முறையில் ஏற்படக் கூடிய அவலங்களைச் சுட்டிக் காட்டுகிறான்.

அஹிம்சைப் பேச்சால் அச்சமே மிகுந்திடும்
கொல்லா விரதம் கோழைத் தனமாய்க்
கொடுமைக்காரர் கொலைசெய்ய வரினும்
கற்பைக் கெடுக்கக் கருதிடும் போதும்
மானம், மக்கள், மனைவியைக் காக்கவும்
ஆண்மையும் ஆற்றலும் அறவே இழந்து
பேடித்தனமாய் ஓடி ஒளித்தலே
அஹிம்சைப் பேச்சால் அடைவார் மக்கள்
கத்திமுனையினால் நம்மைநாம் காத்திடக்
கொல்லவோ, சாகவோ கூச்சப் படாத
ஆண்மையே நமக்கு மிகவும் அவசியம்[13]

என அவன் தன் மாமனாரிடம் கூறுகிறான்.

அஹிம்சா முறை கோழைத்தனமானது என்ற சங்கரலிங்கத்தின் கூற்றையும் வன்முறையால்தான் சுதந்திரத்தைப் பெறமுடியும் என்ற அவனது வாதத்தையும் மகாதேவர் சரிவர

---

12. மேலது நூல், ப.15.  13. மேலது நூல், ப.16.

மறுக்கவில்லை. எல்லாவற்றுக்கும் காந்தி மகானைப் பின்பற்றுவதொன்றே வழி எனக் கூறி மழுப்பி விடுகிறார். ஆனால் காந்திஜி அவர்களே இத்தகைய இக்கட்டான சமயங்களில் அஹிம்சாவாதி எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்பதைப் பல சமயங்களில் விளக்கியுள்ளார். தன் மனைவி கற்பழிக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டிருப்பது அஹிம்சை அல்ல என்றும், அப்போது சாத்வீக முறையால் அஹிம்சாவாதி தன் உயிரைக் கொடுத்தேனும் தன் மனைவியின் கற்பைக் காக்க வேண்டுமென்றும், அது முடியாவிடில் வன்முறையைப் பயன்படுத்தியாகிலும் அவன் தன் மனைவியின் மானத்தைக் காப்பாற்ற வேண்டும் என்றும் காந்திஜி பல முறை கூறியுள்ளார். இக்கருத்து கவிஞருக்கும் உடன்பாடானதேயாகும். மற்றும் மறைவிடங்களில் பதுங்கிக் கொண்டு குண்டு வீசி நிரபராதிகளான பெண்களையும், குழந்தைகளையும் கொன்று குவிக்கும் போர்வீரனைவிட எதிரியின் குண்டு வீச்சுகளுக்குக் கூட அஞ்சாமல் நிமிர்ந்து நின்று குண்டுகளை ஏற்றுக்கொண்டு சாக முன்வரும் சத்தியாக்கிரகியே உண்மையான வீரமுடையவன் என்பதையும் காந்திஜி அவ்வப்போது விளக்கிக் கூறியுள்ளார். இதுவும் கவிஞருக்கு உடன்பாடேயாகுமென்பதை அவரது இப்புதினத்திலேயே சுட்டிக் காட்டியுள்ளார். நாட்டிற்காகப் போர் செய்து உயிரிழக்கும் போர் வீரனே நாட்டில் உண்மைத் தியாகி என்ற சங்கரன் கருத்தை மறுக்கிறார் மகாதேவர்.

பிறரைக் கொல்லவே பயிற்சி பெறுகிற
சேனாவீரன் தியாகமா செய்கிறான்[14]

என்று கேட்டுவிட்டு மகாதேவர், சேனாவீரன் சேனாதிபதிக்குப் பயந்து கொண்டு ஒருவித அச்சத்தினாலேயே பிற போர்வீரர்களைக் கொல்கிறான் என்கிறார்.

பட்டாளத்தில் பயிற்சி பெறுகிற
சேனை வீரன் செய்கிற காரியம்
அத்தனையும் ஒரு அச்சத்தாலே[15]

என்கிறார். சேனாதிபதிக்குப் பயந்தே சேனாவீரன் எந்திரம் போல் செயல்படுகிறான். தேசபக்தியாலே வீரத்தாலோ அல்ல என்கிறார். சேனாவீரன் சேனைத்தலைவன் ஆணைப்படி காலையிலிருந்து மாலைவரையும் எந்திரம் போலவே எதையும் செய்வது அச்சமில்லாமல் செய்கிற வேலையா? எனக் கேட்கிறார்.[16]

---

14. மேலது நூல், ப.184. 15. மேலது, ப.185. 16. மேலது, ப.186.

பிறரைக் கொல்லப் பயிற்சிபெற்றவன் வீரனா? பிறரைக் காப்பாற்ற சாத்வீக முறையில் உயிரைக் கொடுக்கவரும் சத்தியாக்கிரகி வீரனா? எனக் கேட்கிறார். பகைவனுக்கஞ்சாது, அவனை அஹிம்சை முறையில் எதிர்த்து உயிர்விடும் சத்தியாக்கிரகியே உண்மையில் தியாகி, அச்சமற்றவன் என்று அறுதியிட்டுக் கூறுகிறார்.

காந்திமகாத்மா கற்பிக்கிறபடி
நாட்டை மீட்கவும் நல்லன செய்யவும்
துன்பம் எதையும் அன்புடன் சகித்து
பகைவரிடத்தும் பாசமே காட்டி
ஆயுதம் ஏந்துதல் அறவே மறுத்துச்
சத்திய சாந்தமே தன் படையாகத்
தன்னுயிர் போயினும் தான் பிறஉயிரை
கொல்லா விரதமே கொண்டவனாகத்
தீமையை எதிர்க்கும் திடமனமுடைய
உத்தமன் அவனே உயிரைக் கொடுப்பவன்
தியாகம் என்கிற தீரமும் அதுதான்"[17]

இவ்வாறு தியாகத்துக்கு இலக்கணம் சொல்லிய அவர் அச்சமின்மைக்கும் அர்த்தம் கூறுகிறார்.

பொய்மையும் தூய்மையும் வழுவா நெறியில்
அனைத்துள உயிர்க்கும் அன்பே செய்து
அருள்மனம் நிறைந்த அமைதிஒன்றே
அச்சமில்லாமை அளிக்கவல்லது.[18]

என்று அச்சமில்லாத வீரத்துக்கும் இலக்கணம் கூறுகிறார். இவ்வாறு போர்வீரனையும் சத்தியாக்கிரகியையும் அவர் ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

---

17. மேலது நூல், ப.185.
18. மேலது, ப.186.

# சாதிகளில்லாச் சமுதாயம்

சங்கரலிங்கம், மகாதேவரின் "காந்திய சல்லாபத்தில்" அஹிம்சையைப் பற்றிய விவாதத்தை அடுத்துச் சமுதாயத்தைப் பற்றிய சர்ச்சை எழுகிறது. "நம் நாட்டில் சாதிப்பற்று தலைவிரித்தாடுகிறது. சாதிகளை எல்லாம் ஒட்டு மொத்தமாக ஒழித்தால் தான் நாடு முன்னேறும் என்று வலியுறுத்துகிறான். அதற்குப் பதில் சொல்ல வந்த மகாதேவர் மீண்டும் காந்திஜியின் கருத்துகளையே எடுத்துக் கூறுகிறார். காந்திஜி வர்ணாஸ்ரம தர்மத்தை ஒப்புக் கொண்டவர். பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் ஆகிய நான்கு பிரிவுகள் எந்தச் சமுதாயத்திலும் இருக்கும். நமது சமுதாயத்திலும் அவ்வாறு இருப்பதில் தவறில்லை என்பது அவர் கருத்து. சமய சம்பந்தமான சடங்குகளைச் செய்வதையே தொழிலாகக் கொண்டவர்கள் பிராமணர்கள். எல்லா நாட்டிலும் இத்தகைய மதக்குருக்கள் இருக்கின்றனர். நாட்டை எதிரிகளிடமிருந்து காப்பாற்றும் போர் வீரர்கள் சத்திரியர்கள் எனப்பட்டனர். எல்லா நாட்டிலும் போர் வீரர்கள் ஏராளமாக இருப்பதை நாம் காண்கிறோம். வியாபாரம், வேளாண்மை இவற்றைத் தொழிலாகக் கொண்டவர்கள் வைசியர் எனப்பட்டனர். அத்தகைய தொ்ழில்களைச் செய்பவர்கள் எல்லா நாடுகளிலும் இருக்கின்றனர். இது தவிர தச்சுத்தொழில், கொல்லர் தொழில், கட்டடம் கட்டும் தொழில் போன்ற பல்வேறு தொழில்களில் அதாவது கைகளால் செய்யப்படும் தொழில்களை (Manual Labourers) மேற்கொண்ட உழைப்பாளிகள் யாவரும் ஒட்டுமொத்தமாகச் சூத்திரர் எனப்பட்டனர். இத்தகைய தொழிலாளிகள் இல்லாத நாடுகளே இல்லை. இத்தகைய நான்கு பிரிவுகள் நம் நாட்டில் இருப்பது தப்பில்லை. இவர்களோடு சேராமல் ஒதுக்கிவைக்கப்பட்ட மஹர், சண்டாளர் முதலிய சாதிகள் ஒழிக்கப்படவேண்டும். அதோடு தீண்டாமை என்ற தீய பழக்கமும் ஒழிக்கப்படவேண்டும். தீண்டாமை மட்டும் ஒழிக்கப்பட்டால் போதும். ஏனைய மேல் சாதிகள் அப்படியே இருப்பதில் தவறில்லை என்பது காந்திஜியின் கருத்து. ஆனால் டாக்டர் அம்பேத்கார் அவர்கள் வர்ணாச்சிரம முறையில் பிராமணர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அளவுக்கு மீறிய சலுகைகள், சூத்திரர்களுக்கு அளவுக்கு மீறி இழைக்கப்பட்டு வரும் தீமைகள்

இவற்றை எல்லாம் எடுத்துக் காட்டியபின் காந்திஜி ஆதரித்த வர்ணாச்சிரம முறையையே கண்டிக்கத் தொடங்கினார், பொதுவாகச் சாதி முறையைக் கண்டிக்க முற்பட்டார். அதிலும் அவர் தீண்டாமையைத்தான் பெரிதும் கண்டித்தார். அதை நாட்டை விட்டே ஓட்டவேண்டும் என்பதற்காகத் தமது வாழ்வில் பெரும்பகுதியைச் செலவழித்தார் என்பது நாம் யாவரும் நன்கறிவோம். ஏறக்குறைய இத்தகைய கருத்துகளையே மகாதேவர், சங்கரலிங்கத்திடம் பின்வருமாறு எடுத்துக் கூறுகிறார்.

சாதிப் பெயர்கள் தொழிலைச் சார்ந்தது
பண்டைய நாள்முதல் பழக்கமானது
இருப்பதனால் ஒரு சாதகம் இல்லை
இல்லாவிடினும் பாதகமில்லை – எனினும்
ஐயர், செட்டியார், ஆச்சாரியார், பிள்ளை
நாய்க்கர், கவுண்டர், நாயுடு, உடையார்
முதலியார், ராயர் முதலிய பற்பல
பெயர்களை எல்லாம் பேர்த்து விட்டால்
மக்களனைவரும் மனமொத்தவராகக்
குலவுவர் என்பது குருட்டுத் தனம்[1]

என்று கூறும் அவர் இதற்குச் சான்றாக ஐரோப்பியர்கள் அனைவரும் ஒரே நிறம் (வெள்ளை நிறம்) ஒரே மதம் (கிறிஸ்தவ மதம்) இவற்றைக் கொண்டவர்களாயிருந்தும் தமக்குள் சண்டை போட்டுக் கொண்டிருக்கவில்லையா என்று கேட்கிறார். இந்தியாவின் பிரச்சினை சாதிகளல்ல; சாதிகளிடையே உயர்வு, தாழ்வு மனப்பான்மை, தீண்டாமை இவையே எல்லா கலகங்களுக்கும் காரணம் என்கிறார். அது வருமாறு

இந்திய நாட்டின் தொந்தரவெல்லாம்
பிறப்பில் மட்டும் பெரியவனென்று
மனிதனை மனிதன் மட்டமா யெண்ணி
நடத்தையில் உயர்ந்த நல்லவர் தமையும்
தீண்டத் தகாதவர் என்கிற தீமைதான்
கொடியது, கொடியது மிகவும் கொடியது
தீண்டாமை மட்டும் தீரத்தொலைந்தால்
சாதிகளில்லாச் சமுதாயம் அதுதான்
அதனாலல்லவா அண்ணல் காந்தியும்

1. மேலது நூல், ப.177.

**தீண்டாமை ஒழிப்பைத் திட்டமாக்கொண்டு**
**சாதிகள் உள்ளதைச் சட்டை செய்திலர்**

சாதி போனால் வேறுவகையில் வேற்றுமை வரும் என்கிறார்.

**சாதிப் பெயரைத் தள்ளிவிட்டாலும்**
**பழக்க வழக்கப் பாகுபாட்டின்படி**
**இனவேற்றுமைகள் இருந்தே தீரும்**
**இன்றைய கட்சிகள் அநேக சாதிபோல்**
**பிரிந்து நிற்பதைப் பேசுவாரில்லை**
**வேறுள சாதிக்கு விசனப் படுகிறோம்**[2]

எனும் மகாதேவர் கூறியுள்ள கூற்று உண்மை என்பதை நாம் நம்நாட்டில் இன்றைக்கும் காண்கிறோம். தெருப் பெயர்களிலுள்ள சாதிப் பட்டங்களை நீக்கி விடும்படி திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் ஆணையிட்டார். அது நடை முறைக்கு வந்தது. சரவண முதலி தெரு சரவணா தெரு ஆயிற்று. கிருஷ்ணசாஸ்திரி தெரு கிருஷ்ணாதெரு என ஆயிற்று. இதனால் சாதி ஒழிந்து விட்டதா என்றால் ஒழியவில்லை. அதற்குப் பதிலாகத் தெருப் பெயர்களில் சில அசம்பாவிதங்கள் தான் நடைபெற்றுள்ளன. சான்றாகப் பாவாடை நாயக்கர் தெரு என்பது பாவாடைத் தெரு என்று அழைக்கப்பட்டது. அப்பெயரைச் சொல்லவே பெண்கள் கூச்சப்படுகிறார்கள். அதே போலத் திருமணப் பத்திரிகைகளில் அண்ணாமலை உடையார், சுப்ரமணியபிள்ளை, ராமசாமி நாயக்கர், ரங்கசாமி முதலியார், வீரப்பத் தேவர், முத்தையா செட்டியார், முனுசாமி நாடார் என்ற பட்டப்பெயர்களைப் போட்டுக் கொள்வதில் மக்கள் பெருமைப்படுகின்றனர். திருமண விளம்பரங்களில் பார்த்தால் சாதிகளோடு உபசாதிகள் கூட (பிரகசரணம் வசிஷ்டம் போன்று) அந்தந்தச் சாதியிலேயே பெண்ணோ, மாப்பிள்ளையோ கேட்கின்றனர். சாதிப்பட்டங்கள் தங்களுக்குப் பெருமை தருவதாக மக்கள் நினைக்கும் போது அதை ஏன் ஒழிக்க வேண்டும் என மகாதேவர் கேட்பதில் தவறில்லை என்றே தோன்றுகிறது. தீண்டத்தகாதவர் என்று எடுத்துக் காட்டும் பறையர், சக்கிலியர், பள்ளர், மஹார் போன்ற பெயர்களை வேண்டுமானால் விட்டுவிடலாம். ஆனால் அவர்கள்கூடத் திருமண விளம்பரங்களில் தத்தம் சாதியிலேயே பெண்ணையோ, மாப்பிள்ளையையோ கேட்பதுதான் வியப்பாயிருக்கிறது. மற்றும் மகாதேவர் சொல்வது போல் ஒவ்வொரு கட்சியும் ஒரு சாதிபோலவே செயல்படுகிறது. வன்னியர் ஓட்டு அந்நியர்க்கில்லை என்ற கோஷம் போடப்படுகிறது. தேவர்கள் பெரும்பான்மையாக உள்ள தேர்தல் தொகுதியில் தேவர்

---

2. மேலது நூல், ப.178.

சாதியைச் சேர்ந்தவரும், நாடார்கள் பெரும்பான்மையாக வாழும் தொகுதியில் நாடார் சாதியைச் சேர்ந்தவர்களும் வேட்பாளர்களாக நியமிக்கப் படுகிறார்கள். சாதிக்கொரு கட்சி என்ற நிலை வந்து விட்டது. கல்விக் கூடங்களில், அரசியலில், வேலைதரும் நிலையங்களிலெல்லாம் சாதி தலைவிரித்தாடுகிறது. அதனால்தான் சாதிகளில்லாச் சமுதாயத்தை ஏற்படுத்துவது முடியாத காரியம் என மகாதேவர் சொல்கிறார். மற்றபடி சாதிகளிலேயே ஒரு சாதி உயர்ந்தது, மற்றொரு சாதி தாழ்ந்தது. இன்னொரு சாதி தீண்டத் தகாதது என்ற மனோபாவம் மாறினாலே போதும் என்கிறார் அவர். **"சிறப்புஞ் சீலமு மல்லது பிறப்பு நலந்தருமோ பேதையீரே"** என்ற கபிலர் வாக்கும், **"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்"** என்ற வள்ளுவர் வாக்கும் எங்கும் எதிலும் கடைப்பிடிக்கப் படும்போதுதான் சாதிகளால் ஏற்படும் தீமைகள் மாயும். வெறும் சட்டத்தால் மட்டும் சாதிகளை ஒழிக்க இயலாது என்பது திண்ணம்.

## சமத்துவம்

சங்கரலிங்கம் எனும் கதாநாயகன் ஒரு நவீன இளைஞன். பிரஞ்சுப் புரட்சி, ருஷ்யப் புரட்சி, அமெரிக்கச் சுதந்திரப் போர் இவற்றையெல்லாம் படித்தவன். அத்தகைய புரட்சிகளின் அடிப்படைக் கொள்கைகளான சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் (Liberty, Equality and Fraternity) போன்றவற்றில் ஆழ்ந்த நம்பிக்கையுள்ளவன். எனவே நமது நாட்டிலும் சமத்துவம் ஏற்பட வேண்டும் என்று தனது கருத்தை மகாதேவரிடம் கூறுகிறான். அதற்கு மறுமொழியாக மகாதேவர் **சமத்துவம் என்பது இயற்கையில் இல்லாத ஒன்று.** தனி மனிதர்கள் தமது அறிவைப் பயன்படுத்தி முன்னேறுகிறார்கள். இறைவன் எல்லாரிடம் உறைகிறான். எனவே பிறரையும் தன்னைப் போலவே நேசித்து நடத்த வேண்டும் என்ற ஜீவகாருண்யத்தைக் கடைப்பிடிக்கலாம். "தன்னுயிர் போல் மன்னுயிர் பார்" என்பது தமிழ்ப் பழமொழி. ஒரு சில தனிமனிதர்கள் இதைக் கடைப்பிடிக்கலாம். ஆனால் சமுதாய அளவில் இக்கொள்கையைக் கடைப்பிடிப்பது முடியாத காரியம். சாதியற்ற சமுதாயம் போலவே சமத்துவச் சமுதாயமும் நடைமுறைக்கேற்றதல்ல எனப் பகர்கின்றார். சமத்துவம் என்றால் என்ன என்பதைப் பற்றி அவர் கூறும்போது

**சமரசம் என்று சான்றோர் சொல்வது**
**எல்லா மனிதரும் எல்லா விதத்தும்**
**சமானம் என்றே சாதிப்பதல்ல**

என்றும்

செல்வத்தாலோ கல்வியினாலோ
திறமையினாலோ, திண்மையினாலோ
உயர்ந்துள்ள ஒருவன் தாழ்ந்துள்ள ஒருவனைச்
சமமாய் எண்ணுதல் சன்மார்க்கமாகும்
சான்றோர் சொல்லும் சமத்துவம் இதுதான்
அன்பும் அருளும் அதனால் பெருகும்
ஜீவகாருண்யம் சிறந்து விளங்கும்
ஏற்றத்தாழ்வுகள் எதுவானாலும்
சமுதாயத்தில் சண்டை வராது[3]

என்கிறார். நடைமுறையில் பார்க்கும்போது

மற்றப்படிக்கிம் மாநில வாழ்வில்
சமத்துவம் என்பது சாத்தியமல்ல
ஏற்றத் தாழ்வுகள் இருந்தே தீரும்
வேற்றுமைதானே உலகின் விசித்திரம்
அவற்றை மாற்றிட யாரால் முடியும்?
எல்லா மனிதரும் எல்லாவற்றிலும்
சமானம் என்பது சரியான தல்ல
எந்த மனிதனும் எதனையும் செய்திட
முடியும் என்பதும் முடியாத காரியம்[4]

என்ற கசப்பான உண்மையை அவர் வெளிப்படுத்துகிறார். வேற்றுமைதானே உலகின் விசித்திரம் (Variety is the spice of life) என்று கூறிய மகாதேவர் அவ்வேற்றுமையை இயற்கையின் நியதி என்பதைப் புரிந்து கொண்டு அவ்வேற்றுமைக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் பல ஒற்றுமைகளைக் கண்டுபிடித்து அதன்படி ஒழுகினால் போதும் என்கிறார்

வேற்றுமைக்குள் விளங்குவதாகிய
ஒற்றுமையதனை உணர்வோமானால்
ஏதோ ஒரு விசை எப்படியாகவோ
ஒவ்வொருவரையும் வெவ்வேறு விதமாய்
உண்டாக்கியுள்ள உண்மையறிந்து
கருணை காட்டக் கற்றுக் கொண்டால்
ஏழைக்குச் செல்வன் இன்பம் செய்வான்
செல்வனுக் கேழையும் துன்பம் செய்யான்
ஆன்ம சமத்துவ அறிவில்லாமல்
வேறு சமத்துவம் வெறும் வாய்ப் பேச்சே

---

3. மேலது நூல், ப.181. 4. மேலது நூல், ப.183.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

*காந்தி மகாத்மா காட்டும் நெறியே*
*சமரச வாழ்வின் சரியான போதம்*[5]

என்று முடிக்கிறார்.

வள்ளலார் போன்ற அருட்செல்வர்கள் ஆன்மநேய ஒருமைப் பாட்டைப் பற்றித்தான் பேசுகிறார்கள். நாம் யாவரும் வெறும் சரீரங்கள் அல்ல என்றும் அழியாத ஆன்மாக்கள் இறைவனின் உறைவிடங்கள் என்றும் கருதுவதால் மட்டுமே சமரசம் பிறக்கும். அதன் சார்பாக ஜீவகாருண்யம் பெருகும். இவ்வாறு ஆன்ம சமத்துவமே சாத்தியமானது. புற உலகில் சமத்துவத்தைக் கடைப்பிடிப்பதோ அதை சமுதாயத்தில் ஏற்படுத்த முயற்சிப்பதோ சாத்தியமானதல்ல என்பதே மகாதேவர் கருத்து. இக்கருத்தை மேல்நாட்டு அறிஞர்களும் ஒப்புக் கொள்கின்றனர். ஜனநாயகம் (Democracy) என்ற சித்தாந்தத்தைப்பற்றி பிரைஸ் (Bryce) என்ற ஆங்கில அறிஞர் இரண்டு பெருநூல்களை எழுதியுள்ளார். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் போன்ற அடிப்படை உரிமைகளையும், அவற்றின் ஜனநாயகத் தத்துவங்களையும் அவர் அலசி ஆராய்ந்து விளக்கியுள்ளார். அதில் அவர் சமத்துவம் பற்றிப் பேசும்போது அது இயற்கைக்கே விரோதமானது என்று முதலில் கூறுகிறார். முகத்துக்கு முகம் வேறுபடுவதையும், மனிதனுக்கு மனிதன் குணங்களில் வித்தியாசப்படுவதையும், பறவைகள் மிருகங்கள் கூட ஒன்றுபோல் ஒன்று இல்லாத்தையும் எடுத்துக் காட்டுகிறார். வேற்றுமையே உலகின் இயற்கை. மனிதர்களிடம் சமத்துவம் ஏற்படுத்துவது இயலாத காரியம் என்றும் அவர் கூறுகிறார். அதற்கு அவர் காட்டும் உதாரணம், மிகச் சிறப்பானது. ஆண்டின் இறுதியில் டிசம்பர் மாதம் 31-ஆம் தேதியன்று இரவு 12 மணிக்கு இவ்வுலகிலுள்ள சொத்துகளை எல்லாம், எல்லாருக்கும் சமமாகப் பிரித்துக் கொடுத்து விட்டு அடுத்த நாள் காலையில் போய்ப் பார்த்தால் ஒரு சிலர் ஏழைகளாகவும், மற்றும் சிலர் பணக்காரர்களாகவும் இருப்பதைப் பார்க்கலாம் என்கிறார் அவர். ஏனெனில் சொத்தைப் பெற்ற சிலர் உடனே அதை விற்றுக் குதிரைப்பந்தயம் போன்ற சூதாட்டங்களில் கலந்து கொண்டு எல்லாம் ஒரேநாளில் இழந்து விடுவர். ஒருசிலர் பங்கு மார்க்கெட்டில் கலந்துகொண்டோ, தங்கம் வைரம் போன்ற விலையுயர்ந்த பொருள்களை வாங்கி வைத்தோ செல்வராயிருக்கலாம். எனவே பொருளாதாரச் சமத்துவத்தை மக்களிடையே ஏற்படுத்துவது

---

5. மேலது நூல், ப.185.

கடினம். அது போன்றதே சமுதாயச் சமத்துவமும் என்று கூறுகிறார். எனவே சமத்துவம் என்பது நாட்டின் செல்வத்தை எல்லாருக்கும் சமமாகப் பிரித்துக் கொடுப்பதல்ல. அவரவர் தேவைக்கும் தகுதிக்கும் தகுந்தபடி விகிதாச்சாரமாய்ப் பிரித்துக் கொடுப்பதே சமத்துவம் என்கிறார். Equality is proportionality என்ற அவர் கட்டுரை எல்லாருக்கும் பொதுவான தேவைகளில் மட்டும் சமத்துவம் கடைப்பிடிக்கப்படலாம் என்கிறார். வேறுபட்ட சிந்தனைகளைக் கொண்ட மாந்தர்களிடையே கட்டாயமாகச் சமத்துவத்தைப் புகுத்துவதால் நன்மைக்குப் பதில் தீமையே விளையும் என்கிறார் அவர். ருஷ்யா, சீனா போன்ற நாடுகளில் சமதர்மக் கொள்கை பலவந்தமாகப் புகுத்தப்பட்டுக் கடைசியில் அது தோல்வியடைந்துள்ளதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். இந்த உண்மையைத்தான் மகாதேவர் காந்தியம் என்ற பெயரில் கூறியுள்ளார்.

## முடியரசும் குடியரசும்

காந்திய சல்லாபத்தில் இறுதியாக வருவது அரசியல் பற்றியதாகும். ஒரு நாட்டுக்கு நன்மை தருவது முடியரசே (Monarchy) என்பது சங்கரலிங்கத்தின் நம்பிக்கை. குடியரசு (Republic or Proper Government) நம் நாட்டுக்குத் தகுதியானதல்ல. மக்கள் அதற்கு இன்னும் தகுதிபெறவில்லை என அவன் வாதிக்கிறான். முடியரசோ குடியரசோ மக்களுக்கு எது நன்மை செய்கிறதோ அதுவே நல்லரசு என மகாதேவர் மறுமொழி பகர்கின்றார். நல்ல தாராள சிந்தையுடைய அரசனாக இருந்தால் முடியரசு நல்லது எனக் கருதலாம். தன்னலம் கருதாத் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால் குடியரசும் நல்லதே என்கிறார்.

> நல்லரசாட்சி நாட்டில் நடைபெறத்
> தகுதிகள் அமைந்த தலைவன் வேண்டும்
> தலைவனுக் கமைகிற தகுதியைப் பொறுத்தே
> நல்லதோ கெட்டதோ அரசும் நடக்கும்
> மன்னவன் எப்படி மன்னுயிர் அப்படி
> என்கிற உண்மை எப்போதும் ஒன்றே[6]

மக்கள் நலன் கருதும் முடியரசு வல்லரசாயிருப்பினும் (Benevolent despotism or monarchy) அது நன்றே. (செங்கோலாட்சி) மக்களை வதைக்கும் மன்னன் வந்து விட்டால் (tyranny or dictatorship) ஆகிவிடும். கொடுங்கோல் மன்னன் ஆட்சிபுரியும்

---

6. மேலது நூல், ப.179.

நாட்டைவிடப் புலி சிங்கம் வாழும் காடே நன்று என்பது சங்கநூல்களின் வற்புறுத்தலாகும். குடியரசிலும் நல்ல தலைவன் தேர்ந்தெடுக்கப்பட்டால் முடியரசைவிட அதுவே நல்லது என்கிறார் மகாதேவர்.

**அன்பும் அறிவும் ஆற்றலும் அமைந்து**
**தன்னலம் கருதாத் தலைவனைத் தெரிந்து**
**பொறுக்கிக் கொள்ளும் பொறுப்புகள் மட்டும்**
**குடிகளுக் கிருந்தால் குடியரசைப்போல்**
**விரும்பத் தக்கது வெறொன்றுமில்லை**[7]

என்று தனது விருப்பத்தை வெளியிடுகிறார். இவ்வாறு இப்புதினத்தில் கவிஞர் காந்தியக் கொள்கைகளை மாமனார் மருமகனிடையே நடைபெறும் உரையாடல் மூலம் மிக எளிமையாகவும், தெளிவாகவும் எடுத்துக்காட்டி விளக்கியிருப்பது அறிந்து இன்புறற்பாற்று.

இக்கதையில் இந்திய விடுதலைப் போராட்டத்தின் சாயையைப் பெரிதும் காண்கிறோம். தேசியம் இதில் ஒளிவிட்டு மிளிர்கிறது. ஆயுத பலத்தால்தான் நாடு விடுதலை பெறமுடியும் என்ற சுபாஷ் சந்திர போஸின் கொள்கையைக் கதாநாயகனான சங்கரலிங்கம் மேற்கொண்டு செயல் படுகிறான். முதலில் ஆங்கிலேயரின் சேனையில் சேர்ந்து ஓரளவு போர்ப்பயிற்சியைப் பெற்றுக் கொண்டபின் பிரிட்டிஷ் படையிலிருந்து தப்பி ஓடி சுபாஷ் போஸின் இந்தியத் தேசியப் படை (Indian National Army) யில் சேர்ந்து பணியாற்றுகிறான். அவ்வமயம் ஆங்கிலேயர் அவனை எப்படியோ கண்டுபிடித்துக் கைது செய்து, விசாரித்தபின் அவனுக்கு மரண தண்டனை விதிக்கின்றனர். ஆனால் பிரிட்டிஷ் இராணுவத்தில் அவனுடன் பணியாற்றி வந்த ஜெயபால் எனும் அவனது நண்பனின் தந்திர சாதனைகளால் அவன் பிரிட்டிஷ் சிறையிலிருந்து தப்பி ஓடி வந்து விடுகிறான். ஆனால் தலை மறைவாக வாழ்ந்து வருகிறான். மாறுவேடத்தோடு தனது ஊருக்குப் போகிறான். ஆனால் தான் யார் என்பதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் தனது குடும்பத்துக்கும் மனைவிக்கும் ஏற்படுகிற துன்பங்களைத் துடைக்கிறான். இறுதியில் காந்திஜியின் அஹிம்சை முறையே வெல்கிறது. சுபாசின் தேசியப்படை தோற்று விடுகிறது. அப்படைவீரர்கள் பிரிட்டிஷாரால் சிறையிலடைக்கப்படுகின்றனர். காந்திஜியின்

---

7. மேலது நூல், ப.180.

தலையீட்டால் அவ்வீரர்களுக்கும் பிரிட்டிஷ் அரசாங்கம் பொது மன்னிப்பு வழங்கி விடுகிறது. அப்போது தான் சங்கரன் தன்னை வெளியில் யாரென்று காட்டிக் கொள்கிறான். இந்தியத் தேசியப் படையின் வீரசாகசங்கள், சுபாஷ்போசின் வீரம் செறிந்த அருங்குணங்கள், "வெள்ளையனே வெளியேறு" என்ற காந்திஜியின் ஆணையை மேற்கொண்டு சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்ட இளைஞர்களின் தியாகம், அதன்பின் இந்தியா விடுதலை பெற்றது போன்ற இந்திய விடுதலைப் போரின் இறுதிக் கட்ட வரலாறு இப்புதினத்தில் வெள்ளிடைமலை போல் தெள்ளிதின் விளக்கப்பட்டுள்ளது. நாட்டின் சுதந்திரப் போராட்டம், தேசியம், காந்தியம் இவற்றின் மேன்மையை மையமாகக் கொண்டு வரையப் பெற்ற இப்புதினம் தேச பக்தர்களுக்கும், காந்தி பக்தர்களுக்கும் கிடைக்கப் பெற்ற ஓர் அரிய வரப்பிரசாதம் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை.

# மலைக் கள்ளன்

"மலைக்கள்ளன்" என்ற புதினம் 1932-ஆம் ஆண்டில் கவிஞர் சிறையிலிருந்த போது, அவருடன் காவலில் வைக்கப்பட்டிருந்த புலுசு சாம்பமூர்த்தி (முன்னாள் சட்டப்பேரவைத் தலைவர்) என்பவரின் தூண்டுதலின் பேரில் எழுதப்பட்டது. புதினம் எழுதுவதில் கவிஞருக்கு இதுவே முதல் முயற்சியாகும். இம்முதல் முயற்சியே அவருக்கு முற்றிலும் வெற்றிகரமாய் அமைந்தது. மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்ற இக்கதை 1951-இல் ஸ்ரீராமுலு நாயுடு என்பவரால் திரைப்படமாக எடுக்கப்பட்டது. மறைந்த முன்னாள் முதல்வர் மாண்புமிகு எம்.ஜி.ஆர். அவர்களே இக்கதையில் வரும் மலைக்கள்ளன் என்னும் முக்கியக் கதாநாயகனாக நடித்தார். கவிஞரின் இரண்டாவது மகன் திரு.பாலு அவர்கள் துணை இயக்குநராகப் பணியாற்றிய இப்படம் நூறு நாட்களுக்கு மேல் வெற்றிகரமாக ஓடியது. இக்கதை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், சிங்களம், இந்தி ஆகிய ஆறு மொழிகளில் திரைப்படமாக்கப்பட்டது. முடிவில் 1954-ஆம் ஆண்டில் இப்படம் இந்தியக் குடியரசுத் தலைவர் பதக்கத்தையும் பெற்றுப் பெருமை அடைந்தது.

இக்கதை, இக்காலத்தே மர்மநாவல்கள் எனப் பேசப்படும் புதினவகையைச் சேர்ந்தது. இதில் வரும் மலைக்கள்ளன் யார் என்பது புரியாமலேயே இறுதிவரை கவிஞர் கதையை நடத்திச் செல்கிறார். இதில் விவரிக்கப்படும் நிகழ்ச்சிகள், படிப்போர் உள்ளத்தில் ஒருவகையான திகிலையும் அச்சத்தையும் ஊட்ட வல்லன. மயிர்க் கூச்செறியக் கூடிய துணிகரச் சாகசங்கள் பல இக்கதையில் இடம் பெற்றுள்ளன. கதையின் தொடக்கத்தில் விவரிக்கப்படும் "மலைக்கள்ளன்" ஒரு பெரும் கொள்ளைக்காரன். செல்வந்தர்கள் வீடுகளைக் கொள்ளையடித்து அதை ஏழை எளிய மக்களுக்குத் தானம் செய்பவன். பிரிட்டனில் வாழ்ந்ததாகக் கூறப்படும் "ராபின்ஹுட்" (Robinhood) என்பவனோடு அவனை ஒப்பிடலாம். இருவரும் பணக்காரர்களின் எதிரிகள். ஆனால் ஏழைகளின் நண்பர்கள். இக்காலத்து "நக்சலைட்டுகள்" (Naxalites) போன்ற

தீவிரவாத (Extremists) இனத்தைச் சேர்ந்தவர்கள். மலைக்கள்ளனைப் பிடிக்க அரசாங்கம் எவ்வளவோ முயற்சித்தும் முடியவில்லை. இவ்வகையில் அவனை இக்காலத்து வீரப்பனோடு ஒப்பிடலாம். மலைக் குகைகளில் ஒளிந்து கொண்டு திரிந்ததால் அவனை மலைக்கள்ளன் என்று யாவரும் அழைத்தனர். விஜயபுரி என்ற சிற்றூரில் தான் அவன் தன் கைவரிசைகளை அடிக்கடி காட்டி வந்தான். அவ்வூரில் செல்வம் மிக்க நிலக்கிழார்கள் பலர் இருந்தனர். அவர்களுள் சிலர் ஏழைகளை ஏமாற்றியும் வருத்தியும் பொருள் சேர்த்தவர்கள். அப்படிப்பட்ட கொடுமைக்காரர்களுக்கு மலைக்கள்ளன் ஒரு சிம்ம சொப்பனமாகத் திகழ்ந்தான். அநியாய வழியில் கொள்ளையடிக்கப்பட்ட அவர்களது பொருள்களையே மலைக்கள்ளன் கொள்ளையடித்தான். அப்படிப்பட்ட பலரை அவன் கடத்திச் சென்று மலைக்காடுகளில் சிறை வைத்தான். அவர்களால் கற்பழிக்கப்பட்ட பெண்களையும் துன்பத்தில் ஆழ்த்தப்பட்ட பெண்களையும் அவன் சிறைப்பிடித்துச் செல்வதும் உண்டு. எனவே மலைக்கள்ளன் என்று சொல்வதற்கே மக்கள் பயந்தார்கள். அவன் பெயரைச் சொன்னால் அழுத குழந்தையும் வாய் மூடிக் கொள்ளுமாம். அந்த அளவுக்கு அவன் பயங்கரவாதியாய்த் திகழ்ந்தான்.

வீரராஜன் என்பவன்தான் இக்கதையில் வரும் போக்கிரி (Villain). வெளிப்பார்வைக்கு அவன் ஒரு கண்ணியம் மிக்க கனவானாகவும், கொடைவள்ளலாகவும் காட்சியளித்தான். ஆனால் உள்ளுக்குள் அவன் மகா அயோக்கியன். அவனும் குட்டிப்பட்டி ஜமீன்தார் என்ற ஆஷாட பூதியும் சேர்ந்து கொண்டுதான் காத்தவராயன் என்ற உண்மையான கொள்ளைக்காரனைப் பயன்படுத்தித் திருட்டு, கொலை, கொள்ளை, இளம்பெண்களைக் கடத்திக் கற்பழித்தல் போன்ற கொடூரங்களைச் செய்து ஏராளமாகக் பொருள் சேர்த்தவர்கள். அவர்களது வீடுகளைத்தான் மலைக்கள்ளன் அடிக்கடி கொள்ளையடித்து வந்தான். வீரராஜன் ஒரு ஸ்ரீலோலனும்கூட ஊரில் இருக்கின்ற எந்த அழகிய பெண்ணும் அவனது காமக் கண்களில் இருந்து தப்பமுடியாது. விஜயபுரியில் வாழ்ந்த கண்ணியம் மிக்க கனவான்களுள் ஒருவர் சொக்கேசர். அவருடைய மகள் பூங்கோதை அழகே வடிவானவள். அன்பும் அறிவும் செறிந்தவள். அவளை எப்படியாவது அடைந்து விட வேண்டும் என்பது வீரராஜனின் ஆசை. முதலில் அவன் முறைப்படி சென்று சொக்கேசரைப் பெண் கேட்டான். சொக்கேசர் தனது மகளது விருப்பப்படியே நடந்து கொள்ள முடியும் எனக் கூறிப்

பூங்கோதையை அழைத்து வீரராஜனை மணந்து கொள்ள விருப்பமா எனக் கேட்கிறார். இல்லை என்று பூங்கோதை திட்டவட்டமாய்க் கூறியதோடு, வீரராஜனின் காமக்களியாட்டங்களைக் கூறிக் கேலியாகவும் இகழ்ச்சியாகவும் பலவாறாகப் பேசி அவனைத் தலைகுனிய வைத்து அனுப்பிவிட்டாள். வீரராஜன் ஒருமுறை பூங்கோதையைக் கடத்திச் சென்று கற்பழிக்க முயன்றான். அப்போது மலைக்கள்ளன் திடீரெனத் தோன்றிப் பூங்கோதையை வீரராஜனின் அடியாட்களிடமிருந்து மீட்டுத் தனது மலைக்குகைக்கு அழைத்துச் சென்று விடுகிறான். சில நாள் கழித்துத் திரும்பவும் அவளை வீட்டிலேயே கொண்டு வந்து விட்டு விடுகிறான். மறுபடியும் வீரராஜன் ஜானகி எனும் தனது வைப்பாட்டி மூலம் வஞ்சகமாகப் பூங்கோதையைத் தனது மாளிகைக்கு வரவழைத்துக் கற்பழிக்க முயல்கிறான். அப்போதும் மலைக்கள்ளன் வந்து பூங்கோதையைக் காப்பாற்றுகிறான். மீண்டும் வீரராஜன் பூங்கோதையின் தந்தை சொக்கேசரையே கடத்திச் சென்று பூங்கோதை தன்னை மணந்து கொள்வதில் தனக்கு ஒன்றும் தடையில்லை என ஒரு கடிதம் எழுதச்செய்து அதைப் பூங்கோதைக்கு அனுப்பி வைத்தான். ஆனால் திடீரென மலைக்கள்ளன் அங்கும் தோன்றிச் சொக்கேசரை விடுவித்து அவரது கடிதத்தையும் பிடுங்கி எரித்து விடுகிறான். இவ்வாறு மும்முறை தன் மகளைக் காப்பாற்றிய மலைக்கள்ளனைச் சொக்கேசரும் பூங்கோதையும் வாயாரப் புகழ்ந்து விட்டுத் தங்களுடைய நன்றியைத். தெரிவிக்க ஒரு விருந்து ஏற்பாடு செய்யப் போவதாகவும் அதற்கு அவன் கண்டிப்பாக வரவேண்டும் என்றும் விநயமாக வேண்டிக் கொண்டனர். அதை ஒப்புக் கொண்ட மலைக்கள்ளன், தனது நெருங்கிய நண்பரான முஸ்லீம் கனவான் ஒருவர் விருந்துக்குச் சற்றுமுன் வருவாரென்றும் அவரது வேண்டுகோளை ஏற்றுக் கொண்டால் தான் வருவதாகவும் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். முஸ்லீம் கனவான் வருவதில் தங்களுக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை எனச் சொக்கேசரும் பூங்கோதையும் ஒப்புக் கொண்டனர். ஏனெனில் சிங்கப்பூரிலிருந்து வந்ததாகக் கூறிக்கொண்டு அவ்வூரில் நெடுநாளாய் வாழ்ந்து வந்தவர் அக்கனவான். ஏழை எளியவர்களின் வறுமையைத் தீர்க்க வாரி வாரிப் பொருளை வழங்கி வந்த வள்ளல் அவர். ஊரார் தம் வழக்குகளைத் தீர்க்குமாறு அவரிடமே செல்வர். காவல்துறையின் நபராகவும் அவர் நடந்து கொண்டார். மலைக்கள்ளன் தனது நண்பனென்றும், அவனைக் கண்டுபிடிக்கவும், அவன் கொள்ளையடித்த பொருள்களை எல்லாம் மீட்டுத் தருவதாகவும், அவர் வாக்குறுதி

கொடுத்திருந்தார். அவர் உதவியுடன் வீரராஜனையும், குட்டிப்பட்டி ஜமீன்தாரையும் காவல் துறையினர் கைது செய்து சிறையிலடைத்தனர். சொக்கேசர் ஏற்பாடு செய்திருந்த விருந்துக்குப் போய் மறைந்திருந்து மலைக்கள்ளனையும் கைது செய்து விடலாம் என்று எண்ணி சொக்கேசர் விருந்துக்குச் சாதாரண உடையில் சென்று காத்திருந்தனர். விருந்து நடைபெறுவதற்குச் சற்றுமுன், குறிப்பிட்ட முஸ்லீம் கனவான் வந்தார். சொக்கேசர் அவரை ஓடோடிப் போய் வரவேற்று மலைக்கள்ளன் எப்போது வருவான் எனக் கேட்டனர். மலைக்கள்ளன் வருவான். ஆனால் அவன் இட்டுள்ள கட்டளையை ஏற்றுக் கொண்டால் தான் அவனை வரவழைக்க முடியும் என முஸ்லீம் கனவான் நிபந்தனை போட்டார். அதைக் கேட்டு சொக்கேசர் திடுக்கிட்டுத் திகைப்படைந்தார். ஒரு கொள்ளைக்காரனுக்குத் தனது மகளை மனைவியாக்குவது என்பதை அவரால் மனத்தால் கூட எண்ணிப் பார்க்க முடியவில்லை. அதன்பின் அம்முஸ்லீம் கனவான் மலைக்கள்ளனது வரலாற்றைச் சொல்லத் தொடங்கினார். ஏதோ வீட்டில் நடைபெற்ற சிறிய சிறிய சில நிகழ்ச்சிகளால் மனமுடைந்து வீட்டைவிட்டு ஓடிவிட்ட சொக்கேசரின் தங்கையின் மகனான குமாரவீரன் என்பவனே மலைக்கள்ளன் என்றும், வீட்டை விட்டுக் காட்டுக்குள் சென்ற குமாரவீரனை அங்கு வாழ்ந்து கொண்டிருந்த கொள்ளையன் தலைவன் ஒருவன் தத்தெடுத்துக் கொண்டு வீரய்யன் என்று பெயரிட்டு வைத்திருந்ததாகவும், கொள்ளை, கொலைகளில் வீரய்யனும் அவனோடு கலந்து கொண்டதால் மலைக்கள்ளன் என்று மக்கள் அவனை அழைத்ததாகவும், உண்மையான மலைக்கள்ளன் இறந்து போய் விட்டதாகவும் அதன்பின் அவனது வாரிசாக வீரய்யன் விளங்கி வருவதாகவும் கூறினார். அதைக் கேட்ட சொக்கேசருக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. முஸ்லீம் கனவானை அவர் அப்படியே கட்டிக் கொண்டார். அதை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த பூங்கோதைக்குத் தனது மாமன் மகன் மீது கட்டுக்கடங்காக் காதல் உண்டானது. உடனே சொக்கேசரும் பூங்கோதையும் விருந்து நடைபெறும் பந்தலுக்குச் சென்று வீரய்யன் வருகைக்காகக் காத்திருந்தனர். ஆனால் வீரய்யன் எனும் மலைக்கள்ளன் வரவில்லை. முஸ்லீம் கனவானிடம் கொஞ்சநேரம் அளவளாவிய பின் அவர் பூங்கோதையைப் பார்த்து வருவதாகச் சொல்லி விட்டு அவளது அறைக்குச் சென்றார். அங்கு சென்ற உடன் தன்னை மணந்துகொள்ளுமாறு பூங்கோதையை வற்புறுத்தினார். தாடியும் மீசையுமாயிருந்த ஒரு முஸ்லீம் தன்னை மணக்க

விரும்பியதைக் கேட்டு வியப்புற்ற பூங்கோதை என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் திகைத்து நின்றாள். அச்சமயம் அம் முஸ்லீம் கனவான் தனது தாடி மீசையைக் களைந்துவிட்டுத் தானே மலைக்கள்ளன் என்றும் பூங்கோதையின் மாமன் மகன் குமாரவீரன் என்பதையும் எடுத்துச் சொன்னான். அதைக் கேட்ட பூங்கோதை புளகாங்கிதமடைந்து காதல் உணர்ச்சிபொங்க அவனை ஏறிட்டுப் பார்த்துச் சிரித்தாள். உடனே குமாரவீரனும் காதலுணர்ச்சி பொங்க அவளை அப்படியே வாரி எடுத்து முத்தமழை பொழிந்தான். அதன் பின் தாடி மீசையோடு நின்ற அவனைப் பூங்கோதையும் முத்தமிட்டாள். இதைத் தற்செயலாக அங்கு வந்த பூங்கோதையின் அத்தை பார்த்துவிட்டாள். பின்னர் இந்த நிகழ்ச்சியைப் பற்றிச் சொக்கேசரிடம் போய், நடந்ததை நடந்தது போலவே கூறிவிட்டாள். இதைக் கேட்டு அதிர்ச்சி அடைந்த சொக்கேசர் அம்முஸ்லீம் கனவானைப் பலரறிய அவமானப்படுத்த வேண்டுமென்று திட்டமிட்டுக் கொண்டிருந்தார். அப்போது அக்கனவான் அவர் எதிரில் தானே வந்து தனது வேடத்தைக் களைந்து விட்டுத் தானே அவரது தங்கையின் மகன் என்பதை விளக்கினார். விருந்துக்கு வந்த அனைவருக்கும் இச்செய்தி பரவியது. யாவரும் உள்ளம் பூரித்தனர். அதன்பின் குமாரவீரன் மீண்டும் முஸ்லீம் வேடம் தரித்துக் கொண்டு, மறைந்திருந்த காவலரிடம் போய் மலைக்கள்ளன் கொள்ளைடித்த பொருள்களை எல்லாம் மீட்டுத் தருவதாகக் கூட்டிச் சென்று தன்வீட்டில் பத்திரமாய் வைக்கப்பட்டிருந்த அப்பொருள்களை எல்லாம் ஒப்படைத்ததோடு அவனால் கடத்திக் கொலை செய்யப்பட்டு விட்டதாகக் கருதப்பட்ட தீயவர்களையும் அவர்களிடம் உயிரோடு ஒப்படைத்தான். அதன்பின் அவன் சொக்கேசர் வீட்டுக்குத் திரும்பி வந்து தனது முஸ்லீம் வேடத்தைக் களைந்துவிட்டுக் குமாரவீரன் என்ற வீரய்யனாக நின்றான். அதன்பின் முறைப்படி பூங்கோதைக்கும் அவளது மாமன்மகள் குமாரவீரனுக்கும் திருமணம் இனிதே நடைபெற்றது. உண்மையறிந்த பொதுமக்களும் காவல்துறையினரும் மலைக்கள்ளன் என்ற மாயமனிதனைப் பற்றிய அச்சம் நீங்கப் பெற்று அமைதியும் மகிழ்ச்சியும் அடைந்தனர்.

திருமணம் முடிந்து சில நாட்களுக்குப்பின் பூங்கோதை குமாரவீரனிடம், பல நல்ல குணங்களுடைய அவர் ஏன் கொலை கொள்ளை போன்ற தீவினைகளில் ஈடுபட்டிருந்தார்? உண்மையிலேயே அவர் ஒரு கொலை கொள்ளைக்காரன் தானா என வினவினாள். அப்போது தான் அவன் தான் உண்மையில் கள்ளனும் அல்ல கொலையாளியும் அல்ல என்றும் அஹிம்சாவாதி என்பதையும் எடுத்துக் கூறினான். வள்ளுவரின் திருக்குறளில் தனக்கு

மிகவும் ஈடுபாடு எப்போதும் உண்டென்றும், அதில் கூறப்பட்டுள்ள குறிக்கோள்களையே தான் கடைப்பிடித்து வருவதாகவும் கூறினான். ஊராருக்குத் தீங்கு விளைவித்த கொடிய ஈவிரக்கமற்ற கனவான்கள் வீடுகளை மட்டுமே தான் கொள்ளையடித்ததாகவும், அவற்றை எல்லாம் காவலர்களிடம் ஒப்படைத்து, அப்பொருள்களுக்குச் சொந்தமானவர்களிடம் சேர்த்து விடும்படி ஏற்பாடு செய்து விட்டதாகவும், தான் கைது செய்ததெல்லாம் ஊருக்கு ஊறு விளைவித்த கொடியவர்களை மட்டுமே என்றும், அவர்களில் ஒருவரையும் தான் கொலை செய்ததில்லை என்றும் வெட்ட வேண்டியவர்களையும் தான் கட்டித்தான் வைத்திருந்ததாகவும் அவர்களையும் சிறையிலிருந்து விடுவித்துவிடுமாறு காவலர்களைக் கேட்டுக் கொண்டுள்ளதாயும் கூறினார். மலைக்கள்ளன் உண்மையில் கொள்ளைக்காரனல்ல என அறிந்த பூங்கோதை மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தாள். தனது உளங்கவர்ந்த கள்வனாக அவனை ஏற்றுத்தழுவிக் கொண்டாள். குமாரவீரன் பூங்கோதையிடம் கூறிய தனது குறிக்கோளைத் திருக்குறளிலிருந்து எடுத்துக் கூறுகிறான்.[1]

**நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் கொன்றாகும்**
**ஆக்கம் கடை சான்றோர்க்கு**

என்பதே அக்குறளாகும். அதாவது ஒருவன் அடைய விரும்பும் குறிக்கோள் மிக உயர்ந்ததாகவும், பலருக்கும் நன்மை விளைவிப்பதாகவும் இருந்தால் கூட, மக்களைக் கொல்வதால் மூலமே அதை அடைய வேண்டுமென்றால், அத்தகைய ஆக்கம் சான்றோர்க்கு உடன்பாடானதல்ல என்பதே அதன் கருத்துரை. பிறரைக் கொல்வதால் வரும் ஆக்கம் பெரிதெனினும் அவ்வாக்கம் விரும்பத்தக்கதெல்லாவற்றிலும் கடை என்பது வள்ளுவர் கருத்து. காந்தியடிகளும் இதே கருத்தைத்தான் கொண்டிருந்தார். போர் செய்து ஏராளமான மக்களைக் கொலை செய்தபின் பெறுகிற சுதந்திரத்தை அவர் விரும்பவில்லை. தானும் தனது தொண்டர்களும் எதிரியால் கொலை செய்யப்பட்டாலும் அதைச் சகித்துக்கொண்டு, மேலும் சாத்வீகமாகப் போராடியே சுதந்திரம் பெறவேண்டுமென்பதே அவரது குறிக்கோள். அக்குறிக்கோளை அவர் எண்ணியது எண்ணியபடி எய்தினார் என்பதை நாம் அனைவரும் அறிவோம்.

**தன்னுயிர் நீப்பினும் செய்யற்க பிறி**
**தின்னுயிர் நீக்கும் வினை**

---

1. நாமக்கல் கவிஞர், மலைக்கள்ளன், ப.384, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 108, 2001.

என்ற குறள் காந்திஜிக்குப் பெரிதும் பொருத்தமானது. குறிக்கோள் உயர்ந்ததாய் இருந்தால் அதை அடையப் பயன்படுத்தும் மார்க்கம் எதுவானாலும் அதுவும் உயர்ந்ததே என்ற பொது உடைமைக் கொள்கையைக் (The end justifies the means communist's policy) காந்திஜி எப்போதுமே ஒப்புக் கொண்டதில்லை. குறிக்கோளும் அதை அடைய எடுக்கப்படும் முயற்சிகளும் உயர்ந்ததாகவும், தூய்மையானதாகவும் இருக்க வேண்டுமென்பதே அவரது கருத்தாகும். இதையே கவிஞர்

> **எத்துணை உயர்ந்த நோக்கம் எனினும்**
> **கொடுமை செய்தொரு நன்மை கொள்வது**
> **நல்லவர் எவரும் நயந்திட மாட்டார்**
> **உலகம் போற்றும் உத்தமன் காந்தி**
> **ஓயாது சொல்லும் உண்மை இதுவே**[2]

இந்த உண்மையையே குமாரவீரன் திருக்குறள் மூலமாகத் தெரிவித்தான். இதைக்கேட்ட பூங்கோதையின் மனதில் இருந்த சிறு சந்தேகமும் அகன்றது. அன்று முதல் அவள் குமாரவீரனை முழு மனதுடன் நேசிக்கத் தொடங்கினாள். மனமொத்த காதலர்களாய், உயிரும் உடலும் போல் அவர்களிருவரும் இல்லறம் நடத்தலாயினர்.

# மாமன் மகள்

"மாமன் மகள்" என்ற இந்நூல் நாமக்கல் கவிஞர் எழுதியுள்ள நாடகங்களுள் ஒன்று. திரைப்படமாக எடுப்பதற்கென்றே இது முதலில் எழுதப் பெற்றது. ஆனால் பட அதிபருக்கும் அவருக்கும் ஒரு சில கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டன. திரைப்படத்திற்கேற்ப ஒரு சில மாற்றங்களை ஏற்படுத்திக் கதைப் போக்கையே மாற்றும்படி பட அதிபர் விடுத்த வேண்டுகோளைக் கவிஞர் நிராகரித்து விட்டார். எனவே படம் எடுக்கப்படாமலேயே நின்று விட்டது. அதன் பின் அதை நூல் வடிவமாகப் "பழநியப்பா பிரதர்ஸ்" என்ற பதிப்பகம் வெளியிட்டது.

இந்நாடகம் பொது உடைமை வாதிகளால் (Communists) பெரிதும் பேசப்படும் வர்க்கப் போராட்டத்தை (Class struggle) அடிப்படையாகக் கொண்டது. பொதுவுடைமைக் கொள்கையின் தந்தையான கார்ல் மார்க்ஸ் (Karl Marx) எனும் அறிஞரின் கருத்துப்படி உலகத்தில் இரண்டே இரண்டு வகுப்புகள் (Classes) தான் உள்ளன. இந்த இரு வகுப்புகளுக்கிடையே ஏற்பட்ட போராட்டங்களின் வரலாறே உலக வரலாறு என்பதாகும். முதலாளி (Capitalist), தொழிலாளி (Labourers) என்பனவே இவ்விரு வர்க்கங்களாகும். இவ்விரு வகுப்புகளிடையே நடைபெறும் ஓயாத போராட்டங்களின் விளைவாக முதலாளி வர்க்கம் முற்றிலும் மறைந்து விடும். அப்பொழுது தொழிலாளி வர்க்கம் மட்டுமே மிஞ்சும். தொழிலாளர் சர்வாதிகார ஆட்சி பேதங்களற்ற சமதர்ம அரசை (Socialist state) நாளடைவில் ஏற்படுத்தும் என்பது அவரது கருத்து. சமதர்ம அடிப்படையில் சமுதாயம் அமையவேண்டுமென்பதில் கார்ல் மார்க்சுக்கும் காந்திஜிக்கும் கருத்து வேறுபாடில்லை. ஆனால் அக்குறிக்கோளை அடையக் கூடிய மார்க்கம் அல்லது வழிமுறையைப் பற்றித்தான் இருவரும் வேறுபடுகின்றனர். வேலைநிறுத்தம், ஒத்துழையாமை, முதலாளிகளைத் தாக்குதல் அவர்களது சொத்துகளைச் சூறையாடுதல், கொலை, கொள்ளையிடுதல் முதலிய வன்முறை வழிகளைக் கையாண்டுதான் முதலாளி வர்க்கத்திடமிருந்து உரிமைகளைப் பெறவேண்டுமென்பது மார்க்சீய சித்தாந்தம். முதலாளிகளுக்குத் தீங்கு ஏற்படாத முறையில் வேலைநிறுத்தம்,

ஒத்துழையாமை, வரிகொடாமை போன்ற மென் முறைகளைக் கையாண்டு முதலாளிகளின் மனோநிலையை மாற்றி அவர்கள் மூலமாகவே அவர்களே விரும்பி உரிமைகளை அளிக்கச் செய்ய வேண்டுமென்பது காந்திஜியின் கருத்து. காந்திஜி தொடக்கத்தில் தொழிலாளர்களின் உரிமைகளைப் பெற முதலாளிகளிடம் சாத்வீக முறைகளையே பின்பற்றினார் என்பது கருதத்தக்கது. மாமன் மகள் என்ற இந்த நாடகத்திலும் நெல்லையப்பர் என்ற மில் முதலாளிக்கும் அந்த மில்லில் பணியாற்றிய தொழிலாளிகளுக்குமிடையே அடிக்கடி நடைபெறுகிற வர்க்கப் பேராட்டமே மையக் கருத்தாக இடம் பெறுகிறது. வேலை நிறுத்தம், கதவடைப்பு, திடீர்க்கொள்ளை, கொலை போன்ற வன்முறைகள் மில்லில் அடிக்கடி நடைபெற்று வந்தன. அவற்றை எல்லாம் பின்னாலிருந்து ஊக்குவித்தவன் முத்துவீரப்பன் என்ற பொது உடைமை வாதி. புரட்சித் தலைவனெனத் தொழிலாளர்களால் போற்றப்பட்டவன். அவனது சங்கத்தில் சுந்தரம் என்ற பி.ஏ. பட்டதாரி வந்து சேருகிறான். அவன் முதலில் நெல்லையப்பரிடம் எழுத்தராகப் (Clerk) பணியாற்றியவன். காந்தியக் கொள்கைகளில் மிகுந்த பற்றுள்ளவன். "இந்தப் பணக்காரர்கள் ஏழை ஜனங்களிடத்தில் கொஞ்சம் கருணையோடு நடந்து கொண்டால் புரட்சியே வராது"[1] என்று அவன் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசியதற்காக நெல்லையப்பர் அவனை வேலையிலிருந்து நீக்கி விட்டார்.

இத்தனைக்கும், சுந்தரம் என்பவன் நெல்லையப்பரின் வக்கிலாயிருந்து பல வழக்குகளை வெற்றிகரமாக நடத்தி இலட்சக் கணக்கில் இலாபத்தை ஈட்டித் தந்த சீனிவாசன் என்ற பிரபல வக்கீலின் மகன். வேலை போய் விட்ட வெறுப்பின் விளைவாக அவன் முத்து வீரப்பன் கட்சியில் போய்ச் சேர்ந்து கொண்டு "புரட்சி புரட்சி" என்று எங்குப் பார்த்தாலும் புரட்சிப் பிரச்சாரம் செய்து வந்தான். ஆனால் அப்புரட்சியை வன்முறைகளால் பெறுவதை அவன் ஆதரிக்கவில்லை. எனினும் முத்துவீரப்பன் சுந்தரத்தைத் தன் கட்சியில் சேர்த்துக் கொண்டான். நெல்லையப்பர் தொழிலகத்தில் மீண்டும் அவனைப் புகுத்தி அவனை ஒரு உளவாளியாகப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டார். அவன் விருப்பப்படியே சுந்தரம், தன்னுடன் பள்ளியில் படித்தவளும், நெல்லையப்பரின் மகளுமான வசந்தா என்ற பெண்ணின் பரிந்துரையின் மூலம் மீண்டும் நெல்லையப்பரிடம் எழுத்தராகப் பணியில் சேர்கிறான். நெல்லையப்பரிடம் பணிபுரியும் நிலப் பண்ணையாட்கள், மில்லில்

1. நாமக்கல் கவிஞர், "மாமன் மகள்", ப.17, ஏசியன் பிரிண்டர்ஸ், சென்னை-14, 1982.

தொழிலாற்றும் ஊழியர்கள் ஆகியோரிடம் அவன் விநயமாகப் பழகி அவர்களது நண்பனாக விளங்கினான். நெல்லையப்பர் மீது அவர்கள் கொண்டுள்ள விருப்பு வெறுப்புகளையும், அவ்வப்போது நடைபெறும் சச்சரவுகளைப் பற்றியும், நெல்லையப்பர் அவற்றை எப்படிச் சமாளிக்கிறார் என்பது பற்றியும் அவன் உளவறிந்து முத்து வீரப்பனுக்குச் செய்தி அனுப்பிக் கொண்டேயிருந்தான். அதே சமயம் நெல்லையப்பருக்கும், அவரது மகள் வசந்தாவுக்கும் எவ்விதத் தீங்கும் வராத படியும் பார்த்துக் கொண்டான். ஒரு சமயம் வசந்தாவை முட்ட வந்த முரட்டுக்காளை ஒன்றை அடக்கி அவளைக் காப்பாற்றினான். மற்றொரு சமயம் முத்துவீரப்பன் வசந்தாவைக் கடத்திக்கொண்டு போக முயற்சித்த போது அத்திட்டத்தையும் அவன் தந்திரமாகத் தடுத்து நிறுத்தினான். மற்றுமொரு சமயம் முத்துவீரப்பனுடைய கையாட்கள் அவரது வீட்டிலும், தொழிற்சாலையிலுமிருந்த பொருட்களைக் கொள்ளையடிக்க முயற்சித்தபோது நெல்லையப்பரிடம் அதுபற்றிக் கூறி அச்சம்பவம் நடை பெறாதபடி பார்த்துக் கொண்டான். இதனால் எல்லாம் பெருமகிழ்ச்சிடைந்த நெல்லையப்பர் தன் மகள் வசந்தாவையே அவனுக்குத் திருமணம் முடித்து வைக்க முன் வருகிறார்.

வசந்தாவுக்கும் தனக்கும் இருக்கும் நெருக்கமான உறவு தூய அன்பின் பாற்பட்டதேயன்றி வேறல்ல என்று கூறிச் சுந்தரம் அதை மறுத்து விடுகிறான். வசந்தாவின் உண்மைக் காதலனாக இருந்தவனும், அதன் காரணமாகவே நெல்லையப்பரால் வேலையிலிருந்து நீக்கப்பட்டவனும், அதன் பின் அமெரிக்கா சென்று மேற்படிப்பு படித்துவிட்டுத் திரும்பியவனுமான மோகன் என்பவனுக்குமே திருமணம் செய்து வைக்க வேண்டுமென அவன் தன் முதலாளியைக் கேட்டுக்கொள்கிறான். அதன்படியே திருமணம் நடைபெறுகிறது. சுந்தரம், தான் ஒரு சமயம் வாக்குக் கொடுத்தப்படி ராஜேஸ்வரி எனும் தன் மாமன் மகளையே திருமணம் செய்து கொள்கிறான். சுந்தரம் வசந்தாவைத் தான் திருமணம் செய்து கொள்ளப் போகிறான் என்று வாசகர்கள் நினைக்குமாறு கதையை நடத்திச் சென்று கடைசியில் ஏமாற்றி விடுகிறார் கவிஞர். இதுவே இக்கதையிலுள்ள புதிர் அம்சமாகும். மற்றபடி முதலாளிகளை முறியடிக்கக் கடைப்பிடிக்கப்பட வேண்டிய வழி அறப்போரா, மறப்போரா என்பது பற்றிய விவாதங்களே கதையில் செறிந்து கிடக்கின்றன. அறவழி வெற்றியடைகிறது. மறவழி தோல்வி அடைகிறது. நெல்லையப்பரே நல்லப்பராக மாறி விடுகிறார்.

"மாமன் மகள்" கதை நாடகத்தின் முதற் காட்சியிலேயே சுந்தரம் கீழ்வருமாறு கத்திக் கொண்டு செல்கிறான்.

"புரட்சி வேண்டும். ஆம் புரட்சி வந்தாலான்றி இந்த நாட்டில், பசியும், நோயும், பஞ்சமும் போகாது. பணக்காரர் ஆதிக்கம் ஒழிய வேண்டும். முதலாளிகளின் ஆட்சி முறிய வேண்டும். உழைப்பில்லாமல் உண்டு கொழுத்து டம்பச் செலவுகள் செய்து உல்லாச வாழ்க்கை நடத்தும் சோம்பேறிக் கும்பல்கள் தொலைய வேண்டும். அதற்கும் புரட்சி ஒன்றேதான் சரி"[2] என்ற தொழிலாளிகளின் புரட்சி (Prolotarian Revolution) பற்றிய பொதுஉடைமைக்காரர்களின் கொள்கையை எடுத்துக் கூறுகிறார்.

இதே கருத்தையே சுந்தரம், "புரட்சி என்றால் என்னாங்க" என்று கேட்ட செங்கோடன் என்ற தொழிலாளியிடம் பின்வருமாறு கூறுகிறான், "புரட்சி என்றால் இனிமேல் பணக்காரன், ஏழை, முதலாளி, படிக்காதவன் என்ற வித்தியாசம் இல்லாமல், எல்லோருக்கும் நல்ல சோறு, நல்ல துணி, நல்ல வீடு, நல்ல வைத்தியம் இதெல்லாம் கிடைக்கும்படியாக இப்போதிருக்கிற ஏற்பாடுகளை எல்லாம் புரட்டி விடுவது. அதுதான் புரட்சி"[3] என்கிறான்.

புரட்சித் தலைவன் முத்துவீரப்பன் தனது சொற்பொழிவில் புரட்சி பற்றிக் கூறுவதாவது "அன்புமிகுந்த சகோதர சகோதரிகளே! உங்கள் அனைவருக்கும் எனது தாழ்மையான வணக்கம். இங்கே கூடியிருக்கிற நீங்கள் எல்லோரும் உழவாளிகளும், தொழிலாளிகளுமாக இருக்கிறீர்கள். பரிதவிக்கத் தகுந்த உங்களைப் பார்த்தால் கல்லும் கூடக் கண்ணீர் விடும். அவ்வளவு கஷ்டப்படுகிறீர்கள் நீங்கள். ஆனால் இந்த நாட்டில் இப்போதுள்ள பணக்காரர் ஆதிக்கம் கல்லைக் காட்டிலும் கடின சித்தமுள்ளது. ஐயோ! ஆடுமாடுகளை விடக் கேவலமாக நடத்தப்படுகிற உங்கள் நிலைமை உங்களுக்கே தெரியாது. கொஞ்சம் கவனமாய்க் கேளுங்கள். ஓய்வில்லாமல் உழைக்கிறீர்கள். ஆனால் குடிக்கக் கஞ்சிகூட உங்களுக்கு இல்லை. களைப்பறியாமல் பாடுபடுகிறீர்கள். ஆனால் கட்டத் துணியில்லை. சூதறியாமல் முதலாளி சொன்னதை எல்லாம் செய்கிறீர்கள். ஆனால் சொந்தம் என்று சொல்ல ஓர் ஓட்டைக் குடிசைக்கூட உங்களுக்கு இல்லை. உழவாளிகளாகிய நீங்கள், உழுது, விதைத்து, பயிர் செய்து அந்தப் பயிரைப் பகலிரவாகக் காத்து, அறுவடை செய்து மலைமலையாகத் தானியத்தைக் குவிக்கிறீர்கள். ஆனால் அந்தத்தானியத்தில் ஒரு கைப்பிடிகூட உங்களிடஷ்டப்படி எடுத்துக் கொள்ள உங்களுக்கு உரிமை இல்லை. நித்தம் நித்தம் நீங்கள் பாடுபடும் அந்த நிலத்திலிருந்து ஒரு கைப்பிடி மண்கூட உங்களுக்குச் சொந்தமில்லை. எத்தனையோ பேர்கள் நூலும் துணியும் உற்பத்தி

---

2. மேலது நூல், ப.1.

3. மேலது நூல், ப.6.

செய்கிறீர்கள். ஆனால் உங்கள் வீட்டுப் பெண்களின் உடம்பை முழுசாக மூட ஒரு சேலை கூட உங்களிடம் இல்லை; ஏன்? சகோதர சகோதரிகளே! எண்ணிப் பாருங்கள். . கூலி கட்டவில்லையே என்றால் கதவடைப்பு. கதவடைப்பு நியாயமில்லை என்று கூறினால் குண்டடிப்பு; குண்டடிப்பு அநியாயம் என்று கூக்குரல் போட்டால் சிறைவாசம். இது நியாயமா? நீங்களே சொல்லுங்கள்" என்று கேட்கிறான் முத்து வீரப்பன்.

"அநியாயம், அநியாயம், அக்கிரமம், அயோக்கியத்தனம்" என்று கூட்டத்திலுள்ளோர் கூச்சலிடுகின்றனர். மேலும் பலவாறாகத் திட்டுகிறான் முதலாளிகளை;

> "விளைநிலங்களையும், தொழிற்சாலைகளையும் எட்டிக்கூடப் பார்க்காத முதலாளிகள், மோட்டாரிலும், விமானங்களிலும் பறக்கிறார்களே! அவர்களுடைய சுகபோகங்களுக்குப் பணம் எங்கிருந்து வருகிறது? உங்கள் உழைப்பிலிருந்தல்லவா? எனக் கேட்கிறான்."
>
> "இந்தப் பணக்காரரும் முதலாளிகளும் இனி மேல் நம்மை ஏமாற்றவிடக்கூடாது. ஒன்று சேர்ந்து கட்டுப்பாடாக நின்றால் இன்னும் மூன்றே மாதங்களில் இந்த முதலாளி ஆதிக்கத்தை ஒழித்துக் கட்டி, குடியானவர்கள், தொழிலாளர்கள் ஆதிக்கத்தை ஸ்தாபிப்போம். பிறகு நம் ஒவ்வொருவருக்கும் நிலம் உண்டு. வீடு உண்டு. மற்றெல்லா வசதிகளும் உண்டு. இந்த மில்களில் நமக்குப் பங்கும் உண்டு"

என்று கர்ஜித்து மக்களைத் தன்பக்கம் ஈர்க்கிறான். மக்களுக்காக ஒலிபெருக்கியில் பின் கண்ட பாடல் ஒலி பரப்பப் படுகிறது.

பாட்டாளி மக்களின் பசிதீர வேண்டும்
பணமென்ற மோகத்தின் விசை தீர வேண்டும்
கூட்டாளி வர்க்கங்கள் குணம் மாறவேண்டும்
குற்றவேல் தொழில் என்ற மனம் மாறவேண்டும்

கடலொத்த தொழிலாளர் வெகுபாடுமட்டும்
கஞ்சிக்கும் வழியின்றிக் கண்ணீரைக்கொட்டும்
மடமிக்க நிலைமைக்கு மாற்றில்லையானால்
மனிதர்க்கு அறிவுள்ள ஏற்றங்கள் ஏனோ

உழவுக்கும் தொழிலுக்கும் சுகமொன்றும் இல்லை
உதவாத வீணர்க்கு சுகபோகம் கொள்ளை

அளவுக்கு மிக மீறி அவதிக்குள்ளானோம்
அநியாயம் இதுபோக வழியேதும் காணோம்[4]

புரட்சிமனப்பான்மை ஏன் வருகிறது என்று கேட்போருக்குச் சுந்தரம் "பணக்காரர்கள் ஏழைகளிடத்தில் கருணை இல்லாமல் நடந்து கொள்வதால் தான் புரட்சி மனப்பான்மை வளர்ந்து வருகிறது" என்று மறுமொழி கூறுகிறான்.[5] மற்றும் "நாம் பயங்கரச் செயல்களுக்கு இடமே கொடுக்காமல் புரட்சி உண்டாக்க வேண்டும்" என முத்துவீரப்பனிடமே கூறுகிறான்.[6] மேலும், ஒரு சில முதலாளிகளை ஒழித்துவிட்டால் மட்டும் ஏழைகளுக்கு நன்மை வந்து விடாது," தொழிலாளிகளையும், பொது ஜனங்களையும் வசப்படுத்த இப்போதுள்ள சமுதாய முறையை மாற்ற வேண்டும்; அரசியலமைப்பையும் மாற்ற வேண்டும்" என்று சுந்தரம் கூறுகிறான். அதை எப்படிச் செய்வது என முத்துவீரப்பன் கேட்கிறான். புரட்சிகரமான பிரச்சாரத்தால் தான்" எனச் சுந்தரம் கூறுகிறான். 'யாரிடம் பிரச்சாரம் செய்வது என முத்துவீரப்பன் கேட்க'' தொழிலாளிகள், விவசாயிகள் மற்றுமுள்ள பொதுமக்களிடமும் தான்" என்று சுந்தரம் பதிலளிக்கிறான்.[7]

இந்தப் பிறவியிலேயோ, அன்றி முற்பிறவியிலேயோ செய்த புண்ணிய பாவங்களுக்கேற்பவே சிலர் பணக்காரர்களாயும், சிலர் ஏழைகளாயும் இருக்கிறார்கள் எனச் சுந்தரத்திடம் அவனது தாயார் அறிவுரை கூறுகிறாள். அப்போது சுந்தரம்

> அம்மா! எடுத்தற்கெல்லாம் இப்படிப் புண்ணியம், பாவம்; போன ஜென்மம், இந்த ஜென்மம்; கர்மம், தர்மம், விதி, தலையெழுத்து என்று பேசிப் பேசித்தான் இந்த நாடு குட்டிச் சுவராய்ப் போனது. கோடிக் கணக்கில் பணம் வைத்துக் கொண்டு, ஏழைகளைச் சாறாகப் பிழிந்து அவர்களுடைய உழைப்பால் சுகபோகங்களை அநுபவித்துக் கொண்டிருக்கிற சோம்பேறிப் பணக்காரர்களெல்லாம் போன ஜென்மத்தில் தர்மம் செய்த மூர்த்திகளாக்கும்! சோறும் துணியும், நிற்க நிழலுங்கூட இல்லாமல் தவிக்கும் ஏழைகளெல்லாம் போன ஜென்மத்தில் பாவம் செய்தவர்களாக்கும்? இதைப் பார்த்துக் கொண்டிருப்பவர் பகைவனாக்கும்? இந்த வேதாந்தத்திலிருந்த நம்பிக்கை எனக்கு நேற்றோடு போய்விட்டது"

---

4. மேலது நூல், பக்.11,12; இப்பாடல் கவிஞரால் ஏற்கெனவே புனையப்பெற்று, வெளியிடப்பட்டுள்ளது; நாமக்கல் கவிஞர் பாடல்கள் முல்லைப்பதிப்பக வெளியீடு.

5. மேலது ப.17.  6. மேலது, ப.30.  7. மேலது, ப.35

எனக் கூறுகிறான். பொதுவுடைமைவாதிகளின் பகுத்தறிவுக் கொள்கையைச் சாடும் வகையில் கவிஞர் சுந்தரத்தின் மூலம் இக்கருத்தை வெளியிடுகிறார்.[8]

புரட்சியைப் பற்றிப் பாமரமக்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதைக் கவிஞர் ஒரு தொழிலாளி தன் மனைவியிடம் பேசும் பேச்சிலிருந்து வெளிப்படுத்துகிறார். தொழிலாளர் தலைவன் முத்துவீரப்பன் சொற்பொழிவைக் கேட்டுவிட்டு வீடு திரும்பிய செங்கோடன் எனும் தொழிலாளி, கட்டிலில் மல்லாக்கப் படுத்திருந்த தன் மனைவி காளியம்மாளைக் குப்புறப்புரட்டி விடுகிறான். அதைக்கண்டு திகைத்த காளியம்மாவிடம் செங்கோடன் 'புரட்சி ஓங்குக' என்று கத்துகிறான். "பொரட்சின்னா என்னா மச்சான்" எனக் காளியம்மா கேட்கிறாள். அதற்குச் செங்கோடன் இப்போது உன்னைப் புரட்டி மல்லாந்து படுத்திருந்தவளைக் குப்புறப்படுக்கும்படி எப்படி செய்தேனோ அப்படித்தான். பொரட்சி வந்தா எல்லாம் மாறிப்போகும். மேலே இருந்ததெல்லாம் கீழே; கீழே இருந்ததெல்லாம் மேலே போய்விடும்" என்கிறான். "அப்படீண்ணா மேலே இருக்கிற கூரை கீழே வந்துடும், கீழே இருக்கிறதுனா மேலே போயிருமா? கொழவி கீழே போயுடும், அம்மி மேலே வந்துடுமா? அடுப்பிலிருக்கிற சட்டி கீழே போயிடும், நெருப்பு மேலே வந்துடுமா? நாம்ப கீழே கட்டில் மேலே அப்படியா எனக் கேட்கிறாள். அதற்கு செங்கோடன் இது அம்மி குழவி, ஊடு கூரை செய்ற புரட்சியல்ல. மனுஷருங்க செய்யப்போற புரட்சி. இதுவந்தால் மேலே இருக்கிற மனுஷர் கீழே வந்திடுவாங்க; கீழே இருக்கிற மனுஷர் மேலே போயிடுவாங்க" எனப் பதில் சொல்கிறான்.

அதற்குக் காளியம்மா "அப்படீன்னா மச்சுமேலே இருக்கிறவங்க கீழே வந்திடுவாங்க கீழே இருந்தவங்கல்லாம் மச்சுமேலே ஏறிக்குவாங்களா?" என வினவுகிறாள். "ஆமாம்! வெவரமாச் சொல்றேன் நல்லாக் கேளு. பொரட்சின்னா இனிமேல பணக்காரன், ஏழை, முதலாளி வேலைக்காரன், படிச்சவன், படிக்காதவன், ஆம்புளே, பொம்புளே, இங்குற வேத்துமை எல்லாம் இருக்காது" எனக் கூறுகிறான். அதற்குப் பதிலாகக் காளியம்மா "அப்படியா? நாங்க கச்சேரி வேலைக்குப் போனா நீங்க சோறாக்குவீங்களா?" எனக் கேட்கிறாள். அதற்குச் செங்கோடன் "ஓ! ஆக்குவோம், அதுதாண்டி பொறட்சி. பொம்பளைங்களுக்கு இனிமேல் நல்லகாலம் வரப்போவுது; எல்லாம் இனிமேல் தலைகீழா

8. மேலது பக்.43-44.

மாறிபோகும்டீ. . ." என்கிறான். அப்படீன்னா "நாங்களெல்லாம் கச்சேரிக்குப் போவோம் நீங்க ஊட்டைப் பாத்துக்குங்க" எனக் காளியம்மா நக்கல் பண்ணுகிறாள். உடனே செங்கோடன் "எல்லாம் தலைகீழா மாறிப்போகுமுன்னு நான் சொன்னது என்னாண்ணாக்கா, நம்மைப் போல ஏழையெல்லாம் பணக்காரர் ஆயுடுவாங்க. நெலம் இல்லாதவங்களுக்கு நெலம் கிடைக்கும். ஊரு இல்லாதவங்களுக்கு ஊரே கெடைக்கும். ஆம்பளங்களுக்கு மட்டுமல்லடி. பொம்பளைங்களுக்கும் சரிபங்கு கெடைக்குண்டி! அதுதான் பொரட்சி என்கிறான்.[9] இவ்வாறெல்லாம் பேசித் தொழிலாளிகளை மயக்கி சில சுயநலப் பொதுவுடைமை வாதிகள் அவர்களிடம் சந்தா வாங்கி அதைக் கொண்டு சொகுசு வாழ்க்கை நடத்தத் தொழிலாளிகள் வன்முறையிலிறங்கி வேலையை இழந்து சிறைச்சாலைக்குப் போகிறார்கள் என்பதைக் கவிஞர் மேற்கண்ட சொல்லாடல் மூலம் மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறார்.

. பொதுவுடைமைவாதியான முத்து வீரப்பனும், அவனது பள்ளித் தோழன் சுந்தரமும் பேசிய பேச்சுக்களில் மயங்கி பல தொழிலாளிகள் அவர்களது கட்சியில் சேர்கிறார்கள். முதலில் வன்முறை மூலம்தான் புரட்சி செய்யமுடியும் என்று நம்பிய முத்துவீரப்பன் இறுதியில் சாத்வீக முறையிலேயே அதைச் சாதிக்கலாம் என்று சொன்ன சுந்தரத்தின் கருத்தை ஏற்றுக் கொள்கிறான். இருவரும் தொழிலாளிகளின் வன்முறை எண்ணங்களை மாற்றி வேலைநிமித்தம், சத்தியாக்கிரகம் போன்ற வழிகள் மூலம் நல்லப்பரின் மனதை மாற்றி அவரிடமிருந்து தமக்கு வேண்டிய வசதிகளைப் பெற்றுக் கொள்ளலாம் எனக்கூறி அவர்களை ஒன்று திரட்டுகின்றனர். ஆனால் அவர்களது கட்சியிலிருந்த கருப்பண்ணன், வீராசாமி இன்னும் சிலர் நெல்லையப்பர் வீட்டைக் கொள்ளையடிக்கவும், அவரைக் கொன்று விட்டு அவரது சொத்துக்களைத் தமக்குள் பிரித்துக் கொள்ளவும் திட்டமிடுகிறார்கள். அதே போன்று முத்துவீரப்பன் ஊரிலில்லாத சமயம் பார்த்து அவர்களின் கூட்டம் நெல்லையப்பர் வீட்டுக்குள் புகுந்து விலையுயர்ந்த பொருட்களை எல்லாம் கொள்ளையடித்துப் போகிறது. இதுபற்றி செங்கோடன் என்ற விசுவாசம் மிக்கப் பண்ணையாள் மூலம் முன் கூட்டியே அறிந்த சுந்தரம் நெல்லையப்பரையும் அவரது மகள் வசந்தாவையும் வீட்டுப் பின்புற வாசல் வழியாக வெளிக் கொணர்ந்து செங்கோடன் வீட்டில் மறைத்து வைக்கிறான். பின்னர் கலகக்காரர்கள் ஊருக்கே தீ வைக்கிறார்கள். அது செங்கோடன் வீட்டுக்கும் பரவுகிறது. சுந்தரம் நெல்லையப்பரையும் வசந்தாவையும் மீட்டு அழைத்துக் கொண்டு

போகிறான். அப்போது கொள்ளைக்காரர்கள் சுந்தரத்தைச் சுட்டுவிட்டு, நெல்லையப்பரையும் வசந்தாவையும் கடத்திச் சென்று நாச்சிமுத்து என்ற ஒரு ஜமீன்தார் வீட்டில் சிறை வைக்கின்றனர் நெல்லையப்பரின் விசுவாசிகளான செங்கோடன் அவன் மனைவி காளியம்மாள் போன்றவர்கள் மூலம் காவல்துறைக்குச் செய்தி போகிறது. அவர்களது முயற்சியால் நெல்லையப்பரும் வசந்தாவும் நாச்சியப்பனின் இரகசிய வீட்டிலிருந்து விடுவிக்கப்படுகின்றனர். சுந்தரமும் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு, பூரண குணமடைந்து வீடு திரும்புகிறான். முத்துவீரப்பன், வீராசாமி, கருப்பண்ணன் மற்றும் பல கொள்ளையர்களும் அவர்களுக்கு உதவி செய்த நாச்சிமுத்துவும் , கைது செய்யப்படுகின்றனர். சுந்தரத்தின் பரிவுரையால் முத்துவீரப்பன் மட்டும் விடுதலை பெறுகிறான்.

நல்லப்பர் வீட்டுக்கு வந்தபின் அவரும், சுந்தரமும், வசந்தாவும் அடிக்கடி கூடிப் பேசி, நல்லப்பரது மாளிகையில் ஒரு பெரிய விழாக்கொண்டாடி, அதில் சில புரட்சிகரமான செய்திகளை வெளியிடுவதென்று தீர்மானிக்கப்பட்டது. அவ்வாறே நெல்லையப்பர் வீட்டுக்கு முன் ஒரு பெரிய கொட்டகை போடப்பட்டு, ஒரு பெரிய விருந்து ஏற்பாடு செய்யப்பட்டது. விருந்துக்கு மாவட்டத்திலுள்ள முக்கிய அதிகாரிகளுக்கும் மற்றும் பல இலக்கியஸ்தர்களுக்கும் அழைப்பிதழ்கள் அனுப்பப்பட்டன. மாவட்டத் தலைவர் நெல்லையப்பர் வேண்டுகோளுக்கிணங்கி விழாவுக்குத் தலைமை தாங்க ஒப்புக் கொண்டார். விழாவில் கலந்து கொண்ட பலருக்கும் அறுசுவை விருந்து அளிக்கப்பட்டது. மற்றும் நிலங்களிலும் மில்லிலும் வேலை செய்த தொழிலாளிகளுக்கும் அன்னதானம் நடைபெற்றது. விழாவில் பேசிய பேச்சாளர்கள் ஆற்றிய உரைகளில் சமதர்மம் பற்றிய காந்தியக் கருத்துகள் பல வெளியிடப்பட்டன. முடிவில் காந்திஜியின் சர்வோதயக் கருத்தை நல்லப்பர் நிறைவேற்றுகிறார். தனது நிலங்களை அவற்றில் விவசாயம் செய்து வந்தவர்களுக்கும், மில்களின் பங்குகளை அதில் வேலை செய்த தொழிலாளிக்கும் பிரித்துக் கொடுத்து விடுவதாக எல்லலோருக்கும் முன்பாக அறிவிக்கிறார்.

விழாவில் பேசிய சுந்தரம் நெல்லையப்பர் வீட்டைக் கொள்ளையடித்தவர்கள் உண்மையில் வழக்கமாகக் கொள்ளையடிக்கிற குற்றப் பரம்பரையைச் சேர்ந்தவர்களல்ல என்றும், தங்களுக்கு வீடும் நிலமும் வாங்கித் தருவதாக வாக்களித்த போலி பொது உடைமை வாதிகளின் தூண்டுதலால்தான் அவ்வாறு செய்ததாகவும் கூறி அவர்களை மன்னிக்குமாறு வேண்டுகிறான். பின்னர் சமதர்மம் என்றால் என்ன என்பதைப் பற்றி அவன்

பின்வருமாறு கூறுகிறான். "நாட்டிலுள்ள எல்லாப் பொருள்களும் அந்த நாட்டிலுள்ள எல்லா மக்களுக்கும் "பொது உடைமை" ஆக வேண்டும் என்பதும். எல்லா மனிதர்களும் சரி சமானமாக வாழ்க்கைக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் பெற "சமதர்மம்" நடக்க வேண்டும் என்பதும் மிகவும் உன்னதமான லட்சியங்கள் தான். உலகத்தில் தோன்றிய எல்லாப் பெரியவர்களும் இந்த லட்சியங்களைத்தான் போதித்திருக்கிறார்கள்.

சமதர்மம் என்ற ஒன்றை மட்டும் நாம் சரியாக உணர்ந்து நடப்போமானால் சமுதாயத்தில் சச்சரவே இருக்காது. சமதர்மம் பேசுகின்றவர்கள் எல்லோரும் உணவுக்கும், பணத்துக்கும் மட்டுமே சமதர்மம் நினைக்கிறார்களே ஒழிய உயிருக்குச் சமதர்மம் காட்டுவதில்லை. பிறருடைய உயிரைத் தன்னுடைய உயிருக்குச் சமமாக எண்ணாத ஒருவன்'' சமதர்மம் பேசுவது வெறும் பித்தலாட்டம். தன்னைக் காட்டிலும் பணக்காரனாக இருக்கிறவனைக் கொள்ளையடித்தோ, கொன்றோ அவனுடைய செல்வத்தைப் பறித்துப் பிறருக்குப் பங்குபோட்டுத் தருவதாகச் சொல்லுகிறவன் தன்னைக் காட்டிலும் ஏழைகளாக இருப்பவர்களுக்குத் தன்னுடைய சொந்த பணத்தையும், சுக சௌகரியங்களையும் பங்கு போட்டுத் தந்துவிடத் தயாராக இல்லை. எவனொருவன் எல்லோருடைய உயிரையும் தன்னுயிர் போலக் கருதித் தனக்குள்ள வசதிகளை எல்லாம் தன்னைக் காட்டிலும் ஏழைகளாயுள்ளவர்களுக்காகவே உதவுகிறானோ அவன் ஒருவன்தான் சமதர்மவாதி. அப்படிப்பட்ட சமதர்ம வாழ்க்கையில் நடந்து காட்டிய ஒரே ஒரு உத்தமன்

**சமனிலாத இந்த நாட்டின்ஞான வாழ்வின் சக்தியை**
**சரிசமானமாக மற்ற உயிரையெண்ணும் சாந்தனை**
**அமரனாகி நம்மைக் காக்கும் அண்ணல் காந்தி ஐயனை**
**அஞ்சலிக்கும் யாவருக்கும் சஞ்சலங்கள் தீருமே**

என்று பேசுகிறான்.[10]

அடுத்ததாகப் பேசிய முத்துவீரப்பன் எனும் பொது உடைமை வாதி, மேலை நாட்டு அறிஞர்களின் நூல்களைப் படித்துத் தானும் ஆயுத பலத்தால் மட்டுமே புரட்சி வெற்றி பெறுமென முதலில் நினைத்ததாகவும், ஐரோப்பிய சமதர்ம நாடுகளைச் சென்று

---

10. மேலது நூல், ப.452-453.
இது கவிஞரால் ஏற்கெனவே இயற்றப்பட்டு வெளியிடப்பட்டது: நாமக்கல் கவிஞர் பாடல்கள், தொகுப்பு; முல்லைப்பதிப்பகம் வெளியீடு.

பார்த்தபோதுதான் ஜீவகாருண்யமும், மனிதாபிமானமும் அங்கு இல்லை என்பதையும் கட்சி உறுப்பினர்கள் சுகபோகங்களில் ஆழ்ந்து கிடப்பதையும், மற்றையோர் வறுமையில் வாடிக் கிடப்பதையும் கண்டதாயும் அதனால்தான் சாத்வீகப் புரட்சியே நல்லது என்று அதற்காக முயற்சி செய்ததாகவும், ஆனால் வீராசாமி கருப்பண்ணன் போன்ற போலி சமதர்மவாதிகள், தான் ஊரிலில்லாதபோது நெல்லையப்பர் வீட்டில் புகுந்து கொள்ளையடித்துவிட்டதாகவும், அதற்காகத் தான் மிக வருந்துவதாகவும், முதலாளிகள், தொழிலாளிகள், அரசாங்கம், குடிகள் யாவரிடத்திலும் மனப்புரட்சியை ஏற்படுத்த வேண்டும் என்றும் பேசினான்.[11]

அதற்குப் பின் பேசிய நல்லப்பர் தான் சிறுவயதில் மிகப் பச்சாதாபம் கொண்ட நல்ல பிள்ளையாகவே இருந்ததாயும் பின்னால் வந்த செல்வத்தால் செருக்கடைந்து, மனிதாபிமானத்தைக் கைவிட்டு ஏழைகளுக்குத் துன்பம் விளைவித்ததாகவும், அதன் விளைவாகத்தான் பல துன்பங்களை அநுபவிக்க நேர்ந்துவிட்டதாயும் கூறி வருந்தினார். பின்னர் அவர் காந்திஜியின் சர்வோதயக் கருத்தையும் தர்மகர்த்தா கொள்கையையும் வெளியிடுகிறார். அதாவது "ஒரு விதமான உழைப்பும் செய்யாமல் பாட்டாளியின் உழைப்பினால் வரும் பயன்களை எல்லாம் தனக்கே கொட்டிக் கொண்டு சுகப்பட விரும்புகிற சோம்பேறித்தனத்திலிருந்துதான் பொறாமையும், கொள்ளையும், புரட்சியும், கொலைகளும் புறப்படுகின்றன என்ற உண்மை இப்போதுதான் எனக்குப் புலனாயிற்று. தங்களுக்குக் கிடைத்த செல்வம், ஏழைகளுக்கு உதவும்படி ஆண்டவன் தங்களிடத்தில் ஒப்படைத்த தர்மச் சொத்து என்று பணக்காரர்கள் எண்ண வேண்டும். பணம் இல்லை என்பதற்காகக் கொலை, கொள்ளை முதலிய பாவங்களைச் செய்துவிடக் கூடாது என்று ஏழைகள் எண்ணவேண்டும். இந்த இரண்டு நல்லெண்ணங்களும் சேர்ந்துதான் சமதர்மச் சமுதாயத்தைக் காப்பாற்றும் என்று காந்தி மகாத்மா தெளிவாகக் காட்டியிருக்கிறார். அதன்படி என்னுடைய கடமையை இப்போதே செய்துவிடத் தீர்மானித்து விட்டேன்"[12] என்று கூறிவிட்டுத் தமது திட்டத்தை அறிவிக்கிறார்.

"எனக்குச் சொந்தமான சுமார் 5700 ஏக்கர் நன்செய் நிலங்களில் என்னுடைய குடும்பத்துக்காக 200 ஏக்கர் நிலத்தை மட்டும் வைத்துக் கொண்டு, மற்றவற்றை எல்லாம் தகுதியுள்ள ஏழை உழவாளியிடம் ஒப்படைத்துக் கூட்டுப்பண்ணை நடத்தச் செய்து,

---

11. மேலது நூல், பக்.454-457.   12. மேலது நூல், பக்.457-458.

அதனாலுண்டாகும், விளைபொருள்களை எல்லாம் அவர்களுக்குள்ளே பங்கீடு செய்து விடும்படி தர்மசாசனம் செய்துவிடப் போகிறேன். ஜில்லாக் கலெட்டரைத் தலைவராகக் கொண்ட ஒரு தர்மகர்த்தாக் கழகம் அதற்கு வேண்டிய சட்டத்திட்டங்களைச் செய்து அதைப் பரிபாலிக்கும்"[13] எனக் கூறுகிறார். அதன்பின் தனக்கென வைத்துக் கொண்ட 200 ஏக்கர் நிலத்தில் 50 ஏக்கர் நிலத்தைத் தன்னைக் காப்பாற்றிய செங்கோடன், மலையப்பன் முதலிய வேலைக் காரர்களுக்கிடையே பிரித்துக் கொடுக்கப் போவதாகவும் மற்றும் 50 ஏக்கரை, தனது முன்னாள் வக்கீல் சீனிவாசன் மனைவிக்கும் (சுந்தரத்தின் தாயார்) அவரது இரண்டு பெண் பிள்ளைகளுக்கும், தானமாக வழங்கிவிடப் போவதாகவும், புன்செய் நிலங்களில் ¾ பகுதியை ஏழைகள் வீடுகட்டிக் கொள்ள தர்மகர்த்தா கழகத்திடம் ஒப்படைக்கப்படுமென்றும் கூறுகிறார்.[14]

அடுத்து தன் வசமுள்ள ரொக்கப் பணம் 5 கோடி ரூபாயில் தன் மகளுக்கும் மனைவிக்கும் 50 லட்சம் கொடுத்துவிட்டு மீதியைப் பெண் கல்விக்கும், பிரசவ ஆஸ்பத்திரிகளுக்கும், கிராமப் புனருத்தாரணத்திற்கும், சமயோசிதப்படி செலவிட, ஜில்லா கலெக்டர் தலைமையில் அமைக்கப்படும் தர்மகர்த்தா கழகம் ஒன்றிடம் ஒப்படைக்கப் போவதாகவும், அதில் சுந்தரம் ஓர் உறுப்பினராகவும், வசந்தா செயலாளராகவும் இருப்பார்களெனவும் அறிவிக்கிறார்.

அவருக்குச் சொந்தமான ஐந்து மில்களின் பங்குகளில் கால்வாசியைச் சுந்தரத்துக்கும், மீதிப் பங்குகளிலிருந்து வரக்கூடிய வருமானத்தில் பாதி மில் தொழிலாளிகளுக்குப் பிரித்துக் கொடுக்கப் படும் என்றும், மீதியுள்ள பாதிப்பணம், ஆலயங்கள், அன்ன சத்திரங்களுக்குத் தானமாக வழங்கப்படுமென்றும், அதற்கென ஒரு தனிக் கமிட்டி அமைக்கப்படும் என்றும், அக்கமிட்டியில் தொழிலாளிகளின் தலைவர்களே பெரும்பாலும் உறுப்பினர்களாக இருப்பார்கள் எனவும் கூறுகிறார்.

மேலும் தன் கையிருப்பில் உள்ள ரொக்கப் பணத்தையும், விலையுயர்ந்த பொருள்களையும் விற்பதால் வரும் பணத்தையும் கொண்டு "சர்வோதயச் சங்கம்" என்ற ஒரு தொண்டு நிறுவனத்தை ஏற்படுத்தி அதன் மூலம் காந்தியம் செய்யப் போவதாகவும் அறிவிக்கிறார்.[15]

---

13. மேலது நூல், ப.459.
14. மேலது Ibid.
15. மேலது நூல், ப.460-461.

இங்கு நல்லப்பரால் தெரிவிக்கப்பட்ட கருத்துகளும், எடுக்கப் பட்ட தீர்மானங்களும், காந்திஜியால் வற்புறுத்தப் பட்ட "தர்மகர்த்தா முறையும்" (Trustee Ship system) ஏறக்குறைய ஒன்றேயாகும். அதன்படி செல்வந்தர்கள், தங்களிடம் வந்து குவியும் செல்வத்தை இறைவனால் அளிக்கப்பட்ட பரிசு என்றும், அவ்விறைவனின் குழந்தைகளான ஏழை, எளியோர்கள், அநாதைகள், ஊனமுற்றோர்களின் துயரங்களைப் போக்குவதற்காக அடைக்கலமாக ஒப்படைக்கப்பட்ட தர்மநிதி (Trust) என்றும் கருத வேண்டும். அதை மக்களின் நன்மைக்காகச் செலவிடுவது ஒவ்வொரு செல்வந்தனின் கடமையாகும். அதுவே இறைவனின் விருப்பமுமாகும். ஒரு கோயிலின் தர்மகர்த்தா எவ்வாறு கோயிலுக்கென்று மக்களாலும் அரசாங்கத்தாலும் அளிக்கப்பெறும் நிதியைத் தன்னுடையது என நினைக்காமல் கோயிலுக்காகவும் அங்கு வரும் பக்தர்களின் நலன்களுக்காகவும் செலவு செய்கிறாரோ, அதே போலவே ஒவ்வொரு செல்வந்தனும் தனது செல்வம், மக்களின் உழைப்பின் பயனால் வந்த ஒரு தர்மநிதி (Trust) என உணர்ந்து, தனது சொந்த செலவுக்காகத் தேவையான பணத்தை மட்டும் எடுத்துக் கொண்டு மீதியை ஏழைத் தொழிலாளிகளின் நன்மைக்காகவே செலவிட வேண்டும் என்பதே தர்மகர்த்தா முறையாகும். தொழிலாளர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்துவிட்டால், வேலை நிறுத்தம் ஏற்படவே வழியில்லை என்ற உண்மையை இன்றைய முதலாளிவர்க்கத் தலைமையை வகித்து வரும் அமெரிக்கா நன்கு உணர்ந்துள்ளது. அங்குள்ள முதலாளிகள் தொழிலாளியின் வீட்டுச் செலவு, கல்விச் செலவு, மருத்துவச் செலவு யாவற்றையும் ஏற்றுக்கொள்வதோடு, நல்ல ஊதியத்தையும் வழங்குகின்றனர். தங்கள் தொழிற்சாலைகளின் பங்குகளை அவர்களுக்கே பெரும்பாலும் விற்கின்றனர். தொழிலில் வரும் லாப நஷ்டங்களில் தொழிலாளிகளும் பங்கு பெறும்படி செய்து விடுகின்றனர். நல்லப்பரும் அதே முறையைத்தான் கையாண்டார். மக்கள் நலன் கருதிய அரசு (welfare state) என்று மேற்கண்ட முறை அழைக்கப்பட்டு இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் நடை முறைப்படுத்தப்பட்டு வருகிறது. காந்திஜியின் சர்வோதயமும், தர்மகர்த்தா முறையும் இணைந்ததே அம்முறை என்பதில் ஐயமில்லை. இம்முறையால் கார்ல் மார்க்ஸ் கூறிய வர்க்கப் போராட்டம் அறவே தவிர்க்கப்படுகிறது. இத்தகைய உயர்ந்த கருத்தையே நாமக்கல் கவிஞர் தமது "மாமன் மகள்" என்ற நாடக நூல் மூலம் தமிழக மக்களுக்கு விளக்கமாக எடுத்துக் கூறியுள்ளார்.

# இலக்கிய இன்பம்

"இலக்கிய இன்பம்" என்ற இந்நூல் நாமக்கல் கவிஞரின் எட்டு ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கொண்டது. அவற்றுள் இறுதியில் வருகின்ற "மெய்ஞ்ஞானம்" என்ற கட்டுரையில்தான் அவர் காந்தியக் கொள்கைகளைக் கம்பன் வாயிலாகவே எடுத்துக் காட்டுகிறார். காந்தியத்தின் முக்கியக் கொள்கைகள் இரண்டு; அவை "கொல்லாமை, பொய்யாமை" என்பதாகும். இவற்றுள் கொல்லா விரதமே தலை சிறந்தது. தமிழ் இலக்கியங்களும் இக்கொல்லா விரதத்தைப் பொன்னே போல் போற்றி வந்துள்ளன என்பது கவிஞரின் கருத்து. அவர் கூறுவதாவது:

> "கொல்லா விரதத்தை நெடுங்காலமாகத் உயிரெனப் போற்றி வந்தவன் தமிழன். கொல்லா விரதத்துக்குச் சிறப்புத் தராத தமிழ் இலக்கியமே இல்லை. தமிழ் வாழ்க்கையின் சிகரமாகிய இக்கொல்லா விரதத்தைப் பற்றிக் கொஞ்சமாவது பேசாமலிருப்பது தமிழுக்குத் தலை சிறந்த காவியத்தை இயற்றிய கம்பன் என்ற தமிழனுக்கு இயலாதது.
>
> ஆதலால், கம்பன் இந்தக் கொல்லா விரதமே, மனிதனுடைய எல்லா விரதத்திலும் மேலானதென்பதையும் அந்தக் கொல்லா விரதத்தின் வழியில் ஒரு நல்ல காரியத்தைச் சாதிக்க முடியாவிட்டால், அதற்காகப் பட்டினி கிடந்து இறந்து போவதே புகழுடையது என்றும் மகாத்மா காந்தி சொல்லுவதைப் போலவே சொல்லுகிறான். அதையும் இராவணனைக் கொல்லவென்றே அவதரித்த அந்த இராமன் வாக்கில் புகுத்தியே சொல்ல வைக்கிறான். அதை நாம் படிக்கிறபோது நமக்கு உண்டாகும் இலக்கிய இன்பம் அளவற்றதாகும்"[1] என்பதாகும்.

இராமபாணம் பாய்ந்து உயிரிழந்து இராவணன் விழுந்து கிடக்கிறான். வீரம் செறிந்த இராவணனை, "காதலித்த உருவாக அறம் வளர்க்கும் கண்ணாளன் தெரியக் கண்டான்" என்றபடி, தர்மத்தை வளர்க்கும் காவலனாகிய இராமனே, விரும்பத் தக்க கம்பீர

---

1. நாமக்கல் கவிஞர் "இலக்கிய இன்பம் ப.268, பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 600 014, 1994.

உருவமாகிய இராவணனுடைய உடலை ஆசையோடு நன்றாக அருகிற் சென்று பார்த்தான். உயிரோடிருந்ததை விட மும்மடங்கு பொலிவுடன் அவனது முகம் விளங்குவதைக் கண்டான். அந்தக் களைபொருந்திய கம்பீர வடிவத்தைக் கண்ட இராமனுக்குப் பச்சாதாபமும் கவலையும் கருணையும் ஒருங்கே உதித்துத் தன்னைத் தானே நொந்து கொண்டு தன் மனத்தில் எழுந்த சிலபல எண்ணங்களை அருகிலிருந்த வீடணனிடம் எடுத்துக் கூறுகிறான். அந்த எண்ணங்களாவன "அடே! இவ்வளவு கம்பீரமும், களையும், கல்வியும், அழகும், ஆற்றலும் கொண்ட இவனை நாம் வசப்படுத்தி இவனுக்கு நல்லறிவு வரும்படியாக மனமாற்றத்தை உண்டாக்கி, இவனையும் வாழவைத்து, நாமும் களிப்படையாமல், இந்தக் கொலைத் தொழிலால் அடைந்த வெற்றி உண்மையான வெற்றியாகாது. இது பொய்யான வெற்றி, இவனைக் கொன்றதைக் காட்டிலும் நான் பட்டினி கிடந்து இறந்து போயிருந்தால் அழியாத புகழாவது கிடைத்திருக்கும்" என எண்ணுகிறான்.[2] "இது தான் காந்தியத்தின் எண்ணம். தான் தியாகம் செய்து, துன்பங்களைச் சகித்துக்கொண்டு, எதிரிக்கு நல்லுணர்வு வரக்கூடிய மனமாறுதலை உண்டாக்க வேண்டும். அது முடியாவிட்டால் பட்டினி கிடந்து செத்துப் போக வேண்டுமேயல்லாமல் கொலைத்தொழிலில் இறங்கிவிடக் கூடாது என்பதுதான் காந்தியத்தின் கருத்து. மூன்று பாட்டுகளால் கம்பன் மேற்சொன்ன காந்தியக் கருத்துகளை இராமனது வாக்கால் வெகு தெளிவாகச் சொல்லுகிறார்[3] என்கிறார் கவிஞர். மேலும் இதுவரையில் இப்பாடல்களுக்குச் சரியான பொருள் சொல்லவில்லையென்றும், அதற்குக் காரணம் காந்திஜியைப் போன்ற உதாரண புருஷனை அவர்கள் காணாததேயாகும்" என்றும் கூறுகிறார்.[4] இராமன் விபீஷணனிடம் கூறுவதாக அமைந்துள்ள பாட்டுகள் வருமாறு:

வென்றியால் உலகம் மூன்றும்
　　மெய்ம்மையான் மேவினாலும்
பொன்றி ஆர்க்கின்ற தோளைப்
　　பொதுவற நோக்கும் போது
குன்று ஆசுற்ற தன்றே
　　இவனெதிர்க் குறித்த போரில்
பின்றியான் முதுகிற்பட்ட
　　பிழம்புள தழும்பின் அம்மா[5]

இதன் பொருளாவது,

---

2. மேலது நூல், ப.218.
3. மேலது நூல், ப.217-218.
4. மேலது
5. மேலது நூல், ப.219.

"விபீஷணா! இராவணனைக் கொன்று விட்டேன். அதனால் வென்று விட்டேன். இந்த வெற்றியால் இராவணனின் ஆதிக்கத்துக்குட்பட்ட மூன்று லோகங்களையும் நான் அடைந்து விட்டேன் என்பது உண்மை. அதனால் என்னுடைய தோள்கள் பூரித்துக் குலுங்குகின்றன. ஆனால் எனது இந்தக் கொலைத் தொழிலைப் பொதுவாக மக்கள் பார்க்கின்ற பார்வையில் பார்க்காமல், எனக்கே உரிய தனிப்பட்ட பார்வையில் பார்க்கும்போது, எனது தோள் ஆற்றலின் பெருமை குறைந்து போய் குற்றமுள்ளதாகி விட்டது என்றே தோன்றுகிறது. நான் போரில் புறமுதுகிட்டு ஓடி, முதுகில் அடிபட்டு, அதனால் அழியாத (அபகீர்த்திச் சின்னமான) தழும்பை அடைந்து விட்டவனைப் போல் என் மனம் வருந்துகின்றது என்பதாகும்.

வெகுபாடுபட்டு அடைந்த வெற்றியைத் தோல்வி என இராமன் நினைத்ததற்குக் காரணம் என்ன என்பது அடுத்த பாடலில் கூறப்படுகிறது.

**கார்த்த வீரியன் என்பானால்**
**கட்டுண்டான் எனக் கற்கும்**
**வார்த்தை உண்டு, அதனைக் கேட்டு**
**நாணுறும் மனத்தினேற்கு**
**போர்த் தொழில் பிறகிட்டு ஏற்ற**
**புண்ணுடைத் தழும்பு போலாம்**
**நேர்த்தலும் காண லுற்ற**
**ஈசனார் இருக்கை நிற்க[6]**

இப்பாடலில் இராமன் இரண்டு நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து வெட்கப்படுகிறான். ஒன்று சிவபெருமான் இருப்பிடமாகிய கயிலையைப் பெயர்த்தெடுக்க இராவணன் முயற்சித்தபோது சிவபெருமான் தன்பெருவிரலால் மலையை அழுத்தி அவனைத் திக்கு முக்காடச் செய்ததும், அதன் விளைவாகச் சாமவேத கீதம் பாடிச் சிவனை மகிழ்வித்து அவன் விடுதலை பெற்று வெற்றி வாளையும் நீண்ட ஆயுளையும் சிவபிரானிடமிருந்து வரங்களாகப் பெற்றது பற்றிய நிகழ்ச்சியாகும். சிவபெருமானையே அசத்தி அவரிடமிருந்து மன்னிப்பைப் பெற்றுப் பரிசுகளையும் வாங்கிய ஒரு வீரனை நாமும் மன்னித்துப் புகழடையாமல் அவனை அநிநாயமாய்க் கொன்று விட்டோமே என இராமன் பச்சாத்தாபப்படுகிறான்.

---

6. மேலது நூல், ப.220-221.

அடுத்தது, கார்த்த வீரியன் என்ற ஒரு கந்தர்வன் இராவணனைப் பிடித்துக் கொண்டு போய், தனது குழந்தையின் தொட்டிலின் மீது, பத்துக்கால் சிலந்தியைப் போல் கட்டித் தொங்க விட்டுத் தன் குழந்தைக்கு விளையாட்டு காட்டின நிகழ்ச்சியாகும். ஒரு சாதாரணக்கந்தர்வனால் பிடிபட்ட இராவணனைத் தானும் அப்படி உயிரோடு பிடித்து அவன் மனத்தை மாற்ற முடியவில்லையே என்ற வெட்கம் இராமனை வாட்டலாயிற்று. எனவேதான், தனது வெற்றி அவருக்குப் பெரிதாகத் தெரியவில்லை. வெட்கப்படத்தக்க தோல்வியாகவே தோன்றியது. அதோடு போரில் புறமுதுகிட்டு ஓடியது போலவும், அதனால் ஏற்பட்ட புண் இன்னும் ஆறாத தழும்பாக இருப்பது போலவும் அவன் உணர்கிறான். இராவணனைக் கொல்லாமல் விட்டுவிட்டு அவனது மனத்தையும் நல்வழிக்குத் திருப்ப முடியாமல் போய் விட்டால் என்ன செய்வது என அவனது மனம் கலங்குகிறது. அப்படி நடந்து விட்டால், பட்டினி கிடந்து (உண்ணாவிரதமிருந்து) அவனைத் திருத்த முயற்சிக்க வேண்டும். அதுவும் முடியா விட்டால் உண்ணாவிரதம் இருந்து அப்படியே மாண்டு போயிருக்க வேண்டும். அப்படிச் செய்திருந்தால் ஆஹா! இவர் எவ்வளவு பெரிய மகான் என உலகம் புகழ்ந்திருக்கும். அவ்வழியாத புகழை அடையாமல் கேவலமான கொலைத்தொழிலைச் செய்து நீங்காத அவமானம் அடைந்துவிட்டேனே. இப்போது எனக்குக் கிடைத்தது நிலையான புகழ் அல்ல. என்னை ஏளனம் செய்ய நினைப்பவர்களுடைய ஏளனச் சிரிப்பேயன்றி வேறொன்றுமில்லை', என இராமன் புலம்புகிறான்.[7] இக்கருத்தை விளக்கும் மூன்றாவது பாடல் வருமாறு:

மாண்டொழிந்து உலகில் நிற்கும்
வயங்கிசை (புகழ்) முயங்க மாட்டாது
ஊண் தொழில் உகந்து தெவ்வர் (பகைவர்)
முறுவல் என் புகழை உண்ண
பூண்தொழில் அமைந்த மார்பா!
போர்புறங் கொடுத்தாற் போன்ற
ஆண்தொழிலோரிற் பெற்ற
வெற்றியும் அவத்தம்

என்றான். "தான் பெற்ற வெற்றி அவத்தம்" என்று இராமன் சொல்வதைப் பார்க்கும்போதுதான், மகாத்மா காந்தியவர்கள் கடைப்பிடித்து நடந்து காட்டி, உபதேசித்த அஹிம்சா மார்க்கத்தையேதான் கம்பன் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே சொல்லியிருக்கிறான் என்பது விளங்கும்." "என்று முள தென்றமிழ்" என்று கம்பன் தமிழைப் பற்றிச் சொன்னதன் உண்மையும் உணரலாம்[8] என்று கவிஞர் விளம்புகிறார்.

7. மேலது நூல், ப.221. 8. மேலது நூல், ப.226.

# தாயார் கொடுத்த தனம்

தாயார் கொடுத்த தனம் என்ற நூலில் காந்தியக் கொள்கைகளில் தனக்கு ஈடுபாடு ஏற்படுவதற்கு மூல காரணம் தனது தாயார்தான் என்கிறார். சிறு வயதில் அவர் சிறுசிறு குறும்புத் தனங்களில் ஈடுபட்டபோது அவரது தாயார் அடிக்கடி அவரிடம் கூறி வந்த உபதேசம் என்னவெனில் "பொய் சொல்லாதே! என்பதாகும். தன் சிறு பிராயத்தில் தன் தாயார் தினம் தினம் குறைந்த பட்சம் மூன்று தடவையாவது இதைச் சொல்லித் தந்து அவரையும் திருப்பிச் சொல்லச் சொல்வார்களாம்.

"இந்த உபதேசத்தின் நினைவினால் தான், மகாத்மா காந்தியவர்களிடத்தில் எனக்கு மட்டற்ற பிரேமை ஏற்பட்டது. . . " பொய் பேசாதே, போக்கிரி என்ற பெயர் எடுக்காதே" என்ற இரண்டும் தான் மகாத்மாவின் 'சத்தியம் அஹிம்சை' என்ற இரண்டு மந்திரங்களும் என்பது பின்னால் எனக்கு விளங்கிற்று எனக் கவிஞர் இக்கட்டுரையில் கூறுகிறார்.[1]

இவ்வுபதேசத்தைத் தான் தன் வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்து வந்ததாயும் மறந்தும்கூடத் தன்னால் பொய்பேச முடிவதில்லை என்றும் கூறி அதற்குச் சான்றாகத் தன் பள்ளி வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் காட்டுகிறார்.

இந்நிகழ்ச்சி கவிஞர் ஆறாம் வகுப்பு (VI Form-இக்கால S.S.L.C.) படித்துக் கொண்டிருந்த போது நடந்தது. அக்காலத்தே S.S.L.C. இறுதித் தேர்வு நடைபெறுவதற்கு முன் பொறுக்குத் தேர்வு (Selection examination) என்ற ஒரு தேர்வு நடைபெறும். அதில் தேர்ச்சி பெறாதவர்கள் இறுதித் தேர்வுக்கு அனுப்பப்படமாட்டார்கள். S.S.L.C.இறுதித் தேர்விலும் ஒவ்வொரு மாணவனும் எல்லாப் பாடங்களிலும் நூற்றுக்கு 42 மதிப்பெண்களுக்குக் குறையாமல் பெற வேண்டும். ஏதாவது ஒரு பாடத்தில் சராசரி மதிப்பெண்கள் பெறாவிட்டாலும் அவன் தேர்வில் தோல்வி பெற்றதாகவே கருதப்படுவான். மீண்டும் அடுத்த ஆண்டில் தேர்வு எழுதி எல்லாப்

---

1. நாமக்கல் கவிஞர் வெ.இராமலிங்கம் பிள்ளை,தாயார் கொடுத்த தனம் ப.17-18 ஜெயம் கம்பெனியார், சென்னை, 1956.

பாடங்களிலும் குறைந்த பட்ச மதிப்பெண்கள் பெறவேண்டுமென்பது சட்டம். கவிஞர் கணிதம் தவிர மற்றெல்லாப் பாடங்களிலும் நல்ல மதிப்பெண்கள் பெற்றுப் பரிசுகளும் பெறுவார். ஆனால் கணக்கில் மட்டும் அவர் நூற்றுக்கு இருபது மதிப்பெண்களுக்கு மேல் வாங்கியதில்லை. சில சமயம் ஒன்று, இரண்டு பூஜ்யம் என்று கூட மதிப்பெண்கள் பெறுவார். கவிஞர் (VI Form) ஆறாம் வகுப்பு. படித்துக் கொண்டிருந்த போது பொறுக்குத் தேர்வுக்கு ஒரு மாதத்துக்கு முன்னால் பரிசளிக்கும் விழா ஒன்று நடை பெற்றது. அதுவே ஆண்டு விழாவுமாகும். அதில் கவிஞர் கணிதம் தவிர மற்றெல்லாப் பாடங்களிலும் பரிசுகளைப் பெற்றார். அதைக் கண்ட சுப்பையர் என்ற கணித ஆசிரியர் அவரை அழைத்து "இதோ பார்" இந்தத் தடவை செலக்ஷன் பரீட்சையில் நீ கணக்கில் நல்ல மார்க் வாங்காவிட்டால் உன்னை எங்கப்பராணை பரீட்சைக்கு அனுப்பப் போவதில்லை என்று எச்சரித்துவிட்டுச் சென்று விட்டார். எங்கப்பராணை என்று சுப்பையர் சபதம் போட்டுப் போய்விட்டதால், தான் பொறுக்குத் தேர்வில் வெற்றிபெறப் போவதில்லை என்ற கிலி கவிஞருக்குப் பிடித்துக் கொண்டு விட்டது. அன்று இரவு அவருக்குத் தூக்கம்கூட வரவில்லை. மறுநாள் பள்ளிக் கூடம் போகாமல் விடுமுறை போட்டுவிட்டு வீட்டிலேயே படுத்துக் கிடந்தார்.

மாலையில் கால் பந்தாடச் சென்றார். அதற்கும் உற்சாகம் வராததால் பந்தாட்ட மைதானத்தில் ஒரு மூலையில் போய்க் கவலையோடு உட்கார்ந்திருந்தார். அப்போது அவருடைய நண்பனும் சக மாணவனுமாகிய இராமநாதன் என்பான் அவரை வீட்டுக்குப் போய்த் தேடி விட்டுப் பந்தாட்ட மைதானத்துக்கு வந்து பந்து விளையாடாமல் கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்த இராமலிங்கத்தை அணுகி அவனுடைய கவலைக்குக் காரணமென்ன வென்று விசாரித்தான். சுப்பையர் செய்த எச்சரிக்கைதான் தனது கவலைக்குக் காரணம் என அவர் பதில் கூறிய போது, இராமநாதன் தன் நண்பனின் கவலையைப் போக்க ஒரு யோசனை கூறினான். அவன் கணக்கில் புலி. நூற்றுக்கு நூறு அந்தப் பாடத்தில் வாங்குவான். ஆனால் மற்ற பாடங்கள் எல்லாவற்றிலும் தோல்வி மதிப்பெண்களே பெறுவான். எனவே அவன் இராமலிங்கத்தைப் பார்த்து "நீ அரித்மெடிக் எனும் கணக்கு விடைத்தாளில் முடிந்த வரையில் கணக்குகளைப் போட்டு சில பக்கங்களை நிரப்பிவிட்டு மடித்துப் பெயர் எழுதும் போது மறக்காமல் S. ராமநாதன் என்று பேர் எழுதி வைத்து விடு. நான் உனக்கு வேண்டிய அளவு கணக்குகளைப் போட்டு, ப.ராமலிங்கம் என்று பெயர் எழுதி

வைத்துவிடுகிறேன். . .நான் கணக்கில் தவிர மற்றெல்லாப் பாடங்களிலும் பெயில் மார்க் வாங்குகிறவன். எப்படியும் எனக்கு செலக்ஷன் கிடைக்காது. ஆனால் கணக்கில் மட்டும் பெயிலாகி அதனால் உனக்கு செலக்ஷன் கிடைக்காமல் போகக் கூடாது. நான் சொல்கிறபடி செய்தால் உனக்கு செலக்ஷன் நிச்சயம்" என்று கூறினான்[2] இராமலிங்கமும் அந்த ஆலோசனையை ஏற்றுக் கொண்டார். பொறுக்குத் தேர்வு வந்தது. தன்னுடைய கணக்கு விடைத்தாளில் இராமலிங்கம் என்று ராமநாதன் பெயர் எழுதிவிட்டு வந்துவிட்டான். ஆனால் இராமலிங்கம் தனது விடைத்தாளில் ராமநாதன் என்று எழுதாமல் இராமலிங்கம் என்றே எழுதிவிட்டு வந்துவிட்டான். விடைத்தாள்களைத் திருத்திய சுப்பையர் இராமலிங்கம் என்ற பெயரில் இரண்டு விடைத்தாள்களிருப்பதைக் கண்டு, இராமலிங்கத்தைக் கூப்பிட்டுக் கடுமையாக விசாரித்தார். கவிஞர் தனக்கும், ராமநாதனுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தைப் பற்றிக் கூறி ராமநாதன் தான் சொன்ன வாக்கைக் காப்பாற்றி விட்டான். நான் தான் மறந்து என் பெயரையே எழுதிவிட்டேன். மன்னிக்கவும் என்று அவரது கால்களில் விழுந்து மன்னிப்பு வேண்டினார். சுப்பையரும் மனமிரங்கி இராமலிங்கம் ராமநாதன் இருவருக்கும் பாஸ்மார்க் போட்டுவிட்டார் எனக் கவிஞர் கூறுகிறார்.[3] மறந்தும் பொய் சொல்ல இயலாத நிலை தனக்கு ஏற்பட்டதற்குக் காரணம் சிறுவயதில் தான் தாயாரால் தன் மனத்தில் பதித்துவிட்ட பொய் சொல்லாதே; போக்கிரி என்ற பெயர் எடுக்காதே என்ற தாரக மந்திரமேயாகும் என்றும் அதுவே தனக்குத் தன் தாயார் கொடுத்த தனம் என்றும் முடிக்கிறார்[4] நாமக்கல் கவிஞர்.

2. மேலது நூல், ப.15. 3. மேலது நூல், ப.21. 4. மேலது நூல், ப.22.

# தமிழன் கண்ட அரசு

1987-இல் வெளியிடப்பட்ட இந்நூலில் ஒன்பது கட்டுரைகள் அடங்கி உள்ளன. அவற்றுள் பெரும்பாலான கட்டுரைகளில் காந்திய மணம் வீசுவதைக் காணலாம். அவற்றுள் நேரிடையாகவோ மறைமுகமாகவோ காந்திஜியின் கொள்கைகளைப் பெய்து வைத்துள்ளார் கவிஞர். அவற்றிலிருந்து காந்தியத்தில் கவிஞருக்கு இருந்த உறுதியான பற்று நமக்குத் தெள்ளிதின் புலப்படுகின்றது.

### 1. காந்தியப் புலவன் பாரதி

இந்தக் கட்டுரையில், எவ்வாறு பாரதி தீர்க்க தரிசனமாக காந்திய மார்க்கத்தின் தனிச்சிறப்பையும் அதன் மூலம் இந்தியா விடுதலை பெறப்போகிறது என்பதையும் தமது இறுதிக் காலப் பாடல்களில் தெளிவாகக் கூறுகிறார் என்பதைக் கவிஞர் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். கவிஞர் இதுபற்றிக் கூறும்போது மகாத்மா காந்தியவர்கள், அவருடைய அறப்போரை ஆரம்பிப்பதற்குப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னாலேயே அதற்காக நம்மைப் பக்குவப்படுத்த வைத்தது பாரதியின் பாடல்க்ளேயாகும். காந்தியடிகளின் சாத்வீகப் போரின் முறையையும் அதன் நுணுக்கங்களையும் இருந்து பார்க்கப் பாரதியார் இல்லாமல் போனார். ஆனாலும் காந்தியடிகளால் தான் இந்நாட்டிற்கு விடுதலை கிடைக்கப் போகிறது என்று தீர்க்கதரிசனம் சொல்லி, நம்மெல்லோரையும் காந்திமார்க்கத்தைக் கடைப்பிடிக்கும்படி கற்பித்துப் போனவர் பாரதியே- இது உண்மை; வெறும் கற்பனையல்ல[1] என்று அறுதியிட்டுச் சொல்கிறார் கவிஞர்.

"காந்தியடிகளின் அறப்போருக்கு அத்தியாவசியமான அடிப்படை அச்சமற்ற தன்மை. அச்சத்தை ஒழிக்க வேண்டும். அன்பை வளர்க்க வேண்டும். சத்தியத்தைக் காக்க வேண்டும். இந்த மூன்றின் சேர்க்கைதான் சத்தியாக்ருஹம்"[2] என்று சத்தியாக்கிரகத்தை

---

1. நாமக்கல் கவிஞர், "தமிழன் கண்ட அரசு", பாரதிபதிப்பகம், சென்னை-600017, 1987, பக்.6-7. 2. மேலது நூல், ப7.

வரையறுத்து விட்டுப் பாரதி எவ்வாறு இக்கருத்தை வற்புறுத்தினார் என்பதைக் கவிஞர் எடுத்துக் காட்டுகிறார்.

அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே
உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே
இச்சகத்து ளோரெலாம் எதிர்த்துநின்ற போதிலும்
அச்சமில்லை அச்சமில்லை அச்ச மென்பதில்லையே

என்று அச்சத்தை விரட்டியடிக்கிறார் பாரதியார் என்று கூறும் கவிஞர், அச்சம் போயொழிதல் வேண்டுமென்பதைப் பாரதியார் வற்புறுத்தும் மேலும் சில பாடல்களையும் எடுத்துக் காட்டுகிறார்.[3]

"அச்சமில்லாத மனத்தில்தான் உண்மையான தைரியம் உண்டாகிறது என்பதும் அதிலிருந்துதான் ஆன்ம பலமுண்டாகிற தென்பதும், அந்த ஆன்மபலத்தைக் கொண்டே, மிருக பலத்தாலும், ஆயுத பலத்தாலும் நம்மை அடிமைப் படுத்தியிருந்த அந்நிய ஆட்சியை வெல்ல முடியும் என்பதுதான் மகாத்மா காந்தியின் போதனையும் போர்முறையுமாகும். அந்தப் போர் முறைக்குச் சாதகமான பாட்டுகளையேதான் பாரதியார் பாடித் தந்து நம்மைப் பழக்கி வைத்திருந்தார். அந்த அச்சம் நீங்கிய தைரியத்தை

சதையைத் துண்டு துண்டாக்கினும் உன்
　　எண்ணம் சாயுமோ—ஜீவன்—ஓயுமோ
இதயத்துள்ளே இலங்கும் மகாசக்தி
　　ஏகுமோ உயிர்—வேகுமோ[4]

என்ற பாட்டில் பார்க்கிறோம். மிருக பலத்தை வெல்லுவதற்கு ஆன்ம பலம் வேண்டும் என்று பராசக்தியிடம் பாரதியார் கேட்கிறார்[5]

தோளை வலிவுடையதாக்கி—உடல்
சோர்வும் பிணி பலவும் போக்கி—அரி
வாளைக் கொண்டு பிளந்தாலும்—கட்டு
மாறா மனஉறுதி தந்து—சுடர்
நாளைக் கண்ட மலர்போலே— ஒளி
வேளை வெல்லும் முறை கூறி—தவ
மேன்மை கொடுத்தருளல் வேண்டும்

என்ற பாரதியின் பாட்டைக் கவிஞர் எடுத்துக்காட்டி "இந்தப் பாட்டு அச்சமற்ற தைரியத்தினால் உதிக்கின்ற ஆன்மபலம், மிருக

---

3. மேலது நூல், ப.9.　　4. மேலது　　5. மேலது.

பலத்தினாலும், ஆயுத பலத்தினாலும் வருகின்ற ஹிம்சையைப் பொருட்படுத்தாது என்றும் அதுதான் தபோ பலம் என்றும், மகாத்மா காந்தி அடிக்கடி சொல்லி வருவதற்குச் சரியான கருத்துக்கள் அடங்கிய பாட்டு ஆகும்" என்று கூறுகிறார்.

காந்தியடிகள் சத்தியாக்கிரகத்திலீடுபட்டு ஆங்கில அரசின் கையாட்களால் அடிஉதைபட்டு மரணமடையவேண்டும் என்பதை "யங்இந்தியா" என்ற பத்திரிகையில் எழுதியிருந்ததாகவும் அதை அப்படியே மொழிபெயர்த்துத் தான் கீழ்க்கண்டவாறு ஒரு பாட்டு எழுதியுள்ளதாகவும் கவிஞர் கூறுகிறார். அப்பாட்டு வருமாறு

**குத்தீட்டி ஒரு புறத்தில் குத்த வேண்டும்**
**கோடாரி மறுபுறத்தைப் பிளக்கவேண்டும்**
**ரத்தம் வரத் தடியடியால் ரணமுண்டாக்கி**
**நாற்புறமும் பலர் உதைத்து நலியத்திட்ட**
**அத்தனையும் நான்பொறுத்து அஹிம்சை காத்து**
**அனைவரையும் அதன்படி நடக்கச் செய்து**
**ஒத்து முகம் மலர்ந்து உதட்டில் சிரிப்பினோடும்**
**உயிர்துறந்தால் அதுவே என் உயர்ந்த ஆசை**[6]

காந்திஜியின் இந்த விருப்பத்தை இறைவன் நிறைவேற்றி வைத்தார். ஆங்கில அரசின் கையாட்களால் அடி உதைபட்டு மரண மடையாமல், இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்ட ஒரே குற்றத்துக்காக ஒரு இந்து வெறியனின் துப்பாக்கிக் குண்டடி பட்டு "ராம் ராம்" என உச்சரித்துக் கொண்டே மலர்ந்த முகத்துடன் (முகம் மலர்ந்து உதட்டில் சிரிப்பினோடும் என்று மேற்கண்ட செய்யுளில் வருவது போல) மரணமடைந்தார். அதையே கவிஞர் "எப்படி விரும்பினாரோ அப்படி இறந்தார் காந்தி"[7] என்று பாடியுள்ளார்.

"எனவே காந்தியடிகளின் அறப்போருக்கு மிகவும் அவசியமாயிருந்த அச்சமற்ற ஆன்மபல விருப்பத்தைப் பாரதியார் ஏற்கெனவே அரசியல் போரட்டத்துக்காகப் பாடின பாடல்களோடு சேர்த்துப் பாடித்தந்து அந்தத் தத்துவத்தில் நமக்குப் பயிற்சி யுண்டாக்கியிருந்தார். . . நாம் இன்று அடைந்துள்ள விடுதலைக்காக நடந்த போராட்டங்களுக்கென்றே இந்த ஆன்ம தைரியத்தைப்

---

6. மேலது நூல், ப.11.
நாமக்கல் கவிஞர் பாடல்கள்-பகுதி, ப. மணிமேகலை பிரசுரம், தி.நகர்.

7. நாமக்கல் கவிஞர் பாடல்கள், ப. மணிமேகலை பிரசுரம், தி.நகர்.

பாட்டாகப் பாடித் தந்தவர் பாரதியார். அதைக் காரியத்தில் சாதித்தவர் காந்திதான்"[8] என்கிறார் கவிஞர்.

சத்தியாக்கிரகத்துக்கு அவசியமான அச்சமின்மையைப் பற்றிப் பாடிய பாரதி, அதற்கடுத்தபடியாகத் தேவைப்படும் அன்பைப் பற்றியும் பல இடங்களில் பாடியுள்ளார் சான்றாக,

ஆவியினுள்ளும் அறிவினிடையிலும்
அன்பை வளர்த்திடுவோம்[9]

என்பதும் எல்லா உயிர்களும் கடவுளின் இருப்பிடம் என்றுணர்ந்து அவற்றின்பால் அன்பு செலுத்தி ஜீவஹிம்சை செய்யாதிருப்பதே சிறந்த அறம் என்பதும் பாரதியின் கருத்து. அதுவே காந்திஜியின் கருத்துமென்பதைக் கவிஞர் பின்வரும் பாரதியின் பாட்டைக் கொண்டு நிரூபிக்கிறார்.

பொன்னார்ந்த திருவடியைப் போற்றி இங்கு
புகலுவேன் யானறியும் உண்மையெல்லாம்
முன்னோர்கள் எவ்வுயிரும் கடவுள் என்றார்
முடிவாக அவ்வுரையே நான் மேற் கொண்டேன்[10]

மேலும் விடுதலை ஆர்வத்தைக் கெட்டியாக யாவரும் பிடித்துக் கொள்ள வேண்டுமென்பதையும் பாரதியார் ஓரிடத்தில் பின்வருமாறு கூறுகிறார்.

மன்னும் ஒரு தெய்வத்தின் சக்தியாலே
வையகத்தில் பொருளெல்லாம் சலித்தல் கண்டாய்
பின்னை ஒரு கவலையும் இங்கில்லை, நாளும்
பிரியாமல் விடுதலையைப் பிடித்துக் கொள்வாய்[11]

அப்படிப் "பிரியாமல் விடுதலையைப் பிடித்துக் கொண்டு "அந்த விடுதலையை அடைவதற்குப் பரம்பொருளிடத்தில் மகாகவி வரம் வேண்டுகிறார். அந்த வரத்தைப் பாரதி தமக்கு மட்டும் கேட்கவில்லை. நாம் ஒவ்வொருவரும் அந்த வரத்தைப் பெற வேண்டும்" என்கிறார்.[12]

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி
அகத்திலே அன்பின் ஓர் வெள்ளம்
பொறிகளின் மீது தனியாசாணை
பொழுதெலாம் நினது பேரருள்
நெறியிலே நாட்டம்; கருமயோகத்தில்
நிலைத்திடல்; என்றிவை அருள்வாய்

---

8. தமிழன் கண்ட அரசு, ப.12.
9. மேலது நூல், ப.8.
10. மேலது நூல், ப.14.
11. மேலது நூல், ப.15.
12. மேலது நூல்,

குறிகுணம் ஏதும் இல்லாதாய், அனைத்தாய்
குலவிடும் தனிப்பரம் பொருளே[13]

என்பது பாரதியின் பாடல்.

ஒரு சத்தியாக்கிரகிக்கு அவசியமான குணநலன்கள் யாவையும் பற்றிப் பாரதியார் இப்பாடலில் கூறிவிட்டார். தெளிந்த அறிவு, மனஉறுதி, உயிர்கள் பால் அன்பு, இந்திரியக் கட்டுப்பாடு, இறைவழிபாடு, பயன்கருதாது கருமங்களைச் செய்து கொண்டே போதல் இவையே சத்தியாக்கிரகிக்கு வேண்டிய குணங்கள்.

இதுதான் காந்தியத்தின் பூரண வடிவம். இந்தப் பாடலைப் பாரதியார் தம்முடைய சுயசரித்திரத்தின் கடைசிப் பாட்டாகப் பாடியிருக்கிறார். பாரதியாரின் வாழ்க்கை லட்சியமும் இதுதான். அவருடைய எல்லாப் பாடல்களையும் சேர்த்து வடித்தெடுக்கக்கூடிய ரஸமும் இதுதான்[14] எனக் கவிஞர் கட்டுரைக்கிறார்.

இப்படிக் காந்தியத்தைப் பெயர் சொல்லாமல் முன்னாலேயே வரித்துக் கொண்ட பாரதியார், அப்படிப்பட்ட கொள்கைகளின் வடிவமாகக் காந்திஜி உண்மையாகவே வந்துவிட்டதைக் கண்ட போது துள்ளிக்குதித்து எதிர் கொண்டோடி "வாழ்க நீ எம்மான்" என்று பஞ்சகம் பாடி வரவேற்றார். பாரத நாட்டை விடுவிக்க அவர் வகுத்த ஒத்துழையாமை இயக்கத்தைப் பாராட்டினார். அவரை அநுமனோடும், கண்ணனோடும் ஒப்பிட்டு மகிழ்ந்தார். அப்படி அவர் புகழ்ந்த பாடல் வருமாறு,

கொடிய வெம் நாகபாசத்தை மாற்ற
மூலிகை கொணர்ந்தவன் (அநுமன்) என்கோ
இடிமின்னல் காக்கும் குடை செய்தான் என்கோ
(கண்ணன்)
என்சொலிப் புகழ்வது இங்குளையே
விடிவிலா துன்பம் செய்யும் பராதீன (ஆங்கில)
வெம்பிணி அகன்றிடும் வண்ணம்
படிமிசை புதிதாச் சாலவும் எளிதாம்
படிக்கொரு சூழ்ச்சி நீ படைத்தாய்
பெருங்கொலை வழியாம் போர்வழி இகழ்ந்தாய்
அதனினும் திறன் பெரிதுடைத்தாம்
அருங்கலை வாணர் மெய்த்தொண்டர் தங்கள்
அறவழி என்று நீ கண்டாய்:
நெருங்கிய பயன்சேர் "ஒத்துழையாமை"

---

13. மேலது நூல்

14. மேலது நூல், ப.16.

நெறியினால் இந்தியாவிற்கு
வரும் கதி கண்டு பகைத் தொழில் மறந்து
வையகம் வாழ்க நல் அறத்தே

இந்தப் பாடல் மூலம், காந்திஜியின் சத்தியாக்கிரகம், (அறவழி) ஒத்துழையாமை இயக்கம் பற்றிப் பாரதியார் தீர்க்க தரிசனமாகக் கூறியுள்ளார் என்பதைக் கவிஞர் எடுத்துக் காட்டுகிறார். அடுத்துக் காந்திஜியைப் பற்றியும் பாரதி எவ்வாறு புகழ்ந்துபாடி, நாமெல்லோரையும் அவரைப் பின்பற்றுமாறு அழைக்கிறார் என்பதையும் அவர் இயற்றியுள்ள இன்னொரு பாடல் மூலமும் நமக்குத் தெளிவுபடுத்துகிறார். அப்பாடலாவது,

சொல்வது கேளீர், புவிமிசை இன்று
மனிதர்க் கெல்லாம் தலைப்படு மனிதன்
தர்மமே உருவாம் மோகன் தாஸ்
கரம் சந்திர காந்தி என்பது காணீர்
அத்தகைய காந்தியை அரசியல் நெறியிலே
தலைவனாக் கொண்டு புவிமிசை தருமமே
அரசியல் அதனினும் பிறஇயல் அனைத்திலும்
வெற்றிதரும் என வேதம் சொல்வதை
முற்றும் பேணுதல் முற்பட்டு நின்றால்
பாரத மக்கள் இதனால் படைஞர் தம்
செருக்கொழிந்து உலகில் அறம் திறம்
கற்றோர் தலைப்படக் காண்போம் வினாவிலே

இப்பாட்டில் பாரதி நமக்குக் கூறுவதாவது:

காந்தியைப் பின்பற்றினால் அரசியல் மட்டுமன்றி, மனித வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் தருமமே தலை சிறந்து நிற்கும். அது மட்டுமா, காந்தியின் தலைமையினால், இவ்வுலகில் இன்று ஆயுத பலத்தைக் கொண்டு மருட்டிவரும் போர்வீரர்களின் கர்வம் ஒழிந்து விடும். பாரத மக்கள் இதனால் அறவழியில் ஆட்சிபுரிந்து இன்புறுவர். இந்தியாவிலும் உலகிலும் தருமத்தினின்றும் சிறிதும் பிறழாத கற்றோர் தலைவர்களாக வரப்போகிறார்கள்[15] என்பதாகும்.

இப்பாட்டிலும் பாரதி தீர்க்க தரிசனமான கருத்துகளையே தெரிவித்துள்ளார். பாரதத்திலும், உலகிலும் போர் முறையை இகழ்ந்து சாத்வீக முறையில் சமாதானத்தை ஏற்படுத்தப் பல கற்றறிந்த தலைவர்கள் தோன்றுவார்கள் எனக் கூறினார். அது போலவே "பஞ்சசீலம்" என்ற கொள்கையின் மூலம் உலக சமாதானத்துக்காக

15. மேலது நூல், ப.18.

ஜவஹர்லால் நேரு பாடுபட்டதை நாம் அறிவோம். ரூஸ்வெல்ட், அட்லி, ஸ்டாலின் போன்றோர் உலகில் போர்களை அறவே ஒழிப்பதற்காக ஐநா. சபையை ஏற்படுத்தியதையும் நாம் அறிவோம். ஆனால் இத்தகைய உலக சமாதான விரும்பிகளின் முயற்சிகள் எல்லாம் வீணாகி, உலகில் எங்குப் பார்த்தாலும், வன்முறைகளும், போர்களும் தாண்டவமாடுவது தான் நம்மெல்லாருக்கும் பெரிதும் ஏமாற்றத்தை அளிக்கிறது. மற்றொரு பாடலில் "காந்தி வழி நடந்து பாரத மக்கள் விடுதலை பெற்று லட்சுமி கடாட்சம் பெற்றுப் பெரிதும் இன்புறுவர்" என்று மற்றொரு தீர்க்க தரிசனமான வாக்கையும் சொல்லிவிட்டு மறைந்தார் பாரதி என்கிறார் கவிஞர். அப்பாடலாவது

**காந்திசேர் பதுமராகக் கடிமலர்வாழ் (ஸ்ரீதேவி)**
**போந்து நிற்கின்றாள் இன்று பாரதப் பொன்னாடெங்கும்**
**மாந்தர் எல்லோருமே சோர்வை அச்சத்தை மறந்துவிட்டார்**
**காந்திசொல் கேட்டார் காண்பார் விடுதலை**
**கணத்தினுள்ளே**[16]

இவ்வாறு "பாரதிப் புலவனுடைய கவிதை முழுவதிலும் காந்தியம் ஒன்றினைத் தான் காண்கிறோம்"[17] என்று கூறிக் கவிஞர் தம் கட்டுரையை முடிக்கின்றார்.

## 2. காந்தி நெறி–சத்திய நோக்கு

இக்கட்டுரையில், மகாத்மா காந்தியவர்களின் இரு முக்கிய கொள்கைகளான அஹிம்சை, சத்தியம் இவற்றுள் சத்தியத்தைப் பற்றித் தமிழ் இலக்கியங்கள் எவ்வாறு பேசியுள்ளன என்பதைக் கவிஞர் ஒரு சில சான்றுகளின் மூலம் எடுத்துக் காட்டுகிறார். உலகப் பொதுமறையான திருக்குறள்

**ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்**
**பின்சாரப் பொய்யாமை நன்று**

என்று கூறுகிறது. அதாவது உலகிலேயே மிகச் சிறந்த அறம் கொல்லாமை (அஹிம்சை); அதற்கு அடுத்தபடியாக நல்லது பொய்யாமை (சத்தியம்) என்பதாகும்.

"கொல்லாமை, பொய்யாமை என்ற இரண்டு கொள்கைகளையும் தமிழர்கள் தங்கள் குலதர்மங்களாகப் போற்றி வந்ததனாலேயே, தமிழ்நாடு இன்றளவும் தெய்வ நம்பிக்கையிலும், தான தர்மங்களிலும், கலை நிறைந்த நாகரிகத்திலும், அமைதியிலும்மிகச் சிறந்த நாடாக விளங்குகின்றது" என்கிறார் கவிஞர்.[18]

16. மேலது நூல், ப. 17. மேலது நூல், ப30. 18. மேலது நூல், ப33.

தமிழர்களுக்குச் சத்தியத்தின் மீது எவ்வளவு ஈடுபாடு இருந்தது என்பதைக் காட்ட, தமிழ் நாட்டில் காலங்காலமாக அரிச்சந்திரன் கதையானது, மக்களிடையே பாட்டிலும், ஏட்டிலும், தெருக்கூத்துகளிலும், நாடகங்களிலும் இடம் பெற்றிருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார். நடிகர்கள் அக்கதையை ஊர் ஊராகச் சென்று, தெருக்கூத்து மூலமும், நாடகங்கள் மூலமும், நடித்தும், பாடியும் பரப்பியபோது மக்களிடம் அவற்றிற்கு அமோக வரவேற்பு இருந்ததொன்றே அக்கதையின் கருவான சத்தியத்தின் மீது தமிழர்களுக்கு இருந்த ஆர்வம் நன்கு வெளிப்படுகிறது என்பார் கவிஞர். அரிச்சந்திரன் கதையைச் செய்யுள் வடிவில் பாடிய புலவர்

> பதி இழந்தனம், பாலனை இழந்தனம்
> நிதி இழந்தனம், இனி நமக்கு (படைத்த) உளதென
> நினைக்கும்
> கதி இழக்கினும் கட்டுரை (சத்தியம்) இழக்கிலம்[19]

என்று அரிச்சந்திரன் கூறுவதாகப் பாடுகிறார்.

அரிச்சந்திரன் உண்மைக்கு மாறாக நடக்க மாட்டேன் என்ற உறுதியுடன் இருந்ததனால் தனது நாட்டை இழந்து, மகனை இழந்து, எல்லாச் செல்வங்களையும் இழந்து, தன் மனைவியின் தலையையும் வெட்டவேண்டிய நிலை ஏற்பட்ட போது (காசிராஜன் குழந்தையைக் கொன்றதாகப் பொய்க் குற்றம் சாட்டப்பட்டதால்) விஸ்வாமித்திரர் "இப்போதாவது ஒரு பொய் சொல். நீ இழந்ததை எல்லாம் நான் மீண்டும் தருகிறேன்" என்று கேட்ட போது அரிச்சந்திரன் மேற்கண்டவ்ாறு பதில் கூறுவதாகப் புராணம் பேசுகிறது. இவ்வுலகில் எல்லாவற்றையும் இழந்த தான் மறு உலகில் வரக் கூடிய கதி அல்லது மோட்சத்தை இழப்பதனால்கூடச் சத்தியத்திலிருந்து அதாவது சொன்ன வாக்கிலிருந்து தவற மாட்டேன்" என்று கூறுவதாகப் பாடப்பட்டுள்ளது. இதிலிருந்து விஸ்வாமித்திரர், அரிச்சந்திரன் வாயால் மட்டும் ஒரு பொய் சொன்னால் போதுமென நினைக்கிறார். ஆனால், மகாத்மா காந்தியின் சத்திய நோக்கு, வாயால் மட்டுமல்ல, மனத்தாலும், செயலாலும் கூடப் பொய்யாமையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதாகும் என்று கவிஞர் கூறுகிறார்.[20] அது எப்படி என்பதைச் சத்தியம் or Truth என்பதற்குத் தமிழர்கள் எவ்வாறு பொருள் கண்டுள்ளனர் என்பதை எடுத்துக்காட்டுகிறார். தமிழில் உள்ளத்தால் சத்தியத்தைக் கடைப்பிடிப்பது உண்மை என்றும், சொல்லால் அதாவது வாய்மூலம் கடைப்பிடிப்பது வாய்மை

---

19. மேலது நூல், 20. மேலது நூல்,

என்றும், மெய்யினால் (அதாவது உடலால்) செய்யப்படும் செயல்களிலும் சத்தியத்தை மேற்கொள்வது மெய்மை என்றும் அழைக்கப்படுகிறது. எனவே மனம், வாக்கு, காயம் மூன்றிலும் நேர்மையைக் கடைப்பிடிப்பதே சத்தியம் என்பது தமிழர் கொள்கை. அதுவே காந்திஜியின் கொள்கை என்பது கவிஞர் கருத்து.[21]

சத்தியம் என்றால் என்ன? அதை எப்படி நிர்ணயிப்பது என்ற கேள்விகளுக்கு வள்ளுவர் விடையிறுத்துள்ளார் என்பதையும் கவிஞர் விளக்கியுள்ளார்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க, பொய்த்த பின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்

என்று வள்ளுவர் கூறுகிறார். அதாவது ஒருவன் தனது மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல், நடந்து கொள்வதே பொய்யின்மையாகும். மனச்சாட்சி சொல்வதற்கு விரோதமாகச் செயல்படும் போது "ஏன் இதைச் செய்தோம் ஐயோ இப்படிச் செய்து விட்டோமே. இதை நாம் செய்யாமலே இருந்திருக்கலாமே" என்று அந்த மனமே நம்மை உறுத்தும். இப்படி நமக்கு நாமே வருந்தும்படி செய்கிற செயல்கள் தான் சத்தியத்தைச் சார்ந்தவை. "இதைத்தான் மகாத்மா காந்தி" உள்ளம் அல்லது இதயத்தின் ஒளி மனச்சாட்சி (Inner Light Conscience) என்று கூறியுள்ளார். அவரது செயலை ஒரு சில நண்பர்கள் கண்டித்த போது "எனது மனச்சாட்சி சொல்கிறபடி நான் நடக்கிறேன். என்னைத் தடுக்காதீர்கள்" என்று அவர் கூறுவது வழக்கம். இரண்டாம் உலகப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்த போது "வெள்ளையனே வெளியேறு" என்ற இயக்கத்தைக் (Quit India Movement) காந்தி தொடங்கியபோது பல அறிஞர்கள் அவரைக் கண்டித்தனர். எனினும் "என் மனச்சாட்சி கூறுகிறபடி நான் நடக்கிறேன்" என்று கூறி அவர் அவ்வியக்கத்தைத் தொடங்கினார். அதுவே இறுதியில் இந்தியாவிற்கு விடுதலை வாங்கித் தந்தது என்பதை நாம் அறிவோம். காந்திஜி தமது மனச்சாட்சியை உள்ளொளி (Inner Light-Divine Voice) என்கிறார். அதையே வள்ளுவர்

எல்லாவிளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு

என்கிறார்.

"காந்திஜி தம்முடைய வாழ்க்கை முழுவதிலும் செய்த, சொன்ன, எண்ணிய எல்லா விஷயங்களிலும், 'இந்தப் பொய்யா

---

21. மேலது நூல், ப.34.

விளக்காகிய உள்ளொளியின் வெளிச்சத்தைக் கொண்டு சோதித்தே செய்திருக்கிறார். அவர் தம்முடைய சுய சரிதையைச் "சத்திய சோதனை" என்றதும், அவர் இந்த நாட்டின் விடுதலைக்காக நடத்திய அறப்போரை "சத்தியாக்ரஹம்" என்று சொன்னதும் அவருடைய "சத்திய நோக்கிற்கு "அழியாத சாட்சியங்களாகும்[22] என்று கவிஞர் கட்டுரையாக்கினார். அதோடு அவர் அப்படி, மனம், வாக்கு காயம் மூன்றிலும் பொய்யாது ஒழுகினதாலேயே உலகமக்கள் அனைவரது உள்ளத்திலும் இடம் பெற்றார். இதையே வள்ளுவர்.

**உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தின்**
**உள்ளத்து ளெல்லாம் உளன்**

என்று கூறியுள்ளார். அந்தச் சத்திய நெறியைப் பின்பற்றினால்தான் உலகத்தில் இப்போதுள்ள தீமைகள் நீங்கும்[23] என்று கவிஞர் கருதுகிறார்.

### 3. நமது குடியரசு

காந்திஜியின் அருந்தவத்தால் நம்முடைய அடிமைத்தனம் அகன்றது. அன்னிய ஆட்சியின் அந்தகாரம் முடிந்தது. நம்முடைய சுதந்திரம் விடிந்தது. சுதந்திர சூரியன் உதித்த சிறிது காலத்திற்குள் குடியரசு அரும்பியது. இப்போது அக்குடியரசு (தாமரை மலர்) மலர்ந்து விட்டது. காந்தியடிகளின் திருமேனி இந்த மலரிலே மறைந்து நின்று மணம் வீசுகிறது. இந்த மலர் சாந்த ஒளிவீசுகின்றது; சத்திய மொழி பேசுகின்றது; சன்மார்க்கம் நிரப்புகின்றது. சமதர்மம் பரப்புகின்றது. இந்தத் தெய்வத் திருமலர் வாடாதிருக்கக் காந்திமகான் காட்டிய வழியில் நாம் நிற்க வேண்டும். காந்தியடிகளின் அறநெறிகளைப் பாதுகாக்கும் தர்மகர்த்தாக்களாக (அறங்காவலர்களாக) நடந்து கொள்ள ஆண்டவன் அருள்புரிய வேண்டும்[24] என்று இக்கட்டுரையில் கவிஞர் இறைவனை வேண்டுகிறார்.

### 4. ராமராஜ்யம்

இத்தலைப்பில் கவிஞர் காந்திஜி இந்தியாவில் ஏற்படுத்த விரும்பிய அல்லது கனவு கண்ட ராமராஜ்யம் என்ன என்பதை விளக்குகிறார். கம்பன் கண்ட ராமராஜ்யமும், காந்திஜியின் ராமராஜ்யமும் ஒன்றே என்பது அவர் கருத்து. அதற்குச் சான்றாக, அவர் கம்பனின் இரு பாடல்களை நமக்கு எடுத்துக் காட்டுகிறார். அதில் ஒரு பாடல் வருமாறு:

---

22. மேலது நூல், ப.36. 23. மேலது நூல், 24. மேலது நூல், ப.37.

**வயிரவான் பூணணிமடங்கல் மொய்ம்பினான்**
**உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்**
**செயிரிலா உலகினில் சென்று நின்று வாழ்**
**உயிரெலாம் உறைவதோர் உடம்பு ஆயினான்**

நாட்டையாளும் மன்னன் தன்னுயிர் போல் மன்னுயிரைக் கருதிப் பணிபுரிவதால் உயிரெலாம் (மரம், செடி, கொடி, பறவை விலங்கு உட்பட) உறைவதோர் உடம்பு ஆயினான் என்று கூறப்படுகிறது. ஜீவகாருண்யமே அரசனின் குறிக்கோளாயிருக்க வேண்டும் என்பது இப்பாடலில் வற்புறுத்தப்படுகிறது.

இரண்டாவது பாடல்

**எய்யென எழுபகை எங்கும் இன்மையால்**
**மொய்பொரு தினவுடை முழவுத் தோளினான்**
**வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பு மோர்**
**செய்யெனக் காத்து இனிது அரசு செலுத்தினான்**

இப்பாடலில் அரசாள்வான் எவ்வாறு மக்கள் நலனையே குறிக்கோள்களாகக் கொண்டு கவனமாக ஆட்சி புரிய வேண்டுமென்பது வற்புறுத்தப்படுகிறது. நல்லாட்சி நிலவும் நாட்டில் பகைமை (உள்நாட்டு, வெளிநாட்டு) இருக்காது. அமைதி நிலவும். அதன் விளைவாகப் போர் வீரர்கள் உள்நாட்டு நலன்களுக்காகப் பாடுபடுவர். அதனால், ஒரு ஏழையின் கைகளில் ஒரு சிறு நிலத்தைக் கொடுத்தால் அவன் அதை எவ்வாறு பதப்படுத்தி, எருவிட்டு உழுது, பயிரிட்டுக் களை எடுத்து அறுவடை செய்வானோ அவ்வாறே அரசன் தன்குடி மக்களைக் கண்ணுங் கருத்துமாய்க் காப்பாற்றுவான்" எனக் கம்பர் கூறுகிறார். அத்தகைய மக்கள் நலன் கருதிய ஆட்சி அமையப் பெற்றால்தான் காந்தி கண்ட ராமராஜ்யக் கனவு நனவாகும் என்பது கவிஞர் கருத்து.[25]

## 5. குடியரசு

குடியரசு என்ற தலைப்பில் கவிஞர் முடியரசையும் (Monarchy) குடியரசையும் (Democracy) ஒப்பிட்டுப் பேசுகிறார். முடியரசுக்குத் தலைமை வகிக்கும் அரசன் நல்ல குணவானாக, சுயநலமற்ற சான்றோனாக அமைந்து விட்டால் அது நல்ல அரசுதான். அவன் குறுகிய காலத்திற்குள் பல நன்மைகளைச் செய்து விடலாம். அவனது நல்ல விருப்பங்களை நிறைவேற்றாத அதிகாரிகளை உடனே மாற்றி விடலாம். ஆனால் குடியரசில் எந்த ஒரு காரியத்தையும் ஒரு

---

25. மேலது நூல் ப.39.

சிறிய நல்ல காரியத்தையும்கூட உடனுக்குடன் செய்து முடிக்க முடியாது. பலரைக் கலந்தாலோசிக்க வேண்டும். அதே போல் ஒரு சிறிய பிழையைக்கூட உடனுக்குடன் மாற்ற முடியாது. முடியரசாட்சியில் கட்சிகள் இருக்காது. குடியரசாட்சியில் கட்சிகள் இருக்கும். பெரும்பான்மைக் கட்சி ஆட்சி அமைக்கும். அப்போது விரும்பத்தகாத கொடூர குணமுடையவர்களும் அதிகாரப் பீடங்களுக்கு வந்துவிடலாம். அப்படி வந்து விட்டால் குடியரசு முடியரசைக் காட்டிலும் கொடுமை யுள்ளதாகவும் மாறிவிடலாம். முடியரசில் மன்னனும் அவனுடைய உயர் அதிகாரிகளும் நல்லவர்களாயும் பொறுப்புள்ளவர்களாயும் இருந்தால் போதும். ஆனால் குடியரசில் ஆட்சி பீடத்தில் இருப்பவர்களேயன்றித் தனிமனிதர்களும் பொறுப்பும் கடமை உணர்ச்சியும் உள்ளவர்களாயுமிருக்க வேண்டும். அதற்குத் தனி மனிதர்களிடமும் காந்தியம் பரவவேண்டும் என்கிறார் கவிஞர்.

காந்தி தந்த குடியரசு நிலைக்க வேண்டுமானால் நாம் காந்தியடிகளை மறவாது அவர் வழியில் நடந்து கொள்ள வேண்டும். கடலில் செல்லும் மாலுமி திசைகாட்டும் கருவியின் மேலேயே கண்ணாயிருப்பது போல, நம்முடைய நோக்கம் காந்தியத்தில் இருந்து கொண்டேயிருக்க வேண்டும். இல்லை எனில் நம் சுதந்திரக் குடியரசுக் கப்பல் திசை தப்பிப் போகும். அதற்கு ஜனங்களுக்குள் இடைவிடாமல் காந்தியத்தை நினைப்பூட்டிக் கொண்டேயிருக்க வேண்டும். தேர்தல்களில் பரம யோக்கியர்கள் தேர்ந்தெடுக்கப் படவேண்டும்.[26]

## 6. ஒரு குறள்

ஒரு குறள் என்ற இக்கட்டுரையில் நாமக்கல் கவிஞர் காந்திஜியின் அஹிம்சா முறையின் ஒரு பகுதியான சத்தியாக்கிரகம் எனும் கருத்துத் திருக்குறளில் இடம் பெற்றுள்ளதாக எடுத்துக் காட்டுகிறார்.

1932-ஆம் ஆண்டு, மகாத்மா காந்தியவர்கள் நடத்திய சத்தியாக்கிரகச் சட்டமறுப்பில் ஈடுபட்டுக் கவிஞர் ஓர் ஆண்டுக் காலம் சிறைத் தண்டனை பெற்றுக் கோயமுத்தூர், வேலூர், மதுரை முதலிய இடங்களில் சிறைவாசம் அநுபவித்தார். அச்சிறைவாசத்தின் போது திருக்குறள், கம்பராமாயணம் போன்ற இலக்கியங்களைப் பற்றி ஏனைய சக சிறைவாசிகளுக்கு அவர் அடிக்கடி உரையாற்றி வந்தார்.

---

26. மேலது நூல், ப.44.

அப்போது திருக்குறளுக்கும் பரிமலேழகர் கொடுத்துள்ள உரையையே அவர் எடுத்துக் கூறி வந்தார். அப்போது ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் (முன்னாள் முதல்வர்) பரிமேலழகரது உரை மிகக் கடினமாயிருப்பதாலும், பொது அறிவுக்குப் பொருந்தாத முறையில் விளக்க உரை தரப்பட்டிருப்பதாலும், எளிதில் விளங்கக் கூடியதாகவும், தெளிவாகவும் ஒரு புது உரையை எழுதும்படி கவிஞரைக் கேட்டுக் கொண்டாராம். அதற்கேற்பக் கவிஞர் திருக்குறளுக்குப் புதுஉரை ஒன்றை எழுதி முடித்தார். அதை நூலாக வெளியிடுமுன் தனக்குப் பள்ளிக் கூடத்தில் நாமக்கல்லில் தமிழாசிரியராயிருந்த ஆனையப்ப முதலியார் அவர்களிடம், அதைக்காட்டி அவரது ஆசியைப் பெற விரும்பினார். அதற்காக அவர் அப்போது தங்கியிருந்த போரூருக்குப் போய் அவரிடம் தமது திருக்குறள் புதுஉரையைக் காட்டி அதனை ஆசீர்வதிக்குமாறு வேண்டிக் கொண்டார். அப்போது முதலியார் "திருக்குறளுக்கு ஏற்கெனவே பரிமேலழகர் மிகச் சிறந்த உரை எழுதியிருக்கிறாரே, அது போதாதா? அதற்கு மேல் நீ என்ன புதிதாக உரை செய்துள்ளாய்?" எனக் கவிஞரிடம் வினவினார். அப்போது கவிஞர், பரிமேலழகர் உரை பல இடங்களில் அறிவுக்குப் பொருந்தாமல் இருப்பதாகவும், அத்தகைய குறள்களுக்குத்தான், தனது புது உரையை எழுதியிருப்பதாகவும் கூறினார். அப்படியானால் அதற்கொரு சான்று தரும்படி முதலியார் கேட்டார். அதற்கேற்ப அவர், திருக்குறளில் "வினைத்திட்பம்" என்ற அதிகாரத்தில் வரும் ஒரு குறளைக் கூறிப் பரிமேலழகர் அதற்குச் செய்துள்ள உரை எவ்வளவு அறிவுக்குப் பொருத்தமற்றது என்பதையும், தான் செய்த உரை எவ்வளவு பொருத்தமானது என்பதையும், அக்குறளில் மகாத்மா காந்தியின் சத்தியாக்கிரகம் பற்றிய கருத்துப் பொதிந்து கிடப்பதாயும் எடுத்துக் காட்டினார். அக்குறள் வருமாறு:

> **வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்**
> **ஊறெய்தி உள்ளப் படும்**

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர் செய்துள்ள உரையாவது "எண்ணத்தால் சிறப்பெய்திப் பிற இலக்கணங்களாலும், மாட்சிமைப் பட்ட அமைச்சரது வினைத்திட்பம், வேந்தன் கண்ணே உறுதலையெய்தலான் எல்லோராலும் நன்கு மதிக்கப்படும்" இந்தக் கருத்துரை விளக்க உரையில் அவர், "வேந்தன் கண் ஊறெய்தி" என்ற சொற்றொடருக்கு" வேந்தன் கண் உறுதலையெய்தலான்" என்று பொருள் செய்து உறுதலை" என்பதற்கு விளக்கமாகச் "செல்வமும் புகழும் அடைதல்" என்று பொருள் செய்கிறார். ஆனால் கவிஞர்

அவர்களோ "ஊறு" என்ற சொல்லுக்கு 'இடையூறு, துன்பம்' என்று பொருள் கொள்கிறார். ஊறு என்ற சொல்லுக்கு எப்படி முயன்றாலும், "செல்வம், புகழ்" அல்லது "ஊதியம், வெகுமதி" என்ற பொருள் கொள்ள முடியுமா? எனக் கேட்கிறார் கவிஞர். "வேந்தன் கண் ஊறெய்தி" என்பதற்கு வேந்தனிடத்தில் துன்பம் அடைந்து என்று தான் பொருள் கிடைக்கிறது. வினைகளைத் திட்பமாகச் செய்கின்ற ஒருவன் அப்படிச் செய்வதால் அரசனால் துன்பம் அடைந்தாலும், விடாப்பிடியாய் நின்று தனது காரியத்தைச் சாதிப்பான் என்பதே பொருத்தமான உரையாகும் என்பது கவிஞர் கருத்து. அதைக் கேட்ட முதலியார் "நீ எப்படிப் பதம் பிரித்துப் பொருள் சொல்கிறாய்" எனக் கேட்டார். அதற்குக் கவிஞர் "வீறெய்தி மாண்டான் வினைத்திட்பம் வேந்தன் கணூறெய்தி யுள்ளப்படும்" என்பதை "வேந்தன் கண் ஊறெய்தி வீறு எய்தி மாண்டார் வினைத்திட்பம் உள்ளப்படும்" என்று கொண்டு பொருள் செய்தால் சரியான பொருள் கிடைக்கிறது. அதாவது அரசனிடத்தில் (அவன் தன் அரச பலத்தைக் கொண்டு செய்கிற "துன்பத்தை(யும்) அடைந்து வெற்றி பெற்று மாட்சிமை அடைந்தவர்களுடைய வினைத்திட்பம் (உலக மக்களால்) போற்றப்படும்" என்று பதிலிறுத்தார். அதற்கு உதாரணமாகக் காந்திஜியைக் காட்டிக் கூறுகிறார். "அரசனிடத்தில் துன்பம் அடைந்து" என்பதைத் தாம் கலங்காது நல்ல காரியம் என்று கண்ட சுதந்திர முயற்சியை முறியடிக்க முயலும் ஆங்கிலேய அரசாங்கத்தால் பல துன்பங்களை அடைந்தும், விடாப்பிடியுடன் வினைத்திட்பம் காட்டிய மகாத்மா காந்தியைப் போன்ற உத்தமர்களைக் காணாததாலேயே பரிமேலழகர் "ஊறு" என்ற பதத்துக்கு இல்லாத அர்த்தத்தைக் கற்பித்து உரையை ஒப்பேற்றி விட்டார்"[27] என்றார். இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த ஆனையப்ப முதலியார் "நீ சொல்லுகிற உரை பொருத்தமாகத்தான் இருக்கிறது. இப்படிப் பொருள் கொள்வதிலும் குற்றமில்லை என்று கூறிக் கவிஞரை வாழ்த்தி வழியனுப்பினாராம்.[28]

தென்னாப்பிரிக்காவிலும், இந்தியாவிலும் காந்திஜி மேற்கொண்ட சத்தியாக்கிரகப் போராட்டங்களில் ஈடுபட்டபோது அவர் கடைப்பிடித்த கொள்கைகளும், மேலே கவிஞர் கூறியுள்ள கருத்துகளும் ஏறக்குறைய ஒத்துப் போகின்றன. அநியாயம் என்று தெரிந்தால் அதைச் செய்பவன் யாராயிருந்தாலும் (தனிப்பட்ட மனிதனாயிருந்தாலும், அரசாங்கமாயிருந்தாலும்) அதை எதிர்த்துப் போராட வேண்டும். அப்படி எதிர்க்கும்போது வன்முறையில்

27. மேலது நூல், ப71. 28. மேலது நூல், ப73.

ஈடுபடக்கூடாது. எதிரிக்கு எந்த விதத்திலும் துன்பம் ஏற்படுத்தாத சாத்வீகமான முறையில் எதிர்க்க வேண்டும். எதிரியால் துன்பம் ஏற்படுத்தப்பட்டாலும் அதைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளவேண்டும். அவ்வாறு செய்யும்போது உயிர் துறந்தாலும் பரவாயில்லை. அதனால் சத்தியாக்கிரகி அழியாத புகழ் பெறுவான்" என்றுதான் காந்திஜி சொல்வது வழக்கம். அதையே வள்ளுவர் மேற்கண்ட குறளில் சொல்லியுள்ளார் என்று கூறுவதுதான் கவிஞரின் புது உரையில் காணப்படும் புதுமையாகும்.

## 7. வள்ளுவர் வகுத்த இல்லறம்

தமிழர்கள் அறவாழ்க்கையை ஓம்பியவர்கள். அதை அவர்கள் இல்லறம், துறவறம் என்று இரண்டாகப் பிரித்தனர். ஏதோ சில காரணங்களால் உலகப்பற்றை நீத்துத் துறவறம் மேற்கொண்டவர்கள் சிலர் இருக்கலாம். அது தவறில்லை. ஆனால் அவர்களை விட இல்லறத்திலீடுபடுபவர்களே மிகச் சிறந்தவர்கள் என்பதே வள்ளுவர் கருத்து. இதுவே காந்திஜியின் கருத்துமாகும். துறவறம் பூண்டு, வீட்டைத் துறந்து காட்டுக்குப் போய்த் தவம் செய்வதை அவர் விரும்பவில்லை. மனைவி மக்களோடு இல்லறத்திலிருந்து கொண்டே ஏழை எளிய மக்களுக்குப் பயன் கருதாது சேவை செய்வதையே அவர் சிறந்த தருமம் என்று கருதினார். அம்மாதிரியே கஸ்தூரிபாய் எனும் மனைவியோடு வாழ்ந்து கொண்டே தேசசேவை செய்தார். "மக்கட்சேவையே மகேசன் பூசை" என்ற கொள்கையோடு ஓயாது சேவை செய்து தனது உயிரையும் நாட்டுக்கே அர்ப்பணித்தார் என்பதை நாம் யாவரும் அறிவோம். அதையேதான் வள்ளுவரும் வற்புறுத்துகிறார் என்பது கவிஞரின் கருத்து. திருவள்ளுவர் இல்லறத்துக்குத் தான் முதன்மை தந்திருக்கிறார் என்பதை

அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று

என்ற குறள் மூலம் அறியலாம். இங்கே "பிறன்" என்ற பதத்துக்குத் "துறவறத்தான்" என்று பரிமேலழகர் கூறுவதைக் கவிஞர் ஒப்புக் கொள்ள மறுக்கிறார். "அறன் என்று சொல்லப்படுவதே இல்வாழ்க்கை தான். ஆனாலும் பிற அறத்தானாக- துறவறத்தானை இகழ்ந்துவிடாமல் இருப்பது நல்லது எனப் பரிமேலழகர் உரை செய்துள்ளார். 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று ஏகாரம் போட்டு அடித்துக் கூறிய பின் துறவறத்தை நினைப்பூட்டி அதை இல்லறத்தான் குறைவாக எண்ணிவிடக் கூடாது என்று ஏன் எச்சரிக்க வேண்டும்? என்று கேட்கிறார். இல்லறம் உயர்ந்ததுதான்; எனினும்

உலகோர் பழிக்காதபடி புகழோடும் இல்வாழ்வை நடத்த வேண்டும் என்பது தான் வள்ளுவரின் கருத்தாயிருக்க வேண்டுமென்பது கவிஞரின் கருத்தெனத் தெரிகிறது.

துறவறம் பூண்பது வீடுபேறு எனும் மோட்சமோ அல்லது தேவர்கள் வாழ்கின்ற சுவர்க்கமோ அடைவதற்குத்தான். ஆனால் இல்லறத்தை முறையாக நடத்துபவன் அந்த தேவர்களில் ஒருவனாக மதிக்கப்படுவான். சுவர்க்கலோகத்தை அடைவான் என்கிறார் பரிமேலழகர்.

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப்படும்**

ஆனால் கவிஞர் 'தெய்வம்' என்பது தேவர்களுக்கும் மேம்பட்ட கடவுளைக் குறிக்கும். எனவே இல்லறத்தை முறையோடு நடத்துபவன் இறைவனோடு சேர்க்கப்பட்டும் பேரின்பம் பெறுவான். முக்தி நிலை அடைவான் என்று கவிஞர் கூறுகிறார். "கைம்மாறு கருதாது கருமங்களைச் செய்து அவற்றின் பலனை எவன் எனக்கு அர்ப்பணிக்கிறானோ அவன் என்னை அடைகிறான்" என்று பகவான் பவகத் கீதையில் சொல்லியிருப்பது இங்குக் கருதத்தக்கது. துறவறம் மேற்கொள்வதால் வரும் பயனை இல்லறத்திலிந்து கொண்டே பெறலாம் என்பதே சரியான பொருள் எனக் கவிஞர் கூறுகிறார்.[29] வாழ்க்கையின் குறிக்கோள் முத்தியடைவது, பேரின்பம் பெறுவது என்றால் அதை இல்லறத்திலிருந்து கொண்டே பெறக்கூடுமென்பதால் துறவறத்துக்குப் போய்ப் பெறப் போவதென்ன? ஏன் அங்குப் போக வேண்டும். என்பதை

**அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின்**
**புறத்தாற்றில் போஒய்ப் பெறுவதெவன்**

என்ற குறள் உணர்த்துகிறது. எனவே துறவறத்தை விட இல்லறமே சிறந்தது என்பதை

**இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பவன்**
**முயல்வாரு ளெல்லாம் தலை**
**ஆற்றின் ஒழுக்கி அறன்இழுக்கா இல்வாழ்க்கை**
**நோற்பாரின் (துறவறத்தார்) நோன்மை உடைத்து**

என்ற குறள்கள் எடுத்துக் காட்டுகின்றன.[30] இக்குறளில் "ஆற்றின் ஒழுக்கி" என்ற சொற்றொடருக்கு, "தவஞ்செய்வாரையும் தத்தம் நெறியின் கண் ஒழுகப் பண்ணி" என்று பரிமேலழகர் உரை செய்திருப்பதைக் கவிஞர் மறுக்கிறார். "தவஞ் செய்கிறவர்களுக்கு

---

29. மேலது நூல், ப.85. 30. மேலது நூல், ப.86.

உணவு, உடை மற்றும் சில வசதிகளை இல்லறத்தான் செய்து கொடுக்கலாம். ஆனால் தவஞ்செய்யும் துறவிகளை அவர்களுக்கே உரிய நெறியில் இல்லறத்தான் எவ்வாறு ஒழுகச் செய்ய முடியும்? அப்படி இல்லறத்தானால் நெறி கற்பிக்கப்படுகிற தவசி என்ன தவம் செய்யத் தகுந்தவன்? இல்லறத்தான் துறவறம் பூண்ட தவசிக்கு நெறி புகட்டுவது எப்படி முறையாகும்" எனக் கவிஞர் கேட்கிறார்.[31]

எனவே "ஆற்றின் ஒழுக்கி" என்பதற்கு இல்லறத்தானுக்கென்று முன்னால் வள்ளுவர் சொல்லியுள்ள ஆற்றின்படி நடத்தி" என்பதுதான் அதற்குச் சரியான பொருள். இல்லறத்தானுக்கு சொல்லப்பட்ட அந்த ஆறு என்ன வெனில்

**தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல்தான்என்றாங்கு**
**ஐம்புலத்து 'ஆறு' ஓம்பல் தலை**

என்று கூறுகிறார். முன்னோர்கள், தெய்வம், விருந்தினர் குடும்பத்திலுள்ள தன்னோடு சேர்ந்தவர்கள், கடைசியில் தான் என்ற வரிசைக் கிரமத்தில் செய்ய வேண்டிய கடமைகளை முறையாகச் செய்பவனே, துறவறத்தானை விடச் சிறந்தவன் என்று கூறலாம் என்பது கவிஞரின் உரையின் சிறப்பாகும்.[32] எப்படிப் பார்த்தாலும் இல்லறமே துறவறத்தைவிட உயர்ந்தது என்பது வள்ளுவரின் கருத்து. அதுவே தான் காந்திஜியின் கருத்தென்பதில் ஐயமில்லை.

## 8. காந்தி படம் என் மானத்தைக் காத்தது

இக்கட்டுரையில் நாமக்கல் கவிஞர் எவ்வாறு சேலம் ஜில்லா போர்டு உறுப்பினராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்பதையும், போர்டு தலைவர் பதவிக்குப் போட்டியிட்ட ஒருவர், தமது தூதரை அனுப்பி, அவரை ஆதரிக்கும்படி வேண்டிக் கொண்டதோடு அதற்குப் பரிசாக ஒரு பெருந்தொகையை லஞ்சமாகப் கொடுக்க முன் வந்ததையும், அதை வாங்கலாமா வேண்டாமா என யோசித்துக் கொண்டிருந்த போது அவரால் வரையப்பட்ட காந்திஜியின் படத்தைப் பார்த்தவுடன் மயக்கந்தெளிந்து அப்பணத்தை வாங்க அடியோடு மறுத்து விட்டதாயும் கூறிச் சத்தியம் நேர்மை இவற்றின் உருவகமான காந்திஜியின் படம் தனது மானத்தையும், நேர்மையையும் தக்க சமயத்தில் காப்பாற்றியது என்று விளக்குகிறார். இதனால் காந்தியமானது சோதனைக் காலங்களில் எவ்வாறு அவரைக் காப்பாற்றிச் சத்தியநெறியில் வழுவாது நிற்கச் செய்தது என்பதை நாம் அறிகிறோம்.[33]

31. மேலது நூல், ப.86 32. மேலது நூல், ப.87 33. மேலது நூல், பக்.95-98.

# கலை இன்பம் - தாய்மொழிக் கல்வி

"கலை இன்பம்" என்ற இந்நூலில் ஒன்பது கட்டுரைகள் அடங்கியுள்ளன. அவை பெரும்பாலும் கலை சம்மந்தப்பட்டவை. கலை என்றால் என்ன? இசை என்றாலென்ன? தமிழ் இசையின் பெருமை என்ன? வட மொழி இசையின் தத்துவம் என்ன? என்பன போன்ற கேள்விகளுக்கு விடையளிக்கும் வகையில் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் முதற்கட்டுரை மட்டும் காந்திஜியின் கொள்கையைச் சார்ந்து எழுதப்பட்டுள்ளது. "தாய்மொழிக் கல்வி" எனும் தலைப்பில் எழுதப்பட்டுள்ள இக்கட்டுரையில் தாய்மொழி மூலம் கல்வி கற்பிக்கப்பட வேண்டியதன் இன்றியமையாமை பற்றிக் காந்திஜி கூறியுள்ள கருத்தையும், இந்தி மொழித் திணிப்புப் பற்றிய தன் கருத்தையும் கவிஞர் வெளிப்படுத்தியுள்ளார்.

முதலில், கல்வித் துறையில் ஆங்கிலம் முதன்மை பெற்றிருந்த முறை மாறித் தாய் மொழியின் மூலமே கல்வி கற்பிக்கப்பட வேண்டும் என்ற இயக்கம் ஏற்பட்டதற்கான காரணத்தைக் கவிஞர் விளக்குகிறார். மொழி வாரி மாகாணப் பிரிவினைதான் அதற்குக் காரணம் என்கிறார் அவர்.[1] மாகாணப் பிரிவினை மிக நல்ல நோக்கத்துடன் கொண்டு வரப்பட்டாலும், அது சில சிக்கல்களையும் ஏற்படுத்தி விட்டது. ''இதுவரை இடம் தெரியாதிருந்த இனப்பற்றும், மொழிப்பற்றும் வெறிகளாக மாறிப் பேய்க்கோலம் கொண்டு விட்டன. . ." அத்தகைய வெறி எவ்வளவு தீமையுண்டாக்கும் என்பதைப் பம்பாயிலும், குஜராத்திலும், வேறு சில இடங்களிலும் கண்டோம். . .எனவே இந்தத் தவிர்க்க முடியாத இனப்பற்றும், மொழிப்பற்றும் வெளிகளாக மாறிவிட இடமுண்டாகாதபடி அவற்றை அணைத்து ஆதரித்து, அவைகளுக்குரிய உரிமைகளைக் கொடுத்து விட வேண்டும்"[2] என்கிறார் கவிஞர். ஆதலால் "எல்லாக் கல்வியும் ஆரம்பத்திலிருந்து பிரதேச மொழியில் தான் போதிக்கப்பட வேண்டும் என்றும், விஞ்ஞானத்துக்கு வேண்டிய கலைச்சொற்கள் பிரதேச மொழியில் இல்லையே என்பதற்காகக்

1. நாமக்கல் கவிஞர் ஸ்ரீ வெ. இராமலிங்கம் பிள்ளை, கலையின்பம், ப.12, கவிஞர் பதிப்பகம், கோவை, 1958.

2. மேலது நூல் பக்.12-13.

காத்திருக்க வேண்டிய அவசியமில்லை என்றும், தகுந்த கலைச்சொற்கள் பிரதேச மொழியில் உருவாகிற வரைக்கும் ஆங்கிலக் கலைச் சொற்களையே உபயோகிக்கலாம்[3] என்றும் "ஆதலால் மேல் படிப்புகளை ஆங்கிலத்தில் தான் போதிக்க வேண்டும் என்ற எண்ணத்தை விட்டு விட்டுத் தமிழிலேயே எல்லாப் படிப்பையும் போதிக்க வேண்டும்[4] என்றும் கூறுகிறார் கவிஞர்.

இந்தியாவிலுள்ள பெரும்பான்மையான மக்கள் இந்தி மொழி பேசுபவர்களாயிருப்பதால், மேல் படிப்பில் ஆங்கிலத்துக்குப் பதிலாக இந்தியைப் போதனா மொழியாக ஆக்கி விடவேண்டும் எனப் பல அறிஞர்கள் அபிப்பிராயப்பட்டனர். ஏறக்குறைய காந்திஜியின் கருத்தும் அதுவே எனலாம். ஆனால் கவிஞருக்கு இக்கொள்கையில் உடன்பாடில்லை. காந்திஜியின் கருத்துப்படி இந்திமொழி இந்தியாவின் பொதுமொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு, அரசியல் சட்டத்திலும் இடம்பெற்றது. ஆனால் வினாவிலேயே சூழ்நிலை மாறிவிட்டது. இந்திமொழி பள்ளிகளில் கட்டாயப் பாடமாக்கப்படுவதைப் பல மாகாணங்கள் (தமிழ்நாடு உட்பட) எதிர்த்தன: அதன் விளைவாகப் பிரதேச மொழிக்கு முதலிடமும், ஆங்கில மொழிக்கு இரண்டாம் இடமும் வழங்கப்பட்டன. இந்திக்கு மூன்றாம் இடம் தரப்பட்டதோடு, அது ஒரு பிரிய பாடமாக (Optional Subject) ஆக்கப்பட்டது. வேண்டியவர்கள் அதைப் படிக்கலாம். வேண்டாதவர்கள் அதை விட்டு விட்டு வேறு மொழியைப் படிக்கலாம். இந்தியைப் படிப்பவர்களும் அதில் வெற்றி பெற வேண்டிய அவசியமில்லை என்று அறிவிக்கப்பட்டது. ஆனால் ஆங்கிலத்துக்குப் பதிலாக இந்தி போதனா மொழியாயும் பொது மொழியாயும் ஆகி விட்டால் இந்திமொழியில் வல்லுநர்களான வடஇந்தியருக்கே எல்லா நல்ல பதவிகளும் போய் விடும். தென்னாட்டவர்கள் பெரும் உத்யோகங்களுக்குத் தகுதியற்றவர்களாய்ப் போய்விடுவர் என்ற பயம் பல மாநிலங்களுக்கு (முக்கியமாய்த் தமிழ் நாட்டுக்கு) ஏற்பட்டது. எனவே தமிழ்நாட்டில் இந்தி புறக்கணிக்கப்பட்டு, ஆங்கிலமும், தமிழும் மட்டும் கட்டாய பாடங்களாக்கப்பட்டன. இச்சிக்கலில் கவிஞரின் கருத்து என்ன வெனில் இப்போது ஆங்கிலம் அமர்ந்துள்ள எல்லா இடங்களையும் இந்திக்கு விட்டு விடவேண்டும் என்பது விரும்பத் தக்கதன்று. உலகத்தோடும், உலக ஆராய்ச்சிகளோடும் தொடர்புகொண்டு நாம் வளர்ச்சியடைய ஆங்கிலம் அவசியம் வேண்டும். வடநாட்டோடு தொடர்பு

---

3. மேலது நூல்.
4. மேலது நூல், ப.14.

கொள்ளவும், அங்கு வேலை வாய்ப்புகளைப் பெறவும் இந்தியும் அவசியமாகிறது. எனவே இந்தியும் ஆங்கிலமும் இந்திய அரசாங்கத்தின் பொது மொழிகளாக ஆக்கப்படவேண்டும்[5] என்பதுவே கவிஞரின் கருத்து. அவர் எண்ணியபடியே தான் இப்போது இந்தியும் ஆங்கிலமும் பொது மொழிகளாக இருந்து வருவது, கவிஞரின் தீர்க்கதரிசனத்துக்கு ஒரு பெருஞ்சான்றாகும். தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் அவர் தமிழுக்கே முதலிடம் கொடுக்கிறார். "தமிழ் மொழியில் நவீன விஞ்ஞான அறிவுகளும் சேர்ந்து அது வளர்ச்சி பெற வேண்டுமானால் மேற்படிப்பில் விஞ்ஞானக் கல்வியும் தமிழ் மொழியிலேயே கற்பிக்கப்படவேண்டும் மாகாணக் காரியங்களில் தமிழே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும். அகில இந்தியக் காரியங்களுக்கும், அயல் நாடுகளின் தொடர்புகளுக்கும் ஆங்கிலமே பொது மொழியாக இருக்க வேண்டும்"[6] என்பதே கவிஞரின் திரண்ட கருத்தாகும்.

எல்லா நிலைகளிலும் கல்வி, அவரவர் தாய்மொழியில் தான் கற்பிக்கப்பட வேண்டும் என்ற காந்திஜியின் கருத்தைக் கவிஞர் ஏற்றுக் கொள்கிறார். ஆனால் இந்தியாவின் தனிப் பொதுமொழியாக இந்தி விளங்கவேண்டுமென்ற காந்திஜியின் கருத்தை அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. வடநாட்டில் வேண்டுமானால் அது ஏற்றுக் கொள்ளப்படலாம். தென்னாட்டுக்கு அது பொருந்தாது. ஆங்கிலமே இங்குப் பொது மொழியாக இருக்க வேண்டும் என்பது அவரது விருப்பம். அதன்படியே இப்போது நடைபெற்று வருவது நமக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது.

## விடுதலை இயக்கமும் பாட்டும்

இக்கட்டுரையில், பாரதியின் பாடல்களும் தமது பாடல்களும் எவ்வாறு இந்திய விடுதலைப் போராட்டத்துக்குப் பயன்பட்டன என்பதையும், அவருக்குப் பின் தமது பாடல்கள் எவ்வாறு தமிழ்நாட்டில் நடைபெற்ற காந்திஜியின் சத்தியாக்கிரகப் போராட்டத்துக்குப் பயன்பட்டன என்பதையும் கவிஞர் எடுத்துக் காட்டுகிறார்.

பாரதியார் சென்னையில் இருந்தபோது ஏராளமான தேசபக்திப் பாடல்களை, அவரும் அவரது நண்பர்களும், சென்னைத் தெருக்களில் பாடிக் கோண்டே செல்வர் என்றும், சில சமயங்களில் மூர் மார்க்கெட்டுக்கருகில் நின்று கொண்டு, உரத்த குரலில், "என்று

---

5. மேலது நூல், ப.7.

6. மேலது நூல், ப.18.

தணியும் இந்த சுதந்திர தாகம், என்று மடியுமிந்த அடிமையின் மோகம்" என்று தொடங்கும் பாடலையும், அதைப் போன்ற வேறு பல பாடல்களையும் பாடி மக்களிடம் தேசபக்தியை ஊட்டுவார் என்றும் அப்படிப் பாடுவதை ஒடுக்கவென்றே அவரைக் கைது செய்ய அரசாங்கம் முயன்றதால் அவரது பாடல்களை மக்கள் வெளிப்படையாகப் பாடப் பயந்து விட்டுவிட்டார்களென்றும், அதனால் அப்போது பாடிய தேசபக்திப் பாடல்கள் விடுதலை இயக்கத்துக்குப் பயன்படாமற் போயிற்றென்றும் கவிஞர் வருந்துகிறார்.[1] அவர் புதுச்சேரிக்குப் போய் விட்டபின் மக்கள் தைரியமாக அவரது பாடல்களைப் பாடலானார்கள்.

**என்று தணியுமிந்த சுதந்திர தாகம்**
**என்று மடியுமெங்கள் அடிமையின் மோகம்**
**என்றெம தன்னைகை விலங்குகள் போகும்**
**என்றெம தின்னல்கள் தீர்ந்து பொய்யாகும்**

என்ற பாடல் ஒவ்வொரு சிறு கிராமத்திலும் ஓய்வின்றி முழங்கியதாகக் கவிஞர் கூறுகிறார்.[2]

சத்தியாக்கிரகிகள், ஆங்கிலேயரது அடக்கு முறைக்குச் சற்றும் அஞ்சமாட்டார்கள் என்றும், ஆங்கிலேயரால் துன்புறுத்தப் பட்டபோது தேசபக்தன் பாடுவதாகப் பாரதியார் பின்வருமாறு பாடியுள்ளார்.

**சதையைத் துண்டு துண்டாக்கினும்**
**உன்எண்ணம் சாயுமோ? ஜீவன் ஓயுமோ?**
**இதயத்துள்ளே இலங்கும்**
**மகாபக்தி ஏகுமோ? உயிர் வேகுமோ**

இப்பாடல் சத்தியாக்கிரகிகளுக்குப் பெரிதும் ஊக்கமளித்தது.

ஆயுத பலத்தைக் காட்டிலும், ஆன்ம பலமே சிறந்ததென்ற எண்ணத்தைப் பரப்புவதற்காகப் பின்வரும் பாடலைப் பாரதியார் பாடினார்.

**கத்தி, வில், வாள், கதைகள்–எறி**
**கற்கள் சூலா யுதங்கள்**
**பித்தர்கள் தங்களுக்கே–இவை**
**பெட்புடை ஆயுதமாம்**
**சத்தியம் ஈகை அருள்–தவம்**
**சார்ந்த மனப் பெரியோர்**

1. மேலது நூல், ப.87.
2. மேலது நூல், பக்.88-89.

நித்தியமான உயர்-ஆன்ம
நேர்படை யேகொள்ளுவார்

என்ற பாடல் பாடப்பட்டு மக்களுக்கு விளக்கமும் சொல்லப்பட்டது.[3]

இப்பாடலில் போர்க்கருவிகளைக் கொண்டு செய்யப்படும் வன்முறைப் போர் கண்டிக்கப்படுகிறது. சாத்வீகப் போரின் மேன்மை, பேசப்படுகிறது. முன்னது "பித்தர்களுக்கே" பிரியமான ஆயுதங்களைக் கொண்டு செய்யப்படும் போர். பின்னது ஆன்ம நேர்படையே கொள்ளும் "சத்தியம் சார்ந்த மனப் பெரியோரால்" நிகழ்த்தப்படும் அகிம்சைப் போர் என்பதையே பாரதியார் வெளிப்படுத்துகிறார்.

மற்றொரு பாடல் காந்திமகான் நடத்திய விடுதலை இயக்கத்தின் உயர்ந்த நோக்கங்களை மக்களுக்கு விளக்கிக் காட்ட மிகவும் பயன் பட்டது. அப்பாடல் வருமாறு

தன்னுயிர் போலத் தனக்கு அழிவெண்ணும்
பிறனுயிர் தன்னையும் கணித்தல்
மன்னுயிர் எல்லாம் கடவுளின் வடிவம்
கடவுளின் மக்களென்றுணர்தல்
இன்னமெய்ஞ்ஞானத் துணிவினை மற்றாங்கு
இழிபடும் போர், கொலை, தண்டம்
பின்னியே கிடக்கும் அரசியல் அதனில்
பிணைத்திடத் துணிந்தனை பெருமான்
பெருங்கொலை வழியாம் போர்வழி இகழ்ந்தாய்
அதனினும் பயன்பெரிதுடைத்தாம்
அருங்கலை வாணர் தொண்டர்கள் போற்றும்
அறவழி ஒன்று நீ கண்டாய்
நெருங்கிய பயன்சேர் ஒத்துழையாமை
நெறியினால் இந்தியாவிற்கு
வருங்கதி கண்டு பகைத்திறம் மறந்து
வையகம் வாழ்க நல் அறத்தே

எனக் காந்திஜியின் 'அறப்போரான ஒத்துழையாமை இயக்கம்' மறப்போரை விட எவ்வளவு உயர்ந்தது என்பதையும், அதனால் இந்தியாவிற்கு நல்ல கதி கிடைக்கும் என்பதையும் பாரதி தீர்க்கதரிசனமாக எடுத்துக் கூறியுள்ளார்.

---

3. மேலது நூல், ப.89.

மற்றொரு பாடலில் ஆங்கில ஆட்சியை மாயையாகப் பாவித்துக் கொண்டு அதைச் சாடுகிறார். அதைப் பாடிக்கொண்டு தொண்டர்கள் ஊர்வலம் செல்வது வழக்கமாக்கப்பட்டது எனக் கவிஞர் கூறுகிறார்.[4]

என்னைக் கெடுப்பதற் கெண்ணங் கொண்டாய்
கெட்ட மாயையே நான்
உன்னைக் கெடுப்பதுறுதியென்றே உணர்மாயையே
சாகத்துணிந்திடில் சமுத்திரம் எம்மட்டு
மாயையே இந்தத்
தேகம் பொய் என்றெண்ணும் தீரனா
என்செய்வாய் மாயையே[5]

“விடுதலை இயக்கத்தில் கலந்து கொள்ளப் பொது மக்களிடமிருந்த அச்சத்தைப் போக்கவும்; சத்தியாக்கிரகத் தொண்டர்களுடைய ஆர்வத்தை அதிகப்படுத்தவும் பாரதியின் பாடல்கள் மிகவும் பயன்பட்டன”[6] என்பது கவிஞரின் நம்பிக்கை. பாரதி இறந்த பிறகு அவரது பாணியைப் பின்பற்றிக் கவிஞர் அவ்வப்போது புதிய பாடல்களை இயற்றித் தொண்டர்களைப் பாடச் செய்து அவர்களுக்குப் புத்துயிர் ஊட்டினார். அப்பாடல்களை மனப்பாடம் செய்து கொண்டு அவர்கள் பிரச்சாரம் செய்தார்கள். நாட்டுப்பற்றை ஊக்குவிப்பதற்காக:

இந்திய நாடிது என்னுடை நாடு
என்று திதந்தினம் நீயதைப்பாடு
சொந்தமல்லாதவர் வந்தவர் ஆள
தூங்கிக் கிடந்தது போனது மாள
வந்தவர் போனவர் யாரையும் நம்பி
வாடின காலங்கள் ஓடின தம்பி
இந்தத் தினமுதல் இந்தியநாடு
என்னுடை நாடென்ற எண்ணத்தைக் கூடு
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
முத்தமிழ் நாடெந்தன் முன்னையர் நாடு
முற்றிலும் சொந்தம் எனக்கெனப்பாடு
சற்றும் உரிமையில்லாதவர் ஆள
சரிசரி என்று போனது மாள
பக்தியில் அன்பினில் பணிபல செய்வோம்

---

4. மேலது நூல், ப91. 5. மேலது நூல், பக். 6. மேலது நூல், ப92.

பயப்பட்டு யாருக்கும் பணிந்திடல் செய்யோம்
சத்தியம் சாந்தத்தில் முற்றிலும் நின்றே
சடுதியில் விடுதலை அடைவது நன்றாம்

என்ற பாடல்களை இயற்றித் தந்தார். அவற்றைத் தொண்டர்கள் ஆர்வத்தோடு பாடிக் கொண்டு ஊர்வலம் சென்றனர். காந்தியடிகளின் சாத்வீகப் போரின் மேன்மையைப் பிரச்சாரம் செய்யச்

சாந்தி சாந்தி சாந்தி யென்று
சங்கு கொண்டு ஊதுவோம்
சோர்ந்திருக்கும் உலகினுக்குச்
சுக மெடுத்து ஓதுவோம்
மாந்தருக்குள் கோப, தாப
வாது சூது மாறவே
காந்தி சொல்லும் மார்க்கமின்றி
கதி நமக்கு வேறில்லை
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
கொன்று வீழ்த்தல் வீர மென்னும்
கொச்சையான கொள்கையை
இன்று தொட்டு மாற்றி விட்டு
உண்மை வீரம் கொள்ளுவோம்
தொன்று தொட்டுக் கருணை கற்ற
பாரதநாட்டில் தோன்றினோம்
நன்று இந்தச் சேவைக் கேது
வேறு நம்மைப் போன்றவர்[7]

என்ற பாடல்களை இயற்றித் தொண்டர்களிடம் அவற்றைக் கொடுத்தார். மிக மகிழ்ச்சியுடன் அதை வாங்கிக்கொண்ட தொண்டர்கள் ஒவ்வொரு பிரச்சாரக் கூட்டம் தொடங்கும் முன்பாக அவற்றைப் பாடுவர். சின்ன அண்ணாமலை என்பவர் தவறாது இப்பாடல்களை ஒவ்வொரு கூட்டத்திலும் பாடுவார்.

தமிழருக்குக் கருணை எண்ணம்
தாயின் பாலில் தந்தது
குமிழி ஒத்த உயிரை நல்ல
கொள்கைக் கீய முந்திடும்
அமிழ்தமொத்த காந்தி மார்க்கம்
தமிழகத்தின் செல்வமாம்

---

7. மேலது நூல், ப93.

நமது சேவை அதனை ஏந்தி
நாட்டில் எங்கும் சொல்வதாம்[8]

என்ற பாடலும் எங்கெங்கும் தொண்டர்களால் பாடப்பட்டது.

சௌரி சௌராவில் சத்தியாக்கிரகிகள் ஒரு காவல் நிலையத்தைக் கொளுத்தி அதனால் பல காவலர்களை உயிரிழக்க செய்த நிகழ்ச்சி காந்திஜியின் மனத்தை உலுக்கியது. சத்தியாக்கிரகிகள் தம் விருப்பத்துக்கும் கொள்கைக்கும் மாறாக நடந்து கொண்டதால் சத்தியாக்கிரகத்தை நிறுத்தி விட்டு, உருப்படியான நிர்மாணத் திட்டங்களை (Reconstructive Programme) நிறைவேற்றுவதில் முழுமனதுடன் ஈடுபட்டார். அவற்றை மக்களிடையே பிரச்சாரம் செய்யக் கவிஞர் அவ்வப்போது பாடல்களை எழுதி வெளியிட்டார். கதர் இயக்கத்துக்கு ஆதரவாக

பல்லவி

ஆடுராட்டே, சுழன்றாடு ராட்டே

அனுபல்லவி

சுழன்று சுழன்று சுழன்றாடு ராட்டே-இனி
சுயராஜ்யம் வந்ததென்று ஆடுராட்டே

சரணங்கள்

அன்னியர்கள் நூல்கொடுத்து ஆடைகொடுத்து-நம்
அங்கத்தை மூடுகின்ற பங்கமொழியும்
கன்னியர்கள் நூற்கப் பல காளைகள் நெய்ய-நாம்
காத்துக் கொள்வோம் மானம் என்று (ஆடு)

சாந்தி பெருகுமென்று ஆடுராட்டே-மனச்
சாட்சி விளங்குமென்று ஆடுராட்டே
காந்தி துலங்குமென்று ஆடுராட்டே-அந்தக்
காட்சி சுதந்தர மென்றாடு ராட்டே

என்ற பாட்டு பாடப்பட்டது.[9] இதைத் தவிர

கதர்த்துணி வாங்கலையோ அம்மா
கதர்த்துணி வாங்கலையோ ஐயா
ஏழைகள் நூற்றது களைத்தவர் செய்தது
கூழும் இல்லாதவர் குறைபல தீர்ப்பது[10]

---

8. மேலது நூல், ப. 9. மேலது

10. நாமக்கல் கவிஞரின் கவிதைகள்- காந்தியமும் தேசியமும், பாகம்-1, ப.250, மணிமேகலைப் பிரசுரம். சென்னை,17, 2001.

என்ற பாடலையும் பெண்கள் பாடிக்கொண்டே கதர்த்துணியை விற்றார்களென்றும், கவிஞரது மனைவியே அதில் கலந்து கொண்டாரென்றும் நாம் கேள்விப் படுகிறோம்.

கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்ட தொண்டர்கள் பாடுவதற்காக,

குடிப்பதைத் தடுப்பதே கோடிகோடி புண்ணியம்
அடிப்பினும் பொறுத்து நாம் அன்புகொண்டு
வெல்லுவோம்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

மக்களை வதைத்திடும் மனைவியை உதைத்திடும்
துக்கமான கள்ளினைத் தொலைப்பதே துரைத்தனம்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

கஞ்சியின்றி மனைவி மக்கள் காத்திருக்க வீட்டிலே
வஞ்சமாகக் கூலிமுற்றும் வழிபறிக்கும் கள்ளினை (குடி)
குற்றமற்ற பேர்களும் கொலைஞராவர் கள்ளினால்
கத்திகுத்து சண்டை வேண கள்ளினால் விளைந்ததே
(குடி)
குற்றமென்று யாருமே கூறுமிந்தக் கள்ளினை
விற்க விட்டுத் தீமையை விளைப்பதென்ன விந்தையே
(குடி)

என்ற பாடல் வரிசையையும், தீண்டாமையை ஒழிப்பதற்காக:

தீண்டாமை என்கிற தீய வழக்கம்
தீரத் தொலைந்திடச் செய்வோம்
ஆண்டவன் பொதுவென்று நம்பினயாரும்
அந்தப் பழியை அகற்றிட வாரும் (தீண்)
இந்த வழக்கம் நாளுக்கு நாளாய்
இந்து மதத்தினை வெட்டுது வாளாய்
நிந்தை மிகுந்து அழிந்திடு முன்பே
நீக்கிட யாரும் எழுந்திடும் இன்னே (தீண்)

என்ற பாடல் வரிசையும்

ஓட்டடா! ஓட்டடா! நாட்டை விட்டே ஓட்டடா
தீட்டடா மாந்தருக்குள் தீண்டேல் என்ற தீமையை

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

தொத்து நோய்கள் மெத்தவும்
தொடர்ந்து விட்ட பேரையும்

தொட்டுக் கிட்டிச் சொஸ்தமாக்கல்
　　தர்ம மென்று சொல்லுவார்
சுத்த மேனும் ஜாதியால்
　　தொடப்படாது என்றிடில்
தொத்து நோயைக் காட்டிலும்
　　கொடியரென்று சொல்வதோ
நாய்க்குரங்கு பூனையை
　　நத்திமுத்தம் இடுகிறோம்
நரகலுண்ணும் பன்றியும்
　　நம்மைத் தீண்ட ஒப்புவோம்
ஆயும் ஆறு அறிவுடை
　　ஆன்ம ஞான மனிதனை
அருகிலே வரப்பொறாமை
　　அறிவிலே பொருந்துமோ?
செடிமரங்கள் கொடிகளும்
　　ஜீவரென்ற உண்மையை
ஜெகமறிந்து கொள்ளுமுன்பு
　　செய்த திந்த நாடடா!
முடிவறிந்த உண்மை ஞானம்
　　முற்றி நின்ற நாட்டிலே
மூடரும் சிரிக்கு மிந்த
　　முறையிலா வழக்கமேன்?[11]

என்ற பாடல் வரிகளையும் பாடியுள்ளார். குட்டம் முதலிய தொத்து நோயால் பீடிக்கப்பட்ட வரையும், நாய், குரங்கு, பூனை போன்ற ஐயறிவு படைத்த மிருகங்களையும் ஓரறிவுள்ள செடி கொடிகளையும் தொடக் கூசாத நாம் ஆறறிவு படைத்த சில மனிதர்களைத் தொடக்கூடாது எனச் சொல்வது என்ன நியாயம்? என்று கவிஞர் கேட்பதில் பெரிதும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது.

காந்தியடிகளின் இயக்கத்துக்குச் சிகரமாக விளங்கியது அவரது சட்டமறுப்பியக்கம். எந்தச் சட்டத்தை மீறலாம் என்று பலவாறு யோசித்த பின் உப்புச் சட்டத்தை மீறுவதாக அவர் முடிவெடுத்தார். அதன்படி, காந்திஜி தனது சீடர்களுடன் தண்டி என்ற கடற்கரைப் பட்டினத்துக்கு உப்பு காய்க்கச் சென்றார். இந்த உப்புச் சத்தியாக்கிரகம் பல மாநிலங்களிலும் பலவாறாக நடைபெற்றது. தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில், வேதாரண்யம் என்ற கடற்கரைப் பட்டினம் சென்று உப்புக் காய்ச்சுவதாகத்

---

11. மேலது நூல், ப.10.

தீர்மானிக்கப்பட்டது. அதன் பொருட்டு திரு. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரின் தலைமையில் நூறு தொண்டர்கள் திருச்சியில் உள்ள டாக்டர் ராஜன் அவர்களுடைய பங்களாவிலிருந்து வேதாரண்யம் நோக்கி ஊர்வலமாகச் சென்றனர். அதிகாலையில் வழிநடை ஆரம்பிக்கும் போது, கவிஞர் ஏற்கெனவே எழுதி வைத்திருந்த கத்தியின்றி இரத்தமின்றி யுத்த மொன்று வருகுது என்ற பாடலைப் பாடினார். அதைக் கேட்டுப் பரவசமடைந்த ராஜாஜி, பயணம் முழுவதிலும் அதையே வழிநடைப் பாட்டாகப் பாடும்படி பணித்தார். அதன் பிறகு நெடுநாள் வரைக்கும் அந்தப் பாட்டு தமிழ்நாட்டில் முழங்கிக் கொண்டிருந்தது. அப்பாடல்களாவன

கத்தியின்றி இரத்தமின்றி
யுத்தமொன்று வருகுது
சத்தியத்தின் நித்தியத்தை
நம்பும் யாரும் சேருவீர் (கத்)
ஒண்டியண்டிக் குண்டுவிட்டு
உயிர் பறித்த லின்றியே
மண்டலத்தில் கண்டிலாத
சண்டை யொன்று புதுமையே (கத்)
குதிரை இல்லை யானை இல்லை
கொல்லும் ஆசை இல்லையே
எதிரியென்று யாருமில்லை
எற்றும் ஆசை இல்லதாய் (கத்)
கோபமில்லை, தாபமில்லை
சாபங் கூறல் இல்லையே
பாபமான செய்கை யொன்றும்
பண்ணுமாசை யின்றியே (கத்)
கண்டதில்லை, கேட்டதில்லை
சண்டை இந்த மாதிரி
பண்டு செய்த புண்ணியம்
பலித்ததே நாம் பார்த்திட (கத்)
காந்தியென்ற சாந்த மூர்த்தி
தேர்ந்து காட்டும் செந்நெறி
மாந்தருக்குள் தீமைகுன்ற
வாய்ந்த தெய்வ மார்க்கமே[12]

இப்பாடல்களில் காந்திஜியின் அறப் போரின் இலக்கணங்களான சத்தியத்தில் நம்பிக்கை, உயிர்களைக் கொல்லாமை, எதிரியின்மீது கோபப்படாதிருத்தல், எதிரிமீது

12. மேலது நூல், ப97.

சாபங்கொடாதிருத்தல், பாவமான செய்கை எதுவும் செய்து விடாதிருத்தல் முதலிய பண்புகள் நன்கு வலியுறுத்தப்பட்டுள்ளன. காந்திஜி கண்டுபிடித்த இப்புதுமையான போரைத் தெய்வமார்க்கம் என்று புகழ்கிறார் கவிஞர்.

கவிஞர் தனது மாமனார் ஊரான கரூரில் தங்கியிருந்தபோது, தேசபக்தர் சிலர் கூட்டமாக வந்து, தாங்கள் தேசியப் பிரச்சாரத்துக்காக ஊர் ஊராகப் போகும்போது, பலர் தங்களைப் பிச்சை எடுக்க வந்தவர்கள் போல் பாவித்துப் பணம் தர முன் வருவதாகவும், இகழ்ச்சியாகப் பேசுவதாகவும், தாங்கள் மேலும் அவமானப்படாமல் பாடிக்கொண்டு போக ஒரு பாடலை உருவாக்கித் தரவேண்டுமெனக் கேட்டுக் கொண்டனராம். அதற்கேற்ப அவர் பாடிக் கொடுத்த பாடல்:

தேசபக்தர் திருக் கூட்டம் – தேச
சேவை செய்வது எங்கள் நாட்டம்
பாச பந்தமெல்லாம் ஓடி–விடப்
பாரதப் பெருமைபாடி . . . (தேச)

பிச்சை எடுக்க வந்ததல்ல–வேறு
பிழைக்க வழியிலை என்று அல்ல
இச்சை வந்து மிகத் துள்ள–தேசம்
இருக்கு மிதனைச் சொல்ல . . . (தேச)

தூங்கித் தூங்கி விழும் தமிழா! உன்
தூக்கம் போக்க வந்தோம் தமிழா
ஏங்கிப் படுத்திருக்கும் தமிழா–உன்னை
எழுப்ப வந்த சக்தி தமிழா. . . (தேச)

எழுந்து நின்று கண்ணைத் துடைத்தே–உன்
இரு கையாலும் கொடிபிடித்தே
அழுந்திக் கீழிருந்து வாடும்–அன்னை
அடிமை நீக்க வழிதேடும் . . . (தேச)

வெட்டி வெட்டி எறிந்தாலும்–எமை
வேறு இம்சை புரிந்தாலும்
கட்டி ரத்தம் சொரிந்தாலும்–நாங்கள்
தூய்மை மாறிடோம் நாளும் . . . (தேச)

சாந்த மூர்த்தியந்தக் காந்தி–சொன்ன
சத்தியந்தனையே ஏந்தி
மாந்தர் யாரும் இனி உய்ய–உயர்
மார்க்க போதனைகள் செய்ய . . . (தேச)

தேவி சக்திதுணை கொண்டு–இந்தத்
தேசம் சுற்றிவரவென்று
கூவிக் கூவி யெங்கள் தொண்டு–செய்யக்
குறைகள் தீரும் இனி நன்று[13]

காலஞ்சென்ற திரு சின்ன அண்ணாமலை அவர்கள் கவிஞரின் உண்மையான பக்தர்களுள் ஒருவர். அவரது நூல்கள் பலவற்றை முதன்முதல் வெளிக் கொணர்ந்தவர் அவரே. தேசியப் பிரச்சாரக் கூட்டங்களிலெல்லாம், கூட்டம் தொடங்கு முன்பு அவர் கவிஞரின் பாடல்கள் சிலவற்றைப் பாடுவார். அவற்றை நானும் கேட்டிருக்கிறேன். அவற்றில் மிக முக்கியமான பாட்டு 'சங்க நாதம் கேட்குது' என்ற பாடலாகும். அது வருமாறு

சாந்தி காந்தி சத்தியத்தின்
சங்கநாதம் கேட்குது
ஆய்ந்து பார்க்கத் தேவையில்லை
அதிலிருக்கும் நன்மையை

இடி இடித்து மின்னல் மின்னி
இருள் கவிந்து எங்கணும்
கிடுகிடுத்து உலகமெங்கும்
கிலிபிடித்த வேளையில்
குடுகுடுத்த கிழவர் காந்தி
குமரர் நாணக் கூவினார்
துடிதுடித்து உண்மை போற்றும்
தொண்டர் யாரும் கூடுவோம்

வீடுபற்றி வேகும் போது
வீணை மீட்டும் வீணர்போல்
நாடு முற்றும் புதிய வாழ்வை
நாடுகின்ற நாளிலே
பாடுமிக்க சேவை விட்டுப்
பதவி மோகம் பற்றினால்

---

13. தேசபக்தர்கள் வேண்டுகோள் விடுத்த அக்கணமே கவிஞர் இப்பாடல்களைப் பாடிக்கொடுத்தார் என்று அந்நிகழ்ச்சியை நேரில் கண்ட, கவிஞரின் மைத்துனர் திரு.சோமசுந்தரம் பிள்ளை என்னிடம் கூறியது. நாமேக்கல் கவிஞர் பாடல்கள், தொகுப்பாசிரியர் புலவர் சிவகன்னியப்பன், பூம்புகார் பதிப்பகம், சென்னை-108, ப.374 இல் இப்பாடல் இடம் பெற்றுள்ளது.

கேடு என்ற எச்சரிக்கை
    கிழவர் காந்தி கூக்குரல்
கடல் கலங்கப் புயலடித்துத்
    தத்தளிக்கும் கப்பலின்
திடமிகுந்த தெளிவுகொண்ட
    திசையறிந்த மாலுமி
இடமறிந்து காலங் கற்ற
    இந்த நாட்டின் மந்திரி
கடனறிந்த காந்தி போதம்
    கவலை போக்கும் மந்திரம்

கர்மவீரன் காந்தி என்னும்
    காளமேக கர்ஜனை
தர்மமான மழை பொழிந்து
    தரணி முற்றும் குளிரவே
வர்மமான வார்த்தை யாவும்
    வாது சூது செய்திடும்
மர்மமான எதையும் விட்ட
    ராஜமார்க்க மதிதரும்

வீரமென்றும் சூரமென்றும்
    வெறிகொடுக்கும் பேச்சினால்
காரமுள்ள வார்த்தை யாவும்
    யாரை என்ன செய்திடும்
தீரர் ஞான காந்தி சங்கம்
    திசை முழங்கக் கேட்குது
சேரவாரும் மனித வாழ்க்கை
    சீர்திருத்த வேண்டுவோர்[14]

---

14. நாமக்கல் கவிஞரின் கவிதைகள் காந்தியமும் தேசியமும்- பாகம்-1, ப.188, மணிமேகலைப் பிரசுரம், சென்னை-17: 2001. இவ்வாறு இக்கட்டுரையில் இடம்பெறாத கவிஞரின் தேசிய. காந்தியக் கவிதைகள் பல உள்ளன அவற்றை மேற்கண்ட மணிமேகலைப் பிரசுரம் வெளியிட்டுள்ள கவிதைத் தொகுப்பு, அல்லது பூம்புகார்ப் பதிப்பகம், சென்னை-108 அல்லது வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-17. வெளியிட்டுள்ள நாமக்கல் கவிஞர் பாடல்களின் தொகுப்பு நூல்களில் விரிவாகக் காணலாம்.

# காந்திய அரசியல்

ஸ்ரீமத் நாராயண அகர்வால் ஆங்கிலத்தில் எழுதிய Gandhian Policy நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையால் தமிழாக்கம் செய்யப்பட்டது.

ஸ்ரீ அகர்வால் அவர்கள் காந்திஜியின் நெருங்கிய நண்பர்களில் ஒருவர். காந்தி அடிகளின் ராமராஜ்யக் கருத்துகளை ஆதியிலிருந்து ஆர்வத்தோடு அறிந்து வந்தவர். எனவே அத்தகைய ராமராஜ்யத்துக்கு அடிப்படையாக அமையத் தகுந்த ஒரு அரசியல் திட்டத்தை இந்நூலில் வகுத்துத் தந்துள்ளார். இவர் கூறியுள்ள அனைத்துக் கருத்துகளும் தமக்கு உடன்பாடானவையே என்றும், "அவகாசக் குறைவால்,தாம் எழுதியிருக்க வேண்டிய இத்திட்டத்தை ஸ்ரீ அகர்வால் அவர்கள் எழுதினதற்காக மகாத்மா காந்தியே அவரைப்பாராட்டியுள்ளார்."[1] எனவேதான், காந்திஜியின் கொள்கைகளைப் பரப்புவதை தனது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்ட நாமக்கல் கவிஞர் இந்நூலைத் தமிழாக்கம் செய்துள்ளார். இந்நூலில் சொல்லப்படுகிற தேர்தல் முறைமட்டும் மிகவும் குறிப்பிடத்தக்கதாமென்றும், அதை மட்டுமாகிலும் நாம் படித்து அறிய வேண்டுவது அவசியம் என்றும் கூறுகிறார்.[2]

அகர்வால் தமது நூலில் சுயேச்சையான கிராமச் சமுதாயம் பற்றியே விதந்து ஓதியிருக்கிறார். "இந்தியாவில் பல நூற்றாண்டுகளாக வெகு பக்குவமாய்ப் பயிர் செய்து பாதுகாக்கப்பட்டு வந்திருக்கிற எல்லா அதிகாரமும் ஒரே இடத்தில் அமையாத கிராமச் சமுதாயம் என்னும் ஜனநாயக முறையும், ஸ்தல சுயாட்சி முறையும் அநேக நூற்றாண்டுகளாக இந்த நாட்டில் நடந்திருக்கிற அரசியல் பிரளயங்களுக்கெல்லாம் அசையாமல் இருந்து வந்திருக்கிறது.

---

1. காந்திய அரசியல், ப.v, vii தமிழ்ப் புத்தகப் பண்ணை, தி.நகர், சென்னை-17, 1953.
   ஸ்ரீமத் நாராயண அகர்வால் அவர்களால் எழுதப்பட்ட Gandhian Policy என்ற ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு (நாமக்கல் கவிஞர்)
2. மேலது நூல், ப.iv.

தற்காலத்திற்கேற்றவாறு ஒரு சில திருத்தங்களோடு அவை பயன்படுத்தப்படக் கூடியவையே" என அவர் உறுதியாக நம்புகிறார்.

முதலில் அவர் அரசாங்கத்தின் நோக்கம் எதுவாயிருக்க வேண்டும் என்பதை விளக்குகிறார். "அரசாங்கம் என்பது, சம அந்தஸ்துள்ள தனித்தனி மனிதர்கள் சேர்ந்த ஒரு கூட்டுறவுச் சங்கம் தான். எல்லாருமாகச் சேர்ந்து கூடிய மட்டும் நல்வாழ்வு வாழ முயல்வதே அரசாங்கம்" என்ற அரிஸ்டாட்டில் எனும் கிரேக்க அறிஞரின் கருத்தை இவரும் ஒப்புக்கொள்கிறார்[3]. "குடிகளின் சுகத்தில் தான் அரசனுடைய சுகம் அடங்கியிருக்கிறது"[4] என்ற கௌடில்யர் என்ற இந்திய அறிஞரின் கருத்தையும் அவர் ஏற்றுக்கொள்கிறார். பின்னர் சர்வாதிகார ஆட்சியையும், ஜனநாயகம் அல்லது மக்களாட்சியையும் ஒப்பிட்டு ஜனநாயகமே உயர்ந்தது என்று வாதிடுகிறார்[5]. "ஜனங்கள் எல்லாரும் சம அந்தஸ்துடையவர்கள். சமமான பொறுப்பாளிகள் என்ற உணர்ச்சி ஏற்பட்டால் தான் நாட்டில் திருப்தியும் பாதுகாப்பும் உண்டாகும்" என்று லார்டு பிரைஸ் (Lord Bryce) சொல்வதை அவர் மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறார். ஆனால் ஜனநாயகத்திலும், முதலாளித்துவத்தால் ஏற்படும் தீமைகள், தேர்தல் காலத்து நடைபெறும் கலகங்கள், ஊழல்கள், கட்சிகளால் விளையும் கேடுகள் முதலியவைகளை எடுத்துக் காட்டுகிறார்[6]. அதன் பின்னர், காந்திஜி அவர்களால் வற்புறுத்தப்பட்ட அகிம்சை, அதிகாரப் பங்கீடு (Distribution of Powers) இவற்றை அடிப்படையாகக் கொண்ட ஜனநாயகமே சிறந்த ஜனநாயகம் என்று அறுதியிட்டுக் கூறுகிறார். ஜனநாயகமும் பலாத்காரமும் சேர்ந்திருக்க முடியாதென்றும், முதலாளிகள் அல்லது பலவான்கள் ஏழைகளைச் சுரண்டும் சுரண்டலை ஒழிக்கப் பலாத்காரமில்லாத அரசாங்கம் தேவை. பொருளாதாரச் சமதர்மம் அப்போதே சித்திக்கும். அதேபோல் அதிகாரம் ஒரே இடத்தில் குவிவதால் ஏற்படும் தீமைகளைப் போக்கக் கிராம சுயராஜ்யமே உற்ற மருந்து என்பது அவர் கருத்து.[7] பின்னர்க் கிராம சுயராஜ்யம், பண்டைக்காலம் முதல் ஆங்கிலேயர் ஆட்சி வரும் வரை எவ்வாறு வளர்ச்சியடைந்தது என்பதையும் அதன் நன்மைகளையும் விவரிக்கிறார். சமூக வாழ்விலும், பொருளாதார நிலையிலும், அரசியல் அதிகாரங்களிலும் முற்றிலும் சுதந்திரமான,

3. மேலது நூல், ப.13.
4. மேலது நூல், ப.19.
5. மேலது நூல், ப.29.
6. மேலது நூல், பக்.31-40.
7. மேலது நூல், பக்.44-51.

தனித்தனிக் கிராம சமுதாயங்களை அடிப்படையாகக் கொண்ட சுயராஜ்ய அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்பது தான் காந்திஜியின் விருப்பம் என்றும், கிராமங்கள் சரியான முறையில் தாலூகா பஞ்சாயத்து, ஜில்லா பஞ்சாயத்து, மாகாணசபை, மத்திய ஐக்கியம் ஆகியவற்றுடன் இணைக்கப்பட வேண்டும் என்பதையும் விரிவாகக் கூறுகிறார்.[8] ராமராஜ்யம் அல்லது கிராம சுயராஜ்யம் பற்றிக் காந்திஜி எழுதிய கட்டுரையை[9] அவர் அப்படியே வெளியிட்டுள்ளார். காந்திஜி கண்ட ராமராஜ்யத்தில் "பணமுள்ளவன், பணமில்லாதவன் என்ற வித்தியாசங்களினால் உண்டாகும் ஏற்றத் தாழ்வுகளும், நிறம், மதம், ஆண், பெண் என்ற வேற்றுமைகளில் ஒன்றுகூட இல்லாமல் மறைந்து போகிற ஒரு அப்பழுக்கற்ற பரிபூரண ஜனநாயகம் நிலவும். அதில் விளைநிலங்களும் அரசாட்சியும் ஜனங்களின் பொது உடைமை.

அதில் நீதி என்பது உடனுக்குடன் வழங்கப்படும். அந்த நீதி குற்றமற்றதாயும், செலவு இல்லாததுமாக இருக்கும். அதனால் இஷ்டப்படி தெய்வத்தை வணங்கவும், பேசவும், பத்திரிகையில் அச்சடிக்கவும் சுதந்திரம் இருக்கும். இந்தச் சுதந்திரம் ஜனங்கள் தாங்களே இயற்றிக் கொள்ளும் சட்டங்களுக்கு அடங்கியதாக இருக்குமென்பதில் ஒழுங்கும் அடக்கமுமுள்ள சுதந்திரமாகவே இருக்கும். இந்த அரசாங்கம் சத்தியத்தையும் அஹிம்சையையுமே அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும். அந்த அரசாங்கத்தின் செழிப்பும், திருப்தியும் மக்களுக்குத் தேவையான எல்லா வசதிகளும் அடங்கியதுமான கிராமங்களும், கிராமச் சமுதாயங்களுமே அடங்கியிருக்கும்" என்பதாகும்.

இத்தகைய கிராம சுயராஜ்யத்தை நடைமுறைப்படுத்த 'ஜீவாதார உரிமைகளும் கடமைகளும் கிராம தாலுக்கா, ஜில்லாப் பஞ்சாயத்துகள், அவற்றின் அலுவல்கள் மாகாண ஆட்சி, மைய அரசு, நீதி பரிபாலனம் இவைபற்றி விரிவாகக் கூறிக் காந்திஜியின் கனவு நனவாக்கக் கூடியதே என்பதைத் தெள்ளிதின் விளக்குகிறார் அகர்வால் அவர்கள். அதன்பின் தேர்தல் முறை பற்றிக் கூறும் செய்திகள் தான் குறிப்பிடத்தக்கவை.

## தேர்தல் முறை

தேர்தல் முறையில் இரண்டு வகை உண்டு. ஒன்று நேர்முகத் தேர்தல் (Direct Election); மற்றொன்று மறைமுகத் தேர்தல் (Indirect election-Election by the elected). இவற்றில் கிராமப் பஞ்சாயத்துத்

---

8. மேலது நூல், ப.86.
9. ஹிந்து பத்திரிகை ஜுன் 22, 1945.

தேர்தல்கள் நேர்முகமானதாய் இருக்கலாம். ஏனெனில் கிராமங்கள் சிறிய தொகுதியாக இருக்குமாதலால் ஒருவரை ஒருவர் நன்கு அறிவர். தேர்தலுக்கு நிற்கும் வேட்பாளர்கள், நல்லவர்களா, கெட்டவர்களா, நம்பத் தகுந்தவர்களா, குற்றமற்றவர்களா என்பதை மக்கள் நன்றாக அறிவர். எனவே தகுதிபடைத்த சான்றோர்களையே அவர்கள் தேர்ந்தெடுப்பர். சோழர் காலத்தில் நடைபெற்ற சீட்டுக் குலுக்கல் முறையில் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கலாம் என்கிறார் அகர்வால். சோழப் பேரரசர்கள் காலத்தில் கிராமப் பஞ்சாயத்துச் சபைகளுக்குக் "குடவோலை" முறை என்ற சீட்டுக்குலுக்கு முறையில் தேர்தல் நடைபெற்றது. ஒவ்வொரு கிராமத்துக்கும் பல குடும்புகள் (wards) இருக்கும். ஒவ்வொரு குடும்புக்கும் தகுதியான வேட்பாளர் பெயர் என்ன என்பதை ஒரு ஓலையில் எழுதி அதை ஒரு குடத்தில் கிராமப் பொதுமக்கள் போட்டு விடுவர். நடுவர் ஒருவர் ஒவ்வொரு குடும்புக்கும் போட்டியிடத் தகுதியானவர்கள் பெயர்களை எல்லாம் சேர்த்து ஒரு கட்டாகக் கட்டி ஒரு குடத்துள் போட்டுவிடுவார். எத்தனைக் குடும்புகள் உள்ளனவோ அத்தனைக் கட்டுகள் குடத்தில் இருக்கும். அக்குடம், கிராமமக்கள் அனைவரும் கூடிய சபையின் முன்பாகக் கோயிலின் மேடையில் வைக்கப்படும். பின்னர்க் கூட்டத்திலிருந்து முன்பின் தெரியாத ஒரு சிறுவனை அழைத்து ஒரு கட்டை எடுத்து அக் குடும்புக்கு எத்தனைப் பேர் தேர்ந்தெடுக்கப் படவேண்டுமோ அத்தனை ஓலைச் சீட்டுகளை எடுக்கச் செய்து அப்பெயர்களை எல்லார் முன்னிலையிலும் படிப்பர். இப்படியாக ஒவ்வொரு கட்டாக எடுத்து ஒவ்வொரு தொகுதிக்கும் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் படுவர். ஒவ்வொரு ஓலைக் கட்டிலும் காணப்படும் நபர்கள் யாவரும் ஒரே தகுதியுடையவர்கள் என்பதால் ஒருவரது தேர்வு மற்றவர்களுக்குப் பொறாமையையோ வெறுப்பையோ ஏற்படுத்தாது. இதே முறை இன்றும் கடைப்பிடிக்கப் படலாம் என்கிறார் அகர்வால். சீட்டுக்குலுக்கு முறையில் (lot system) போட்டியோ, பொறாமையோ ஏற்பட வழியில்லை. வாக்காளர்கள், தமக்கு நன்கு தெரிந்த நல்ல வேட்பாளர்களைத் தேர்ந்தெடுக்க இதுவே நல்லவழி.[10] இவ்வாறு தேர்தெடுக்கப்பட்டவர்கள் பல வாரியங்களாகப் (committee) பிரிக்கப்பட்டுக் கிராம நிர்வாகத்தை மேற்கொள்வர்.

இம்முறையில் வயதுவந்த ஆண் பெண் இருபாலாருக்கும் சம வாக்குரிமை உண்டு. எழுதப் படிக்கத் தெரிந்திருப்பது கூட வாக்காளர்களுக்கு அவசியமில்லை என்கிறார் காந்திஜி. ஆனால்

---

10. மேலது நூல், பக்.121-4.

பஞ்சாயத்து உறுப்பினர்களுக்குச் சில தகுதிகள் தேவை. சோழர் காலத்தில் அத்தகையோர், நிலவுடைமை, சொத்துடைமை, கல்வி (சாஸ்திரங்களில் பயிற்சி) கையூட்டு (இலஞ்சம்) வாங்காதது, கழுதை மீது ஏற்றி ஊர்வலம் செய்யப்படாதது (பிறன் மனைவியை விரும்பியதற்காக), சிறை செல்லாதது போன்ற தகுதிகளை உடையவர்களாயிருக்க வேண்டுமென்று உத்திரமேரூர் சாசனம் சொல்கிறது. ஆனால் எழுத்தறிவு, கல்வித் திறம், லௌகீகக் காரியங்களில் அநுபவ முதிர்ச்சி, பிறரை நம்ப வேண்டாத செல்வச் சிறப்பு, கிராமத்துக்கு அவர் செய்துள்ள தன்னலமற்ற சேவை, இவை இருந்தால் போதும் என்கிறார் அகர்வால். சிறுபான்மையோருக்கு தனித் தொகுதி முறை (Separate Electorate) கூடாதென்கிறார் அவர். கிராம சபைகள் மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படலாம் என்கிறார். கிராமங்களுக்கு மேல் உள்ள தாலூகா, ஜில்லா, மாகாண மத்திய அரசு பஞ்சாயத்துக்களுக்கு மறைமுகத் தேர்வே நல்லது என்பது காந்திஜியின் விருப்பமாகும். கிராமப் பஞ்சாயத்துகளின் தலைவர்கள் தாலுகாப் பஞ்சாயத்துக்கும், தாலுகாப் பஞ்சாயத்துத் தலைவர்கள் ஜில்லாப் பஞ்சாயத்துக்கும், ஜில்லாப் பஞ்சாயத்துத் தலைவர்கள் மாகாணப் பஞ்சாயத்துக்கும், மாகாணப் பஞ்சாயத்து தலைவர்கள் மத்திய அரசுப் பஞ்சாயத்துக்கும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பர். இப்படி ஏற்கெனவே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களால் தேர்தெடுக்கப்படுவதே (ராஜ்யசபா உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பது போல) மறைமுகத் தேர்வு எனப்படும். இச்சபைகள் எல்லாம் பெரும்பாலும் ஆலோசனை கூறும் அவைகளாக இருக்குமாதலால் இவற்றுக்கு மறைமுகத் தேர்வே நல்லது என்பது காந்திஜி அவர்களின் விருப்பமாகும். அகர்வாலின் விருப்பமும் அதுவே.[11] இம்முறையைக் கடைப்பிடிப்பதால் நேர்முகத் தேர்வில் ஏற்படுகின்ற தேசிய சக்திகளின் விரயம், பண விரயம், காலவிரயம் யாவும் தடுக்கப்படுகின்றன. போட்டியும், பொறாமையும் அதனால் ஏற்படும் கலவரங்களும், சாதி, மதமாச்சரியங்களும், கட்சி மனஸ்தாபங்களும், லஞ்சங்களும், பித்தலாட்டங்களும் மிகவும் குறைந்து தாமாகவே மறைந்து விடும் என்கிறார் அகர்வால். மற்றும் கீழ்ப்பஞ்சாயத்து உறுப்பினர் மேல் பஞ்சாயத்து உறுப்பினராகவும், சில சமயம் அகில இந்தியப் பஞ்சாயத்து உறுப்பினர் அல்லது தலைவராகவும் வர இதில் வாய்ப்புண்டு. பஞ்சாயத்துகள் ஒன்றுக்கொன்று பிணைந்து கூட்டாகப் பணியாற்ற இம்முறை வழிவகுக்கிறது.[12]

---

11. மேலது நூல், பக்.12 12. மேலது நூல், பக்.121.

# மரகத வல்லி

"மரகத வல்லி" எனும் இப்புதினம் முற்றிலும் காதல் சம்மந்தப் பட்ட கதை. காந்தியத்தைப் பற்றிக் கதையின் இறுதியில் தான் சிறிதே பேசப்படுகிறது.

மரகதவல்லி என்ற இப்புதினத்தின் கதாநாயகி அழகும் குணமும் ஒருங்கே பொருந்திய ஒரு இளம்பெண். அவளும் அவளது பெற்றோர்களாகிய அம்பலவாணரும் பெரியநாயகி அம்மாளும் ஒரு முறை பழனிக்குப் போய் முருகனைத் தரிசித்துவிட்டுப் படிகளில் இறங்கி வரும்போது, கால் இடறி அம்பலவாணர் கீழே விழப் போனார். அப்போது கீழிருந்து மேலே வந்து கொண்டிருந்த சிவகுமாரன் எனும் வாலிபன் பாய்ந்தோடி வந்து அவரைத் தாங்கிப் பிடித்துக் காப்பாற்றுகிறான். அப்போது அவனுடைய மண்டையில் சிறிது காயம் ஏற்பட்டு விடுகிறது. அம்பலவாணர், அவனைத் தாம் தங்கியிருந்த சத்திரத்துக்கு அழைத்துப் போய், டாக்டரை அழைத்து அவனது காயத்துக்கு மருந்திட்டுக் குணமாக்குகிறார். சிவகுமாரனுடைய கட்டுமஸ்தான உடலழகும், அவனது சுயநலமற்ற சேவை மனப்பான்மையும் மரகதவல்லியின் உள்ளத்தை அவன் பால் ஈர்க்கிறது. அவன் தன் ஊருக்குப் போகும்வரை அவனிடம் அவள் தாராளமாகப் பேசிச் சிரித்து, அவனது குணநலன்களை நன்கு அறிந்த கொண்ட அவளுக்கு அவன் பால் காதல் மலர்கிறது. சிவகுமாரனுக்கும் அவள் பால் ஈர்ப்பும் காதலும் உண்டாகிறது. ஆனால் அதை இருவரும் வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

பெரியநாயகி அம்மாள் தனது தமையன் மகன் செல்வராஜனுக்கே தன் மகளைத் திருமணம் செய்து கொடுப்பதாக வாக்களித்திருந்தாள். செல்வராஜன் ஒரு பெண்பித்தன். மேற்படிப்பிற்காக அவன் இங்கிலாந்து போயிருந்த போது, மான்செஸ்டர் நகரில் வாழ்ந்த ஜேம்ஸ் ராபர்ட்ஸன் என்ற துரையின் வீட்டில் விருந்தாளியாகத் தங்கியிருந்தான். ராபர்ட்ஸன் வீட்டில் மேல் மாடியில் குடியிருந்த ஜார்ஜ் ஹென்றி என்பவருக்கு லூசி என்ற அழகிய பெண்மகள் இருந்தாள். செல்வராஜன் லூசியுடன் நெருங்கிப் பழகித் தன் காதலை வெளியிட்டு அவளை மணந்து கொள்வதாகவும் வாக்களித்தான். அதனை நம்பி லூசி ஒரு முறை அவனிடம் தன் கற்பைப் பறிகொடுத்துக் கர்ப்பவதியானாள். தன்னை விரைவில் மணந்து கொள்ளும்படி வற்புறுத்தினாள்.

ஐரோப்பாவுக்குப் போய் சில முக்கிய இடங்களைப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து அவளைத் திருமணம் செய்து கொள்வதாக வாக்களித்து விட்டு இந்தியாவுக்கே வந்து மரகதவல்லியைத் தனக்கு மணமுடித்துத் தருமாறு தன் அத்தை பெரியநாயகியை வற்புறுத்தலானான். அப்போது இங்கிலாந்திலிருந்து ராபர்ட்சனிடமிருந்து ஒரு ரிஜிஸ்டர் கடிதம் அம்பலவாணருக்கு வந்தது. அதில் செல்வராஜன் வாக்குறுதி அளித்தபடி விரைவில் வந்து லூசியைத் திருமணம் செய்து கொள்ளும்படி எழுதியிருந்தது. அதை மரகதவல்லி பிரித்துப் படித்துக்கொண்டிருந்த போது செல்வராஜனும் அங்கு வந்து விட்டான். மரகதவல்லி அவனிடமே அந்தக் கடிதத்தைக் கொடுத்து என்ன நடந்தது என்று கேட்டுவிட்டு, அவனை இனியும் மணந்து கொள்ள முடியாது எனத் திட்டவட்டமாகக் கூறி விட்டாள். செல்வராஜன், அக்கடிதம் பற்றித் தன் பெற்றோர்களிடம் கூறக்கூடாது என மரகதவல்லியிடம் முருகன்மீது சத்தியம் வாங்கிக்கொண்டு கடிதத்தையும் எடுத்துக் கொண்டு போய்விடுகிறான். விரைவில் தன் மகனைப் பணத்துடன் அனுப்பி வைப்பதாக அம்பலவாணர் பெயர் போட்டு ராபர்ட்சனுக்கு ஒரு தந்தி அனுப்பி விடுகிறான். அதன்பின் தன் அத்தை, மாமாவிடம் கெஞ்சிக் கூத்தாடி விரைவில் மரகதவல்லியைத் தனக்குத் திருமணம் செய்து வைத்து விடுமாறு வற்புறுத்துகிறான். அவர்களும் அதை ஒப்புக்கொண்டு, முகூர்த்த நாளும் குறிப்பிட்டுத் திருமண ஏற்பாடுகளைச் செய்து, அழைப்பிதழும் அச்சடித்து விட்டனர். செல்வராஜனிடம் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காக, செல்வராஜனின் மான்செஸ்டர் காதல் லீலைகளைப் பற்றி மரகதவல்லி தன் தந்தையிடம் சொல்லவில்லை. எனினும் செல்வராஜனைத் திருமணம் செய்து கொள்ளத் துளியும் விருப்பமில்லாத மரகதவல்லி திருமணம் நடைபெற விருப்பதற்கு சில நாட்களுக்கு முன்பாகவே வீட்டைவிட்டுக் கிளம்பிப்போய் தன் குடும்ப டாக்டர் பரமசிவம் என்பார் வீட்டில் தங்குகிறாள். அங்கிருந்த போது செல்வராஜனைப் பற்றிய தகவல்களை எல்லாம் டாக்டரிடம் சொல்லி விடுகிறாள். டாக்டர் பரமசிவம் அம்பலவாணரிடம் அவற்றை எல்லாம் வெளிப்படுத்தி விடுகிறார். அதனால் அம்பலவாணர் நடக்கவிருந்த செல்வராஜன் திருமணத்தை நிறுத்திவிட்டு, மரகதவல்லியின் விருப்பப்படி சிவகுமாரனுக்கே திருமணம் செய்து கொடுத்து விடுகிறார். செல்வராஜன் லூசியையே திருமணம் செய்து கொள்ள வேண்டுமென மரகதவல்லி வற்புறுத்தியதன் பேரில் அவனை இங்கிலாந்துக்கு அனுப்பி வைத்து விடுகிறார்.

இக்கதையில் டாக்டர் பரமசிவத்தைப் பற்றிக் கூறும் போதுதான் கவிஞர் தமது காந்தியக் கருத்துகளை வெளியிடுகிறார். அவரைப் பற்றி விவரிக்கும் போது அவர் பின் வருமாறு கூறுகிறார்.

"டாக்டர் பரமசிவம் மிகவும் உண்மையான காந்தி பக்தர். மகாத்மா காந்தி சத்தியாக்கிரகம் நடத்திய காலத்தில் சிறை சென்றவர். தன்னுடைய தொழிலில் ஏழைமக்களுக்கு மிகவும் உபகாரி. காந்திய சாந்தச் சத்தியச் சன்மார்க்கமே மனித வர்க்கத்தில் காணப்படுகிற பலவித சச்சரவுகளையும் தீர்க்கக் கூடிய நன்மருந்து என்ற நம்பிக்கையுடன் நடந்து கொள்பவர். எந்த நேரத்தில் எவர் வந்து எங்கே கூப்பிட்டாலும் முகம் கோணாமல் ஓடி உதவக்கூடிய உத்தமர்.

''ஓய்வு ஒழிச்சல் இல்லாத அவருடைய வைத்தியத் தொழிலோடு காந்திய நன்னெறியைக் கிராம மக்களிடையே பரப்பிக் கிராம மக்களின் சுகாதாரத்தையும், கல்வியறிவையும் சமூகச் சீர்திருத்தத்தையும் பெருக்கவென்றே காந்தி சேவா சங்கம் என்ற ஒரு கழகத்தை உண்டாக்கி அதற்கு அவரே தலைவராக இருந்து நடத்தி வருகிறார். அச்சங்கத்தில், படிப்பாலோ, செல்வத்தாலோ, செல்வாக்காலோ சிறப்புடைய பலபேர் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். அவர்களிற் பெரும்பாலோர் ஊதியம் கருதாதத் தொண்டர்களாகக் கிராமங்களுக்குச் சென்று சேவை செய்கிறார்கள். அச்சங்கத்தின் காரியாலயம் டாக்டர் பங்களாவின் ஒரு பகுதியிலேயே உள்ளது. அந்தக் காரியாலயத்துள் ஒரு நல்ல புத்தக நிலையம் உண்டு. அதில் பெரும்பாலும் காந்திய இலக்கியங்களும், சுகாதார நூல்களும் முதலுதவிக்கான புத்தகங்களும், திருக்குறள், பகவத் கீதை போன்ற அற நூல்களும், இராமாயணம், பாரதம் போன்ற சில காவியங்களுமே உள்ளன. காதல் கதைகளோ துப்பறியும் நாவல்களோ அங்குக் காணமுடியாது"[1]

மேற்கண்ட வரிகளில் ஒரு காந்தியவாதியான டாக்டர் எவ்வாறு சேவை மனப்பான்மையுடன், சுயநலமின்றி, ஏழை எளியவர் பணக்காரர் என்ற பாகுபாடு பார்க்காமல், பணிபுரிய வேண்டுமென்பதையும், கிராம மக்களுக்குச் சுகாதாரம், பொதுக்கல்வி இவற்றைப் பரப்பி அவர்களது மேம்பாட்டுக்காக உழைக்க வேண்டுமென்பதையும் கவிஞர் விளக்குகிறார். டாக்டர்களுக்கேயன்றி ஏனைய தொழில் செய்பவர்களுக்கும் இது பொருந்தும். காந்தி பக்தர்கள் கிராம சேவாசங்கம் ஏற்படுத்திக் கிராம மக்களுக்குச் சேவை செய்வதன் அவசியத்தையும் கிராமந்தோறும் நூல்நிலையம் ஒன்று இருக்க வேண்டியதன் இன்றியமையாமையையும், அதில் எப்படிப்பட்ட நூல்களிருக்க வேண்டுமென்பதையும் கவிஞர் எடுத்துக் கூறுகிறார். காந்திஜியின் சீடர்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பது இங்கு வற்புறுத்தப்படுகிறது.

---

1. நாமக்கல் கவிஞர், மரகதவல்லி, பக்.372-373, கவிஞர் பதிப்பகம், கோவை வெளியீடு, 1962.

# தாமரைக் கண்ணி அல்லது காணாமற் போன கலியாணப் பெண்

'தாமரைக் கண்ணி' என்ற புதினம் கவிஞர் எழுதிய சமுதாய நாவல்களில் ஒன்று. இரண்டாம் பதிப்பாக இது வெளியிடப்பட்ட போது இதன் தலைப்பு "காணாமற் போன கலியாணப் பெண்"[1] என மாற்றப்பட்டது. இதில் ஒரு ஆண் மகன், தன் முதல் மனைவி உயிரோடிருக்கும் போதே இரண்டாந்தாரமாக மற்றொரு பெண்ணை மணந்து கொள்வதால் ஏற்படும் தீமைகள் நன்கு சித்திரிக்கப் பட்டுள்ளன. காந்தியக் கொள்கைகள் ஒரு சிலவே மறைமுகமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

கவிஞர் ஆழ்ந்த தெய்வ நம்பிக்கை உடையவர். பிராமண துவேஷத்தைக் கண்டித்தவர். அதை அவர் கதையின் முதல் இயலிலேயே வெளிப்படுத்துகிறார். காந்திஜியும் வர்ணாஸ்ரம தர்மத்திலும், சநாதன தர்மம் என சொல்லப்படும் வைதீக சடங்குகளிலும் நம்பிக்கையுள்ளவர். அரசியலில் புரட்சிகரமான முற்போக்குக் கொள்கையுடைய காந்திஜி சமுதாயத்தைப் பொறுத்த வரையில் அவர் ஒரு பிற்போக்காளரே என்று கூறப்படுவதுண்டு. ஓரளவு அது உண்மையேயாகும்.

கதையின் முதல் இயலில் தாமரைக் கண்ணியின் திருமண வைபவம் விவரிக்கப்படுகிறது. தாமரைக் கண்ணிக்கும், செல்வக் குடும்பத்தில் பிறந்த ஒரு நவநாகரிக இளைஞனுக்கும் திருமணம் நடை பெற உள்ளது. திருமண மேடைக்கு வருமுன்பே அவ்விளைஞன், தன்னைப் பகுத்தறிவாளன் எனக் கூறிக்கொண்டு வைதீகச் சடங்குகளை எல்லாம் ஏற்றுக் கொள்ள மறுக்கிறான். அவையெல்லாம் மூடக் கொள்கைகள் எனக் கூறி அவற்றை எள்ளி நகையாடுகிறான். பெண்கள் தனக்கு நலுங்கு இட வந்தபோது அதைத் தடுத்து நிறுத்தி விடுகிறான். பிராமணனைக் கொண்டு செய்யும் திருமணச் சடங்குகள் யாவும் தனது பகுத்தறிவுக்கு ஒவ்வாதன எனக் கூறித் திருமணம் நடத்தி வைக்க வந்த பிராமணனை வாய்க்கு வந்தபடி எல்லாம் திட்டி வெளியேற்றி விடுகிறான். தாலி கட்டாத தமிழ்த்

---

1. நாமக்கல் கவிஞர், "காணமற் போன கலியாணப் பெண்", பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-600 018, 1991.

திருமணம் செய்ய ஒரு தமிழனை அழைத்து வரும்படி கட்டளை இடுகிறான். இதை எல்லாம் கேட்டு உள்ளம் பொறாத தாமரைக் கண்ணியின் தந்தையார், சத்தப்படாமல் பக்கத்து வீட்டுக்குச் சென்று, தனது நெருங்கிய உறவினர் மகன் முருகேசன் என்ற வாலிபனுக்கும் தாமரைக் கண்ணிக்கும் வைதீக முறைப்படி பிராமணனை வைத்துத் திருமணத்தை நடத்தி விடுகிறார். பின்னர் தமது வீட்டிற்குத் திரும்பி வந்து, தனது மகளுக்குத் திருமணம் நடந்து விட்டதாக அறிவித்துவிட்டுப் பகுத்தறிவாளரான மாப்பிள்ளையையும் அவனது வீட்டாரையும் வெளியேறும்படி ஆணை இடுகிறார். பெண்ணின் தந்தையை வாயில் வந்தபடி திட்டிக் கொண்டே மாப்பிள்ளையும் அவனது உறவினரும் வெளியேறி விடுகின்றனர்[2] இக்காட்சி தமிழ்நாட்டில் நடைபெறுகிற சுயமரியாதைத் திருமணங்களைக் கண்டிப்பது போல் அமைந்துள்ளது. பிராமண வெறுப்பை விரும்பாதவர் கவிஞர். அதையே இந்நிகழ்ச்சியின் மூலம் அவர் வெளிப்படுத்தியுள்ளார். சமுதாயத்திலுள்ள ஒரு பிரிவினரை வெறுத்து ஒதுக்குவது நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு ஊறு ஏற்படுத்துவதாகும் என்பது அவர் கருத்து. அதுவே காந்திஜியின் கருத்துமாகும். இருவரும் சமுதாயத்தில் உள்ள சிலபிரிவினரைத் தீண்டத் தகாதவர் என்று வெறுத்து ஒதுக்குவதையும் வன்மையாகக் கண்டித்துள்ளனர். இந்தியாவில் பிறந்த யாவரும் இந்தியர்கள். ஒரே பாரத அன்னையின் புதல்வர்கள். எனவே எல்லோரும் சமமானவர்கள் என்பதே காந்திஜி, கவிஞர் ஆகிய இருவரது கருத்தாகுமென்பது நன்கு புலப்படுகிறது.

இந்துக்கள், முஸ்லீம்களை வேற்று நாட்டவர்கள் போல் பாவித்து வெறுத்து ஒதுக்கும் மனோபாவத்தையும், காந்திஜி கண்டித்தார். இந்து முஸ்லீம் ஒற்றுமைக்காகவே தம் உயிரைத் தியாகம் செய்த மகான் அவர். கவிஞரும் அதே கொள்கையுடையவர்தான். தனது கதைகளில் யாராவதொரு முஸ்லீம் கனவானையோ, பெண்மணியையோ அறிமுகப்படுத்தாமல் விடமாட்டார். மலைக்கள்ளனில் வரும் ஒரு முஸ்லீம் வள்ளலைப் பற்றி நாம் ஏற்கெனவே அறிந்த தொன்றாகும்.

இக்கதையிலும் அப்படிப்பட்ட நிகழ்ச்சியொன்று வருகிறது. முருகேசனுக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டுத் தாமரைக்கண்ணிக்கு, ஜானகி என்று ஒரு மகள் பிறந்தபின், தாமரைக் கண்ணி நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகிவிடுகிறாள். தன் குடும்பத்துக்கு ஒரு ஆண் வாரிசு வேண்டுமென விரும்பிய

---

2. மேலது நூல், பக்.16-24.

முருகேசனின் தாயார், அவனை வற்புறுத்தித் தனது தூரத்து உறவினர் ஒருவரின் மகள் சுந்தரிபாய் என்பவளை இரண்டாந் தாரமாக மணமுடித்து வைக்கிறாள். சுந்தரிபாய் உண்மையிலேயே சுந்தரமானவள். முருகேசன் அவளது அழகில் அப்படியே மயங்கிப் போய் அவள் சொன்னபடி எல்லாம் ஆடுகிறான். ஆனால் சுந்தரி ஒரு கட்டுக்கடங்காத ஊதாரிப் பெண். தன் கணவரின் சம்மதம் பெற்றுத் தன் மாமியார் அம்மணி அம்மாளிடம் இருந்து பணத்தை வாங்கி ஆடம்பரமான வாழ்க்கை வாழ்ந்தாள். மற்றும் அவள் அகங்காரம் பிடித்தவள். எனவே தாமரைக் கண்ணியைக் கவனித்துக் கொள்ள அம்மணியம்மாளின் சகோதரர் சுந்தரமூர்த்தியும் அவரது மனைவி சந்திராவும், மகன் நெல்லையப்பனும் முருகேசன் வீட்டிலேயே தங்கி இருந்தனர். சுந்தரமூர்த்தி முருகேசனின் தோட்டம் துரவு பற்றிய அலுவல்களையும், கணக்குகளையும் பார்த்துக் கொண்டார். சந்திரா வீட்டு நிர்வாகத்தை முற்றிலும் கவனித்துக் கொண்டாள். சுந்தரி ஒரு வேலையும் செய்யாமல், சினிமா, நாடகம், நடனம் போன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு பணத்தைத் தண்ணீர் போல் செலவு செய்தாள். அதோடு சுந்தரமூர்த்தியைப் பற்றி அவதூறாகப் பேசியும், சந்திராவையும், நெல்லையப்பனையும் ஏளனம் செய்தும் அவர்களுக்கு வெறுப்பூட்டினாள். அதனால் சுந்தரமூர்த்தி தன் தாயார் அம்மணியம்மாளை அழைத்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறித் திருச்சிக்குப் போய் வேறு வேலையில் சேர்ந்து வசிக்கலானார்.

திறமையோடு வீட்டையும் காட்டையும் நிர்வகித்து வந்தவர்கள் வெளியேறிவிட்டதால் முருகேசனின் வருமானம் குறைந்தது. ஆனால் அவனது மனைவியோ மேலும் மேலும் ஆடம்பரச் செலவுகளைச் செய்து வந்ததால், அதை ஈடுகட்டக் கடன் வாங்கத் தொடங்கினான். கடன் சுமை ஏறிக் கொண்டே சென்றதைத் தடுக்கச் சுந்தரிபாய் ஜானகியை முத்துவீரப்பன் என்ற ஒரு முரட்டு வாலிபனுக்கு மணமுடிக்க ஒப்புக் கொண்டாள். விடுதியில் சேர்ந்து பள்ளிப் படிப்பை மேற்கொண்டிருந்த ஜானகியைக் கலந்தாலோசிக்காமலேயே அவளது திருமணத்தை அவள் நிச்சயித்துவிட்டாள். ஏனெனில் முத்துவீரப்பன் முருகேசனின் கடன்களை எல்லாம் அடைத்து விடுவதாகவும், கையில் 50,000/- ரூபாய் ரொக்கமாகத் தருவதாகவும் வாக்குக் கொடுத்திருந்தான். ஆனால் அவன் ஒரு காமந்தகன். ஆசை காட்டிப் பல ஏழைப் பெண்களைக் கெடுத்துவிட்டு, அவர்களது பெற்றோருக்குப் பணத்தைக் கொடுத்து நிலைமையைச் சமாளிப்பவன். ஜானகியின் பள்ளித் தோழியைக் கெடுக்க முயன்று அவளிடம்

அவமானப்பட்டதை ஜானகியே அறிவாள். எனவே முத்துவீரப்பனை மணக்கமுடியாதென ஜானகி எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஒன்றும் பயனில்லை. கல்யாணம் நிச்சயிக்கப்பட்டுத் திருமணத் தேதியும் குறிக்கப்பட்டுவிட்டது. அதன் பின்னர் ஜானகி தன் வீட்டுக்கு எதிர் வீட்டிலிருந்த பாத்திமா என்ற தனது பள்ளித் தோழியிடம் சென்று தனது நிலையைக் கூறி எப்படியாவது தன்னை இக்கட்டினின்றும் காப்பாற்றும்படி கேட்டுக் கொண்டாள். அதற்கு பாத்திமா ஒரு தந்திரம் சொன்னாள். அதன்படி திருமணத்தை ஒப்புக் கொள்வதுபோல் சித்தியிடம் வெளிப்படையாகக் கூறிவிடவேண்டும். அப்போது சித்தியினால் நியமிக்கப்பட்ட காவல் பெண்டுகள் போய் விடுவார்கள். நிச்சயிக்கப்பட்ட திருமண நாளுக்கு முந்திய இரவில் பாத்திமா தனது தோழியைப் பார்க்க வருவது போல் வரவேண்டும். வரும்போது பர்தா உடை ஒன்றை மறைத்துக் கொணர்ந்து ஜானகியிடம் கொடுத்து விட்டுப் போய் விட வேண்டும். இரவில் எல்லோரும் திருமண ஏற்பாடுகளில் மும்முரமாக ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது ஜானகி தனது தோழி கொடுத்த பர்தா உடையைப் போட்டுக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறி விடவேண்டும் என்பதே அத்தந்திரமாகும். அதன்படியே ஜானகி முஸ்லீம் உடையில் தப்பி விட்டாள். கண்கள் மட்டுமே தெரியக் கூடிய பர்தா உடையில் அவளை யாரும் கண்டு பிடிக்க முடியவில்லை. அதிகாலையில் மணப்பெண்ணைச் சிங்காரிக்க ஜானகி அறைக்குப் பெண்கள் சென்றபோது தான் அங்கு அவள் இல்லாததைக் கண்டு யாவரும் திடுக்கிட்டனர். சுந்தரிக்கும் இது தெரிவிக்கப்பட்டது. விரைவில் கலியாணப் பெண் காணாமற் போனாள் என்ற செய்தி ஊரெங்கும் பரவியது. திருமணம் நின்று விட்டது. இதைக் கேட்ட முத்து வீரப்பனுக்கு வந்த கோபத்துக்கு எல்லையில்லை. தான் ஜானகிக்கென்று கொடுத்த நகைகள், பணம் யாவற்றையும் திருப்பிக் கொடுக்குமாறு சுந்தரியையும் முருகேசனையும் அவன் வற்புறுத்தி அவற்றைப் பெற்றுக் கொண்டான். ஜானகி வீட்டைவிட்டு வெளியே வந்து ஒரு டாக்ஸியில் ஏறி எழும்பூர் ரயில் நிலையம் சென்று அங்கிருந்து ரயில் மூலம் திருச்சி சென்று, அங்கு அகஸ்மாத்தாய் ரயில் நிலையம் வந்த மாமன் சுந்தர மூர்த்தியைச் சந்தித்து அவரது வீட்டுக்குப் போய்த் தங்கிக் கொண்டாள். முடிவில் தனது மாமன் மகன் நெல்லையப்பனையே திருமணம் செய்து கொள்ள ஒப்புக் கொள்கிறாள். சுந்தரிபாயும் மனம் திருந்தி தனது மாமியார், தன் கணவரின் மைத்துனர் யாவரையும் அழைத்து, மன்னிப்பு கேட்டுத் திருமணத்தை நடத்த ஒப்புக் கொள்கிறாள். அவளது கடனை எல்லாம் சுந்தரமூர்த்தி அடைத்து விடுகிறார். ஜானகியின் திருமணம்

கோலாகலமாக நடைபெறுகிறது. பிரிந்தவர் யாவரும் கூடிக் குலவ ஆரம்பிக்கின்றனர்.

இக்கதையில் ஜானகி வீட்டிலிருந்து தப்பிய நிகழ்ச்சி ஒரு திருப்புமுனையாக அமைகிறது. அதற்குக் காரணம் ஒரு முஸ்லீம் பெண்ணின் தந்திரமும் உதவியுமாகும். கதையின் இடையில் சுபான் என்ற முஸ்லீம் கனவானையும் கவிஞர் அறிமுகப்படுத்துகிறார். அவர் சுந்தரிபாயின் குடும்ப நண்பர். அவளது திருமணத்துக்கு உதவியவர்.

இவ்வாறு இந்து முஸ்லீம் ஒற்றுமையைக் கவிஞர் வற்புறுத்துகிறார். இயல்பாகவே அவ்வொற்றுமை தமிழ்நாட்டில் நிலவியது என்பதைத் தமது புதினங்கள் மூலம் எடுத்துக் காட்டுகிறார். உண்மையிலேயே கவிஞர் வீட்டுக்கெதிரில் ஒரு முஸ்லிம் கனவான் வீடு இருந்தது. இரு வீட்டாரும் உறவினர்கள் போல் பழகி வந்தனர். விழாக்காலங்களில் இருவீட்டாரும் ஒன்றாக அமர்ந்து உணவு உண்பது வழக்கம். கவிஞர் கல்கத்தா காங்கிரஸ் போவதற்கு உதவி செய்தவர் ஹனீப் என்ற முஸ்லீம் கனவானாவார். சுபான் என்ற முஸ்லீம் இளைஞர் கவிஞருக்கு நெடுநாள் அணுக்கச் செயலாளராக (P.A.) இருந்தார்.

# தமிழ் மொழியும் தமிழரசும்

இச்சிறு நூலில் தமிழ்மொழியின் பிறப்பு, வளர்ச்சி, தமிழுக்கும் வடமொழிக்குமுள்ள தொடர்பு, தமிழ் இலக்கியம், தமிழ்ப் பண்பு இவற்றின் தனிச் சிறப்புப் போன்றவற்றை நாமக்கல் கவிஞர் சிறப்பாக எடுத்தியம்பியுள்ளார். அதே சமயம், இந்திய ஒருமைப் பாட்டைக் குலைக்கக் கூடிய மொழி வெறி, இன வெறி ஆகியவற்றையும் கண்டித்து எழுதியுள்ளார். இந்திய ஒருமைப்பாடு (Integration) மொழி வெறி, இன வெறி போன்ற பிரிவினை மனப்பான்மைகள் மீது வெறுப்பு, இவை காந்திஜியாலும் வற்புறுத்தப்பட்ட கொள்கைகளேயாகும்.

தமிழ்மொழியின் பிறப்பு என்ற கட்டுரையில், அது பிறந்த காலம் வரையறுக்க இயலாதென்பதையும், ஆனால் கம்பனும் பாரதியும் அகத்தியன் என்ற குறு முனிவர்தான் தமிழுக்கு முதல் இலக்கணம் வகுத்தார் என்பதையும் ஒப்புக் கொண்டுள்ளார். அகத்தியன் காலமும் வரையறுக்கப்படவில்லை. அதன்பின் தொல்காப்பியர் என்ற புலவர் தொல்காப்பியம் என்ற இலக்கணத்தைச் செய்தார். அது இன்றும் வழக்காற்றில் உள்ளது. கா.சுப்பிரமணியபிள்ளை என்ற அறிஞரின் கருத்துப்படி அவ்விலக்கணம் இன்றைக்கு 4500 ஆண்டுகளுக்கும் சங்க காலத்துக்கும் முற்பட்டது. அது சங்க காலத்துக்குப் பிற்பட்டது என்று கூறுவாரும் உண்டு. காலக்கணக்கு எப்படியாயினும் தொல்காப்பியம் நமக்குக் கிடைத்துள்ள நூல்களிலெல்லாம் பழமையானது என்பதில் ஐயமில்லை என்று கூறும் கவிஞர், அகத்தியரும், தொல்காப்பியரும் அந்தணர்கள் என்று கூறி அவர்களைச் சிலர் பழிப்பதைக் கண்டிக்கிறார்.

"இந்த அகத்தியனும், தொல்காப்பியனும் ஆரியர்கள் என்று அனுமானித்துக் கொண்டு, இப்போது அரசியல் கட்சிச் சண்டைகளால் அதிகப்பட்டிருக்கிற ஆரிய திராவிட நிந்தனைகளை அவர்கள் தலையிலும் போட்டு அவ்விருவரும் தமிழைக் கெடுத்து விட்டார்கள் என்ற அபாண்டத்தால் தமிழ்மொழியின் பெருமைக்குச் செய்யப்பட்டு வரும் அநியாயத்தையும் அகற்ற வேண்டும். வடமொழியிலுள்ள இலக்கண நூல்களையும்,

தொல்காப்பியத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் வடமொழி இலக்கணத்தின் வாடை தொல்காப்பியத்தில் ஒரு சிறிதும் இல்லை எனக் கூறலாம். அப்படியிருக்க வடமொழியைத் தமிழில் புகுத்தி அகத்தியரும், தொல்காப்பியரும் தமிழைக் கெடுத்துவிட்டார்கள் என்பது அறிவின்மை"[1] என்று எழுதுகிறார். இதன் மூலம் மொழிவெறி, இனவெறி ஆகியவற்றைக் கவிஞர் கண்டிக்கிறார்.

## 1. தனித்தமிழ்

இக்கட்டுரையில், தமிழர்கள் வியாபாரத்துக்காக உலகின் பல பாகங்களுக்குச் சென்றுள்ளதாக அயல்நாட்டுப் பயணிகளின் குறிப்புகளால் (பிளினி, தாலமி) அறிகிறோம். கிள்ளிவளவன் என்ற சோழமன்னன், பீலிவளை என்ற சிங்களப் பெண்ணையும், சித்தார்த்தகை என்ற வடநாட்டுப் பெண்ணையும் திருமணம் செய்து கொண்டதாக அறிகிறோம். "இப்படி அந்நிய மொழிப் பெண்களை மணந்து கொண்டு, இடைவிடாது கடலோடி தூரதேசங்களோடு நெடுங்காலமாக வியாபாரம் செய்து கொண்டிருந்தவர்களின் நாட்டில் வழங்கிய மொழி எப்படித் தனித் தமிழாக இருந்திருக்க முடியும்"[2] என்று கேட்கிறார் கவிஞர். ஆறுமுக நாவலர், சபாபதி நாவலர் முதலியோர் தனித்தமிழ் என்ற பெயரில் சாதாரண மக்களுக்குப் புரியாத கடுந்தமிழ் மொழியில் பேசிக் கடைக்காரர்களிடம் எப்படி அவதிப்பட்டனர் என்பதை எடுத்துக் காட்டித் தனித்தமிழ் என்ற போர்வையில் சாதாரண மக்களுக்குப் புரியாமல் இலக்கணமாக எழுதுவதும் பேசுவதும் தவறு என்றும் பிறமொழிப் பதங்களைக் கலந்தாகிலும் எல்லோருக்கும் புரியும்படி எழுதுவது தான் நல்லதென்றும் கவிஞர் கூறுகிறார். "எல்லோருக்கும் எளிதில் புரியக்கூடிய எந்தப் பதத்தையும் அதைப் பிறமொழிப் பதம் என்பதற்காக விலக்க முயல்வது விரும்பத்தக்கதல்ல"[3] என அவர் கூறுகிறார். சான்றாக முத்தமிழ் என்பதை இயல், இசை, நாடகம் என்கிறோம். இதில் நாடகம் என்பது வடமொழி. அதற்கேற்ற தமிழ்ச் சொல் 'கூத்து' என்பதாகும். ஆனால் பாமர மக்கள் கூத்து என்றால் திரை இன்றித் தெருவில் ஆடும் தெருக்கூத்தைத்தான் அது குறிக்கும் என்பார்கள். அதே போல் 'கலை' என்பது வடசொல். அதற்கேற்ற தமிழ்ச் சொல் என்னவென்பதே வழக்கில் காணப்படவில்லை.[4]

## 2. திசைச் சொல் இலக்கணம்

இந்தக் கட்டுரையில், எப்படி நம் முன்னோர்கள் பிறமொழிச் சொற்களைத் தமிழில் இணைத்துக் கொள்வதற்காகத் திசைச் சொல்

1. நாமக்கல் கவிஞர், "தமிழ் மொழியும் தமிழரசும்", பக்.18, இன்ப நிலைய வெளியீடு, மயிலாப்பூர், சென்னை, 1956.
2. மேலது நூல், ப.22. 3. மேலது நூல், ப.29. 4. மேலது நூல், ப.30.

இலக்கணம் என்ற தனி இலக்கணத்தையே வகுத்துள்ளார்கள் என்பதைச் சுட்டிக் காட்டி, இவ்வாறு பிற மொழிச் சொற்களையும் கருத்துகளையும் சேர்த்துக் கொண்டால் தான் தமிழ் மொழி செழித்து வளர்ந்து இறவாமல் இருக்குமென்பதை எண்ணியே அவ்வாறு செய்துள்ளனர் என்று கூறுகிறார்[5] அதன் விளைவாகத் தமிழில் பிற்காலத்தில் சந்தங்கள் செறிந்த 96 பிரபந்தங்கள் ஏற்பட்டன என்பதையும் சுட்டிக் காட்டுகிறார்.[6]

## 4. தமிழும் ஆரியமும்

இக்கட்டுரையில் தமிழில் வடசொற்கள் கலக்கக் கூடாது என்று சாதிக்கும் தமிழ்ப் புலவர்களைக் கண்டிக்கிறார். மிகப் பண்டைய காலத்திலிருந்தே வடமொழிச் சொற்கள் தமிழில் இடம் பெற்று விட்டதை அவர் பல சான்றுகளால் நிறுவுகிறார்.

புறநானூறு என்ற சங்கநூற் பாடல்களை எழுதிய பல புலவர்களின் பெயர்களிலிருந்து, சங்ககாலத்துக்கு முன்பே வடமொழிச் சொற்கள் தமிழில் புகுந்து விட்டன எனத் தெரிகிறது.[7] சங்க காலப் புலவர்கள் பெயர்கள் பிரமனார், பெருந்தேவனார், பெருஞ்சித்திரனார், பெரும்பதுமனார், மார்க்கண்டேயனார், வான்மீகியார் என்றும், சங்ககால மன்னர்கள் பெயர்கள் தருமபுத்திரன், நல்லுருத்திரன், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்றெல்லாம் இருப்பதை எடுத்துக் காட்டுகிறார்.

திருக்குறள் கடவுள் வணக்கத்தில் வரும் முதற்குறளிலேயே ஆதிபகவன் என்ற வடமொழிச் சொற்கள் வருகின்றன. "இந்திரனே சாலுங்கரி", "அடியளந்தான்", "தாமரைக் கண்ணானுலகு" போன்ற சொற்களிலிருந்தே வடமொழி நூற் கருத்துகள் தமிழுள் புகுந்து விட்டன என்பதை எடுத்துக்காட்டுகிறது. மற்றும் சிலப்பதிகாரத்தில் குரவைக் கூத்து என்ற பாடலில் திருமால், கண்ணன், கிருஷ்ணன் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன என்பதையும், நால்வகை நிலங்களின் தெய்வங்களில், மாயோன் (விஷ்ணு), சேயோன் (சிவன்), வேந்தன் (இந்திரன்), வருணன் போன்ற வடநாட்டுத் தெய்வங்களின் பெயர்கள் காணப்படுவதினாலும், சங்க காலத்துக்கு முன்பே வடமொழிக் கருத்துகள் தமிழ் நாட்டில் பரவிவிட்டன என்பதைக் காட்டுகின்றன எனக் கூறுகிறார்.[8] இவ்வாறு மொழிவெறியைச் சாடியபின் கவிஞர் இனவெறியைக் கண்டிக்கிறார்.

---

5. மேலது நூல், ப.31.
6. மேலது நூல், ப.32.
7. மேலது நூல், ப.34.
8. மேலது நூல், ப.39.

திராவிடர்களை அவர்கள் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விட்டார்கள் என்றும் கூறுபவர்களின் வாதம் மெய்யல்ல, அது வெறும் மயக்கம் என்பதை எடுத்துக் காட்டி, பிராமணர்களும் தமிழ் நாட்டிலேயே பிறந்து வளர்ந்த தமிழர்களே என்றும், வாதிக்கிறார். தமிழ் நாட்டில் ஆரியர்கள் அல்லது பார்ப்பனர் எப்போது தமிழ் நாட்டிற்கு வந்தனர்? என்று கேட்கிறார்.[9]

சிலப்பதிகாரத்தில் கண்ணகிக்கு உற்ற தோழியாக இருந்த தேவந்தி என்னும் பார்ப்பனப் பெண்ணும் அவளுடைய கணவன் சாத்தனும் வடக்கேயிருந்து வந்த ஆரியர்களா? உக்கிர பாண்டியன் ஆட்சியில் கடைசிச் சங்கத்தில் பல பார்ப்பனப் புலவர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களெல்லோரும் ஆரியர்களா? எங்கிருந்தோ பாண்டிய நாட்டுக்கு வந்து பண்டிதர்களாகிச் சங்கப் புலவர்கள் ஆகிவிட்டார்களா?"[10] என்று கேட்கிறார் கவிஞர். தமிழ் இலக்கியங்களுள் மிகப் பழமையான சங்க நூல்கள் காலம் முதல் பார்ப்பனர்கள் இங்கு இருந்திருக்கிறார்கள். அவர்கள் வடக்கே இருந்து வந்து புகுந்து கொண்டவர்கள் என்பது பொருந்தாத வாதமாகும் என்கிறார். மற்றும் ஆரியர், திராவிடர் என்ற இரு சொற்களுமே தமிழ்ச் சொற்களல்ல. அதனால் அவற்றை ஏற்றுக் கொண்டு ஒருவரை ஒருவர் பகைத்துக் கொள்வது நியாயமல்ல என்பது அவர் கருத்து[11] அவர் கூறுவதில் பெரிதும் உண்மை இருப்பதாகத் தான் தெரிகிறது.

கால்டுவெல் (Caldwell) என்ற ஐரோப்பிய அறிஞர்தான் தென்னாட்டிலுள்ள தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளை ஆராய்ந்தபோது அவற்றுக்கிடையே இருக்கின்ற ஒற்றுமைகளைக் கண்டு வியந்து அவற்றை எல்லாம் திராவிட மொழிகள் என்று கூறினார். திராவிட மொழி ஒப்பிலக்கணத்தையும் வெளியிட்டார். ஆனால் திராவிட இனம் என்ற ஒன்று இருப்பதாக அவர் சொல்லவில்லை. தந்தை பெரியாரும் அவரைப் பின்பற்றியவர்களும் தான் திராவிட மொழிகளைப் பேசுபவர்கள் யாவரும் திராவிடர் என்றும் அவர்களுக்கென்று தனி திராவிட நாடு வேண்டுமென்றும் கூக்குரலிட்டனர். மைய அரசிலும், தமிழ் நாட்டிலும் ஆட்சி புரிந்து வந்த காங்கிரஸ் கட்சி இத்தகைய பிரிவினை வாதத்தை ஒப்புக் கொள்ளாததால் "திராவிட நாடு திராவிடருக்கே" என்ற கோஷம் அறிஞர் அண்ணாதுரையவர்களால் கைவிடப்பட்டது. அதற்குப் பதிலாகத் "தமிழ்நாடு தமிழருக்கே" என்ற கோஷம் எழுந்தது. அதுவும் நாளடைவில் அடங்கிப் போயிற்று.

9. மேலது நூல், ப.41. 10. மேலது நூல், ப.42. 11. மேலது

தற்போது திராவிடர் என்ற சொல் தமிழரை மட்டுமே குறிக்கின்ற சொல்லாக மாறி விட்டது. ஆனால் வடமொழி அறிஞர்கள் திராவிடர்களைப் பற்றித் தனியாக எதுவும் கூறவில்லை என்பதுதான் உண்மை. வடமொழி வல்லுநர்கள், தாம் வாழ்ந்த நிலப்பரப்பை ஆரியவர்த்தம் என்றும், தம்மை உயர்ந்தோர் என்ற பொருளில் ஆரியர் என்றும் கூறிக் கொண்டனர். தமிழ் நாட்டைக் குறிப்பிடும்போது அதைத் திராவிடம் என்று அழைத்தார்கள். வடமொழியில் தமிழ் என்ற சொல்லைத் த்ரமிளம் என்று தான் சொல்லமுடியும். த்ரமிளம் என்பது த்ரமிடம், திராவிடம் என்று மருவித் தமிழ்நாடு த்ரமிளநாடு அல்லது திராவிடநாடு என வழக்காற்றுக்கு வந்தது. தமிழ் நாட்டுக்கு வைத்த பெயர் பொதுவாகத் தென்னாடு முழுவதுக்கும் தரப்பட்டது. எப்படிப் பார்க்கினும், திராவிடம், திராவிடர் என்ற சொற்கள் ஐரோப்பிய, வடமொழி என்ற பிறமொழிக்காரர்களின் கற்பனையில் உதித்த சொற்கள். அவற்றை நாம் ஏற்றுக் கொண்டு வடநாட்டாரைத் தமிழர் வெறுப்பதும், தென்னாட்டாரை வட நாட்டார் பழிப்பதும் அழகல்ல. நாமெல்லோரும் இந்தியர் என்று சொல்லிக் கொள்வதே சாலவும் சிறந்தது என்பதே காந்திஜியின் கருத்து. அதுவே கவிஞரின் கருத்துமாகும். பார்ப்பனர்கள் நெடுங்காலமாகத் தமிழ் நாட்டில் வாழ்ந்து வந்த தமிழர்களே என்று கூறினால் அவர்கள் ஏன் தனி அக்ரகாரங்களில் குடியிருக்கிறார்கள்? ஏன் வடமொழியைக் கற்கிறார்கள்? வடநாட்டுப் பழக்க வழக்கங்களை ஏன் மேற்கொள்கிறார்கள்? தமிழர்களோடும், தமிழ்ப் பண்பாட்டு மீதும் ஏன் ஒட்டாமல் வாழ்கிறார்கள்? என்ற கேள்விகள் எழலாம். அதற்கும் பதில் சொல்கிறார் கவிஞர்.

தமிழ் நாட்டை ஆண்ட பல்லவ, சோழ, சேர, பாண்டிய, விஜயநகரப் பேரரசர்களே இதற்கெல்லாம் காரணம் என்கிறார் அவர்.[12] அது எப்படி எனின் இப்பெருவேந்தர்கள் அண்டை நாடுகளோடும், இலங்கை, மலாயா போன்ற அயல் நாடுகளோடும் போரிட்டு அதனால் கிடைத்த அளவற்ற செல்வத்தைக் கொண்டு கோயில்களைப் பிரம்மாண்டமாகக் கட்டுவதில் செலவழித்தனர். அதைக் கட்டிய விஸ்வகர்மாக்கள் எனும் ஆசாரிகள் வடமொழியில் உள்ள ஆகம சாஸ்திரங்களின்படியே கோயில்களை அமைத்தனர். கோயில்களில் நிறுவப்பட்ட தெய்வச் சிலைகளுக்கு ஆகமவிதிப்படி பூஜை செய்ய இங்கிருந்த வடமொழி அறிந்த பார்ப்பனர்கள் பலர் முன்வரவில்லை. ஏனெனில் வேதங்கள் கூறுகிறபடி யாகசாலைகள்

---

12. மேலது நூல், ப.44.

கட்டி அதில் அக்கினிஹோமம் வளர்த்து, அவ்வக்கினியில் தேவர்களுக்குப் பல பொருள்களைப் போட்டு, அவ்வக்கினி மூலம் அவர்களைத் திருப்திப் படுத்தி வேண்டிய வரங்களைப் பெறவே அவர்கள் விரும்பினர். கோயில்களில் உள்ள சிலைகளுக்குப் பூசை செய்வது வேத மார்க்கத்துக்கு விரோதமானது என அவர்கள் எண்ணினர். அவர்கள் எண்ணியது சரியே. வேதங்களில் கூறப்படும் ஹோம வழிபாட்டு முறையும் (Homa cult) தென்னாட்டுக் கோயில்களில் கடைப்பிடிக்கப்படும் பூஜா முறையும் (Puja cult) வெவ்வேறானவை. எனவே ஆகமங்களைப் படித்து, அதில் விவரிக்கப்பட்டுள்ளபடி மந்திரங்களை ஓதி அர்ச்சனை செய்து பூஜை செய்ய நிறைய வடமொழி அறிந்த பூசாரிகள் தேவைப்பட்டனர். அத் தேவையை நிறைவேற்றத் தமிழ் மன்னர்கள் "வடமொழியை நன்கு படித்து அதிலுள்ள அறிவுகளைத் தமிழ் மக்களிடையே பரவச் செய்வதையே வாழ்க்கையாகக் கொள்ளும்படி தமிழ்நாட்டு மக்களுள் ஒரு சிறு பகுதியை அதற்கென்றே ஏற்படுத்தினார்கள்"[13]. அவ்வாறு ஒதுக்கப்பட்ட சிலர் வடமொழியையே நாள்தோறும் படித்து, அதில் கூறப்பட்டுள்ள பழக்க வழக்கங்களை மேற்கொண்டு வடநாட்டு ஆரியப் பிராமணர் போலவே வாழ்ந்தனர். அவர்கள் வேதங்களையே அன்றி ஆகமங்களையும் கற்று அதன்படி கோயில்களில் பூஜை செய்யத் தகுதி பெற்றதால் அவர்களையே கோயில் பூசாரிகளாகச் சேர, சோழ, பாண்டிய, விஜயநகர மன்னர்கள் நியமித்தனர். ஹோமா மார்க்கத்தைக் கைவிட்டுப் பூஜா மார்க்கத்தைக் கடைப்பிடிக்க முன்வந்த இச்சிறு பிரிவினருக்குத் தாராளமாகத் தானங்களையும் மானியங்களையும் (வரியிலி நிலங்கள்) வழங்கினர்.

தமிழ்ச் சமுதாயத்திலுள்ள மற்றவர்களை விட்டு விலக்காக வாழ்ந்து வந்ததனால் இவர்கள் தங்களுக்கென்று ஒரு தனியான பழக்கவழக்க சம்பிரதாயத்தை உண்டாக்கிக் கொள்ள நேர்ந்தது.... கொஞ்சம் கொஞ்சமாக இவர்கள் தங்களை ஒரு தனி இனமாக எண்ணிக் கொண்டு, தாங்கள் புதிதாக மேற்கொண்ட பழக்க வழக்கங்களே தங்கள் குலவழக்கமென்றும், தாங்கள் புதிதாகக் கற்றுக் கொண்ட வடமொழியே தங்களுடைய வம்ச பாஷை என்றும், அந்த வடமொழியிலுள்ள ஆரிய குலங்கோத்திரங்களையே தங்களுடைய குலங்கோத்திரங்களாகவும் பழகிக் கொண்டு, மற்ற தமிழர்களை விட்டு வேறாக விலகி விட்டார்கள். அன்றியும் (மன்னர்களின் ஆதரவு காரணமாக) தாங்கள் மற்றவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள்ஆதிக்கம் பெற்றது அவர்களுடைய தந்திரத்தாலும்

---

13. மேலது நூல் பக்.44-45.

மந்திரத்தாலும் என்றும் எண்ணிக் கொண்டார்கள். மற்ற தமிழர்களும் அதை ஒப்புக் கொண்டு மரியாதை செய்தார்கள். தமிழர்களுடைய வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் அவர்களுக்கு ஆதிக்கம் அளிக்கப்பட்டது. அந்தச் சிறு தொகுதியிலிருந்து வந்தவர்களே இங்குள்ள பார்ப்பனர்கள். . . கோயில்களில் இவர்கள் ஆதிக்கம் பெற்றது அவர்களுடைய தந்திரத்தாலும் மந்திரத்தாலும் அல்ல. அக்காலத்திலிருந்த தகுதியினால் தமிழ் மன்னர்களும், தமிழ் மக்களும் தாங்களாகவே தந்த பெருமை[14] என்று கவிஞர் நம்புகிறார். முடிவாக அவர் கூறுவதாவது "தமிழ் நாட்டிலுள்ள பார்ப்பனர்கள் ஆரியர்களல்ல. ஆன்ம விசாரணைக்காக ஞான நூல்கள் மிகுந்த வடமொழியைப் படிப்பதையே தொழிலாகக் கொள்ளும்படி தமிழ் மக்களும், தமிழ் மன்னர்களும் பிரித்து வைத்த தமிழர்களே பார்ப்பனர்கள். தமிழில் ஆன்ம விசாரணை நூல்கள் இல்லை. அதை ஒப்புக் கொண்டதில் தமிழருக்கு அவமானமும் இல்லை. எந்த ஒரு மொழியிலும் எல்லா அறிவும் இருந்து விட முடியாது. தமிழ் நாட்டில் ஆரியர்களும் இல்லை. தமிழர்கள் தங்களைத் திராவிடர்கள் என்று சொல்லிக் கொள்வதும் சரியல்ல... யாரோ சில அந்நியர்கள் தமிழ் நாட்டைத் 'திராவிடம்' என்று சொன்னதற்காகத் தமிழர்கள் தங்களைத் திராவிடர் என்று சொல்லிக் கொள்வது சரியல்ல என்று கூறித் தமிழ்நாட்டில் ஒரு சிலர் பாராட்டி வரும் ஆரிய திராவிடப் பிரச்சனைக்கு முற்றுப்புள்ளி வைக்கிறார் கவிஞர்[15] இன்றைக்கும் தமிழ்நாட்டிலுள்ள செட்டியார்கள், தங்களுக்கெனக் கோயில்களைக் கட்டிக்கொண்டு அதில் பூஜை செய்யும் அந்தணர்களுக்கு மானியம் தந்து அக்ரகாரம் கட்டிக் கொடுத்து வடமொழி படிக்க வேதபாட சாலைகளை அமைத்துக் கொடுப்பதே அக்கால மன்னர்கள் மேற்கூறியவாறு செய்திருப்பார்கள் என்பதற்கு ஒரு பெருஞ்சான்றாகு மென்கிறார்[16] அவர். எனவே இங்குள்ள பார்ப்பனர்கள் தமிழ் மன்னர்களாலயே உண்டாக்கப் பட்டவர்கள் என்பது கவிஞரது கருத்து. நாம் இன்று விஞ்ஞான அறிவுக்காக ஆங்கிலம் போன்ற பிற மொழிகளைக் கற்பது போன்று மெய்ஞ்ஞானத்தைப் பெற விரும்பிய தமிழர்கள் வடமொழி சாஸ்திரங்களைப் படிக்கவும், அதன்படி கோயில்களில் பூஜைகள் செய்யவும் தமிழர்களிலிருந்தே எடுக்கப்பட்ட ஒரு சிறு பிரிவு என்பது அவர் வாதம். வரலாற்றின்படி பார்த்தால், பல்லவ, சோழ, பாண்டிய மன்னர்கள் வடநாட்டு வேதியர்களையும் பிராமணக் குருக்களையும் இங்குக் கொணர்ந்து குடியேற்றினார்கள் என்பது தெரிகிறது. ராஜேந்திர சோழன், 1500

---

14. மேலது நூல், ப. 15. மேலது நூல் ப.48. 16. மேலது நூல் ப.44.

பிராமணக் குடும்பங்களை வடநாட்டிலிருந்து கொண்டுவந்து இங்குக் குடியேற்றினான் என அறிகிறோம். தங்களை க்ஷத்திரியர்கள் என ஒப்புக் கொண்டதால் மகிழ்ச்சியுற்ற தமிழ் வேந்தர்கள் அவர்களுக்கு வரியிலி நிலங்களை வாரி வழங்கியுள்ளனர். கோயில்களில் ஆகம முறைப்படி பூஜை செய்யக் கூடிய புரோகிதர்களின் பற்றாக்குறையால் தமிழ் மன்னர்கள் வடநாட்டிலிருந்து பிராமணர்களை இறக்குமதி செய்திருக்கலாம். அப்போதும் கூட போதிய குருக்கள் கிடைக்காததால், கோயில்களில் ஆகம முறைப்படி தீட்க்ஷை வாங்கிய பிராமணரல்லாத புரோகிதர்களையும் தமிழ் மன்னர்கள் உண்டாக்கியிருக்கலாம் என்பதையும் யூகிக்க இடமுண்டு. எனவே பிராமணர்கள் எல்லாருமே வடநாட்டிலிருந்து வந்தவர்களென்றோ, எல்லா பிராமணர்களும் தமிழரின் ஒரு பகுதி என்றோ நாம் திட்டவட்டமாகக் கூற இயலாது. இராமனுஜர் என்ற வைணவப் பெரியார், தீண்டத்தகாத குலத்தவர்களுக்குப் பூணூலும் போட்டு நாமமும் இட்டு பிராமணர்களாக்கித் 'திருக்குலத்தார்' என்று பெயரிட்டழைத்தார் என அறிகிறோம். எனவே இங்கேயிருந்த தமிழ் அந்தணர்களும், பூசாரிகளும் கோயில் குருக்களாக மாற்றப்பட்டிருக்கலாம் என்பதும் ஓரளவு உண்மைதான். வடமொழியிலுள்ள இராமாயணம், மகாபாரதம் போன்ற கதைகளையும், பகவத்கீதை, உபநிடதம் போன்ற ஞான நூல்களின் கருத்துகளையும், பிராமணர்கள் தமிழர்களிடம் காலாட்சேப முறையில் பரப்பினார்கள் என்பது உண்மை. அதே சமயம் வடமொழி நூல்களில் பேசப்படும் வர்ணாஸ்ரம தர்மத்தையும், பிராமணன் உயர்ந்தவன், சூத்திரன் தாழ்ந்தவன், சண்டாளன் தீண்டத்தகாதவன் என்பன போன்ற வேண்டத்தகாத கருத்துகளையும் அவர்கள் மக்களிடையே பரப்பி விட்டார்கள் என்பது தான் வருந்தத் தக்க உண்மைகளாகும்.

# கவிஞன் குரல்

பதினேழு கட்டுரைகளைக் கொண்ட இந்நூலில் ஒரு சில கட்டுரைகளே காந்தியத்தையும், தேசியத்தையும் தொட்டுச் செல்கின்றன. 1953 இல் வெளியிடப்பட்ட இந்நூல் அக்காலத்தில் நிலவிய அரசியல் சூழ்நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. சூழ்நிலை இப்போது மாறிவிட்டாலும், அவர் சொல்லும் கருத்துகள் இக்காலத்துக்கும் பொருந்துவனவாயிருப்பது தான் வியப்பிற்குரியது.

## 1. காங்கிரசும் காந்தி அடிகளும்

இக்கட்டுரையில் காங்கிரஸ் கட்சியின் தனிச்சிறப்பு எடுத்துரைக்கப்படுகிறது. "இந்த நாட்டில் இந்துக்களுக்கென்றும், மகம்மதியர்களுக்கென்றும், சீக்கியர்களுக்கென்றும், கிறிஸ்தவர்களுக் கென்றும், ஆங்கிலோ இந்தியர்களுக்கென்றும், பிராமண ரல்லாதார்க்கென்றும், பிராம்மணர்களுக்கென்றும் எத்தனையோ சபைகள் உழைத்து வருகின்றன. . . .ஆனால் இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவான நன்மையை நாடி நிற்கின்ற சங்கம் காங்கிரஸ் மகாசபை ஒன்று தான். மற்றக்கட்சிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பின்னம். காங்கிரஸ் முழு எண். . .எல்லாக் கட்சிகளிலும் நல்லவர்கள் இருக்கிறார்கள். ஆனால் நாட்டின் பொதுநலனைக் கோரித் தங்களுக்குள்ள எல்லாவற்றையும் அள்ளிக் கொடுத்த வள்ளல்களையும், உத்தமர்களையும் காங்கிரஸ் ஒன்றில்தான் காணலாம். ஒரு மனிதனையோ, ஒரு கூட்டத்தையோ அவர்களுடைய பெருமையை அளப்பதற்கு இந்த உலகத்தில் "தியாகம்" என்ற ஒரு தாராசுதான் உண்டு. அந்தத் தியாகம் காங்கிரசுக்கு உள்ள அளவு மற்ற கட்சிகளுக்கில்லை என்பதை எவரும் மறுக்க முடியாது"[1] இவ்வாறு காங்கிரசின் பொதுவான பல சிறப்புகளைக் கூறியபின் கவிஞர் அதன் தனிச்சிறப்பை எடுத்துக்காட்டுகிறார். அதுதான் மகாத்மா காந்தியின் கட்டளையில் காங்கிரஸ் இந்தியாவிற்கு மட்டுமல்ல, உலகம் முழுவதுக்குமே காட்டியிருக்கும் சன்மார்க்க நெறியாகும்"[2] என்கிறார். காந்தி அடிகளின் தலைமையில்

---

1. நாமக்கல் வெ.இராமலிங்கம் பிள்ளை, கவிஞன் குரல், பக்59-60, தமிழ் புத்தகப்பண்ணை, சென்னை-17, 1953.

2. மேலது நூல், ப.61.

அவருடைய கொள்கைகளைக் கடைப்பிடித்து வருவதே காங்கிரசின் சிறப்பாகும். ஆன்ம ஞானத்தை அரசியல் போராட்டத்தில் பிணைத்துக் காட்டிய பெருமை காந்திஜி ஒருவருக்கே உண்டு. சத்தியம், சாந்தம், அஹிம்சை முதலியன வெறும் வாய் வேதாந்தம் தான் என்று பலர் பேசிக் கொண்டிருந்தபோது, அதை நடைமுறையில் நடத்திக் காட்டியவர் காந்திஜி. அவர் காட்டிய சத்தியாக்கிரக சாந்த வழியைக் கடைப்பிடிப்பது ஒன்றுதான் காங்கிரசின் தனிச்சிறப்பாகுமென்கிறார் கவிஞர். அவரது ஆணைக்கிணங்கப் பலர் சத்தியாக்கிரகம் செய்து தம் உயிரையே நாட்டுக்குத் தந்திருக்கின்றனர். பெண்களும் தியாகம் செய்துள்ளனர். பஸ்லுல் ஹக் என்பாரின் மனைவியார் தாம் அணிந்திருந்த நகைகள் அனைத்தையும், தேச சேவைக்காகக் காந்திஜியிடம் கொடுத்தார். நாடெங்கிலும் பலர், காந்திஜியின் தேச சேவையில் பங்கேற்றனர். "காந்திஜியின் தலைமையில் காங்கிரஸ் சாதித்திருக்கும் பலனை எண்ணுந்தோறும் அறிவு ஆனந்தமடைகிறது; கவிதை களிக்கின்றது; கற்பனை கட்டுக்கடங்காமல் உயர்ந்து எழுகின்றது; உடல் சிலிர்க்கின்றது. உயிர் தளிர்க்கின்றது"[3] என்று உணர்ச்சி பொங்க எழுதுகிறார் கவிஞர். காந்தியடிகளின் தவத்தால் வந்ததே காங்கிரசின் சிறப்பு என்பது அவரது நம்பிக்கை. ஆனால் காங்கிரஸில் உள்ளோர் மெல்ல மெல்லக் காந்திஜியின் கொள்கைகளைக் கைவிட்டு எங்கோ விலகிச் சென்று கொண்டுள்ளனர் என்பதை அவர் வன்மையாகக் கண்டிக்கிறார்.

"மதிக்க வேண்டியவர்களை நாம் அவமதிக்கிறோம். ஜனநாயக சம்பிரதாயங்களுக்கு எதிராகத் தலைவர்களைச் சந்தியில் இழுத்து விட்டுப் பேசுகிறோம். நாட்டின் நலனைக் கருதி மறந்துவிட வேண்டிய அற்ப விஷயங்களையும் அதிகப்படுத்தி அபிப்பிராய பேதமென்று சொல்லிப் பேச்சாலும், எழுத்தாலும், பாமர மக்களைக் காங்கிரஸ் விசயங்கள் பற்றி மருளச் செய்கிறோம். ஒருவருக்கொருவர் மிகவும் விட்டுக் கொடுத்த நாம் அந்த மேலான குணத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டுக் கொண்டு வருகின்றோம். தலைவர்களுடைய தொண்டர்கள் என்று தலைவணங்கிய நமக்குள், தனித்தனியே ஒவ்வொருவரும் தலைவர்களாகித் தொண்டர்களின்றித் தவிக்கிறோம். காங்கிரசுக்குள்ளேயே பதவிகளுக்கு அனாவசியமான போட்டி போடப் புகுந்துவிட்டோம். தளகர்த்தனில்லாத சைனியத்தைப் போலத் தாறுமாறான தர்க்கங்கள் நமக்குள் தலையெடுத்துவிட்டன. சுருங்கச் சொன்னால் நம்முடைய நாட்டிற்குஇப்போது மிக அத்தியாவசிய தியாகபுத்தி நமக்குக்

3. மேலது நூல், ப.61.

குறைந்து வருகின்றதென்றே கூறலாம்''[4] என்று காங்கிரசை எச்சரிக்கிறார் கவிஞர். இவ்வெச்சரிக்கை இன்று எல்லாக் கட்சிகளுக்கும் தகும்.

## 2. காந்திய வழி

இந்தக் கட்டுரையில் போர் செய்யாமல் எந்த நாடும் சுதந்திரம் பெற்றதில்லை என்று வாதிக்கும் சமதர்மவாதிகளுக்குக் காந்திஜியின் சாந்த சத்தியாக்கிரக வரி நல்ல பதில் கொடுத்திருக்கிறது என்பதையும் அன்பு வழியால் ஒரு சமதர்ம சாம்ராஜ்யத்தை உண்டு பண்ண முடியும் என்பதையும் காந்திஜி நிரூபித்துள்ளார் என்பதையும் எடுத்துக் கூறுகிறது. "காந்தி வழியை நாம் பின்பற்றி, சோஷலிசம், கம்யூனிசம், நாஸிஸம், பாஸிஸம் என்று சொல்லப்படுகிற எதிலும் இல்லாத ஒரு சமதர்ம ஆட்சியை இந்நாட்டில் ஏற்படுத்துவோம். அந்த ஆட்சிமுறையில் ஏழை பணக்காரர், தொழிலாளி முதலாளி, படித்தவன் படிக்காதவன் என்ற வேற்றுமைகளின் திமைகளை அகற்றி, ஜாதி, மதம், நிறம் இவற்றின் இறுமாப்புகள் இல்லாமல் செய்வோம்"[5] என மார்தட்டுகிறார் கவிஞர்.

## 3. நமது லட்சியம்

இக்கட்டுரையில் ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்காவிலும் விஞ்ஞானம் வளரவில்லை என்று மேலை நாகரிகத்தைச் சாடுகிறார்.[6] 'மனிதனிடத்திலுள்ள மிருகத்தன்மையைக் குறைத்து, மனிதனுக்கு மனிதன் காட்டுகின்ற மாச்சர்யத்தை மாற்றி மனித சமூகத்தின் அமைதியான வாழ்க்கைக்கு வேண்டிய அன்பை ஐரோப்பா விருத்தி செய்யவில்லை"[7] என்பது கவிஞரின் குற்றச்சாட்டாகும். மேலும், மனித சமுதாயத்துக்கு இன்றியமையாத அரசியல் அமைப்பு, பொருளாதார அமைப்பு, சமுதாய அமைப்பு முதலிய எல்லாத் துறைகளிலும் ஐரோப்பிய முறைகள் உண்மையான கூட்டுறவைக் கொடுக்கத் தவறிவிட்டன. . .ருஷ்ய சமதர்மத்தில் கத்தி முனையில் தான் ஒவ்வொரு காரியமும் நடைபெறுகிறது. . . ஒரு தனி மனிதன் சுதந்திரமாக ஒரு எண்ணத்தைக்கூட எண்ண அங்கு உரிமையில்லை... சமதர்ம அரசாங்கத்தை மனிதப் பூச்சிகளால் கட்டிக் காக்கப்படுகின்ற ஒரு தேன் கூடு என்று தான் சொல்ல வேண்டும். செல்வம் கொழிக்கும் அமெரிக்காவிலும் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாகி வருகிறது. வருஷத்துக்கு ஓர் அரசாங்கம், மாதத்துக்கு ஒரு மந்திரிசபை, நாளைக்கு ஒரு சட்டம், நேரத்துக்கு

---

4. மேலது நூல் பக்.65-66
5. மேலது நூல், ப72.
6. மேலது நூல் ப.80.
7. மேலது நூல், ப.80.

ஒரு நியாயம் என்று நடந்து கொள்ளும் ஐரோப்பிய நாடுகளில் நாம் கொண்டிருக்கும் நம்பிக்கையைக் கட்டோடு ஒழிக்க வேண்டும்"[8] என அறிவுறுத்துகிறார் கவிஞர்.

ஐரோப்பிய நாடுகளைக் கண்ணை மூடிக் கொண்டு நாம் பின்பற்றக்கூடாதென்றும், நமக்கே உரிய முறையில் சுதேச மனப் பான்மையுடன் நாம் ஒரு புரட்சியை நம்நாட்டில் ஏற்படுத்த வேண்டும் என்கிறார். அதன்படி கிராமங்களில் பஞ்சாயத்து முறையில் ஜனநாயகம் ஏற்படவேண்டும். விவசாயத்தில் இயந்திரங்களைப் புகுத்தி இருக்கிற விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலையில்லாமல் செய்து விடக்கூடாது. கைத்தொழில்களை வளர்க்க வேண்டும். ஆலைத் தொழில்களைக் குறைக்க வேண்டும். நெசவுத் தொழிலில் இயந்திரத்தைப் புகுத்தாமல் சுதேசிய கதர் இயக்கத்தை இன்னும் மேம்படச் செய்யவேண்டும். உணவு, உடை இந்த இரண்டில் மட்டிலுமாவது கையால் செய்யப்பட்ட பொருள்களைத்தான் நாட்டில் உற்பத்தி செய்யவேண்டும் என்றும், அப்படிப்பட்ட பொருள்களைத்தான் மக்கள் வாங்கவேண்டுமென்றும் அரசாங்கம் கட்டளையிட வேண்டும். உலகில் ஆலைகளைப் பயன்படுத்தித் தங்கள் நாட்டின் தேவைக்கு மீறிப் பொருள்களை உற்பத்தி செய்கிற நாடுகள் தான், தங்களது ஆலைகளுக்கு வேண்டிய கச்சாப் பொருள்களைத் திரட்டவும், உற்பத்தியான உபரிப்பொருள்களை விற்கச் சந்தைகளைத் தேடியும் தான் பிறநாடுகளோடு போர் தொடுக்கின்றன. இது மாற வேண்டுமானால் மேற்கூறிய காந்திய வழியை நாம் பின்பற்ற வேண்டும். பிற நாடுகளையும் அதைப் பின்பற்றும்படி செய்ய வேண்டும்"[9]

### 4. பிராமணர், பிராமணரல்லாதார்

பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவில், மெக்காலே என்ற அறிஞரின் பரிந்துரைப்படி ஆங்கில மொழியைப் போதனா மொழியாக அறிவித்தபின், அதை ஏற்றுக் கொள்ளப் பலர் முன்வரவில்லை. சுதேசியத்தை ஆதரித்த பல கட்சிகளும், காந்திஜி, தாகூர் போன்ற தலைவர்களும், கல்வி என்பது அவரவர் தாய்மொழியில் தான் கற்பிக்கப்படவேண்டும். அந்நிய மொழியில் அதுவும் நம்மை அடிமைப்படுத்திய ஆங்கிலேயரது மொழியில் கற்பது அவமானம் என்றே கருதினர். இதனால் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும், ஆங்கிலத்தின் மூலம் கல்வி கற்போர் மிகக் குறைவாக இருந்தனர். இச்சமயத்தில் ஆங்கிலக் கல்வியைக் கற்கப்

---

8. மேலது நூல் ப.81. 9. மேலது நூல், ப.86.

பெருவாரியாக முன்வந்தவர்கள் பிராமணர்களே. ஆங்கில அறிவு பெறுதல் எனும் பந்திக்கு அவர்கள் முந்திக் கொண்டார்கள். அதனால் அரசாங்கத்தில் அவர்கள் பல உயர் பதவிகளையும் கைப்பற்றிக் கொண்டார்கள். இதைக் கண்டு மனம் பொறாத பிராமணரல்லாதவர்கள், பிராமணர்களுக்கீடாகத் தங்களுக்கும் பதவிகளும் சலுகைகளும் வேண்டுமெனக் கோரினர். அதற்காக வென்றே ஜஸ்டிஸ் கட்சி தோன்றியது. பிராமணரல்லாதார் இயக்கம் மராட்டியம் முதலிய இடங்களிலும் பரவியது.

இவ்வாறு அரசியல் துறையில் பிராமணர்களுக்குச் சமமாக உத்தியோகங்களையும் சலுகைகளையும் பெற ஆரம்பிக்கப்பட்ட பிராமணரல்லாதார் இயக்கம், சமுதாயத்துறையில் அவர்கள் தொன்றுதொட்டுப் பெற்று வந்த உயர்நிலையையும், சலுகைகளையும் கண்டிக்க ஆரம்பித்தது. அப்படி ஆரம்பிக்கப்பட்டதுதான் பெரியார் ஈ.வெ.ரா அவர்களால் துவக்கப்பட்ட சுயமரியாதை இயக்கமும், திராவிட இயக்கமும் ஆகும். பிராமணர்களைச் சாமி, சாமி எனக் கும்பிடுபோடுவது, பிராமணர்கள் நடத்தி வந்த உணவகங்களில், பிராமணர்கள் அல்லாதார்க்குத் தனி இடம் ஒதுக்குதல் போன்ற, தீய பழக்கங்களை எதிர்த்து அவர்கள் போரிட்டு அதில் வெற்றியும் பெற்றனர். ஆனால் அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு என்ற பழமொழிக்கிணங்க இந்த இயக்கம் நாமக்கல் கவிஞர் காலத்தில் பெரிதும் தீவிரமடைந்தது. பிராமணர் சமுதாயத்தையே பொதுவாகப் பலர் கொச்சையாக வசைபாடத் தொடங்கினர். பிராமணர்களின் பூணூல் அறுக்கப்படுதல், குடுமி வெட்டப்படுதல் போன்ற தீவிரச் செயல்களில் பலர் ஈடுபட்டனர். அத்தகைய இழிவான செயல்களையும், மனப்பான்மையையும் கண்டிப்பதற்கென்றே கவிஞரால் எழுதப்பட்டது தான் இக்கட்டுரையாகும். "ஆரியராவது, திராவிடராவது, பார்ப்பன சூழ்ச்சியா" போன்ற நூல்களிலும் அவர் இந்தக் கருத்துகளை வெளியிட்டுள்ளார். அக்காலச் சூழ்நிலைக்கு அது தேவைப்பட்டது. தற்காலத்துக்கு அது தேவையில்லை என்பது நாம் யாவரும் அறிந்ததொன்றேயாம்.

"பிராமணர்கள் எல்லாரும் சூழ்ச்சிக்காரர்களென்றும், பிற ஜாதியாரைக் கெடுத்தே ஜீவனம் செய்யும் பித்தலாட்டக் காரர்களென்றும், செய்யப்படும் பிரச்சாரத்தையே கவிஞர் கண்டிக்கிறார். இந்தப் பிரச்சாரத்துக்கென்று நடத்தப்பட்டு வரும் பத்திரிகைகளும், அவற்றை ஆதரிக்கும் தலைவர்களும் பயன்படுத்துகின்ற கொச்சையான வார்த்தைகளைக் கேட்கவும் நினைக்கவும்கூடத் தன் மனம் கூசுவதாக அவர் கூறுகிறார்." அப்படி ஒரு சமூகத்தை ஏகோபித்து அவமதிப்பது அன்பல்ல. அழகல்ல,

ஆண்மையுமாகாது. இப்படி ஒரு சமூகத்தை ஒருங்கே இழிவு செய்வதைக் கேட்கும் போதெல்லாம் பிராமணரல்லாத என் மனம் நாணுகின்றது, தலை குனிகின்றது; பகுத்தறிவு பதைக்கின்றது. சுயமரியாதை சுருங்குகின்றது; நீதி நிந்திக்கின்றது; நேர்மை சிந்திக்கின்றது" என வேதனையோடு எழுதுகிறார் கவிஞர். பிராமணர்கள் இதைப்பற்றி வருத்தப்பட்டாலும், படாவிட்டாலும், பிராமணரல்லாதாருக்கே இந்தப் பிரச்சாரம் பெரும் பிழை புரிவதாகும்[1] என்பது அவர் கருத்து.

நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால் பிராமணர்கள் தொன்று தொட்டு மற்றெல்லா வகுப்பினரோடும் மருவிக் கலந்து வாழ்ந்து வந்தனர் என்பது நன்கு தெரியும்.[2] மற்றும் நம் தமிழ் நாகரிகத்துக்காக, அதை உலகம் புகழும் படியாகச் செய்துள்ள பிராமணர்கள் பலர். சான்றாக அத்வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதம் எனும் முப்பெரும் சமயங்களை உண்டாக்கியவர்கள் (சங்கரர், இராமநுஜர், மத்வர்) மூவரும் பிராமணர்கள். ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்சர் தயானந்த சரஸ்வதி, ரமண மகரிஷி போன்ற மகான்கள் பிராமண குலத்தைச் சேர்ந்தவர்களே. அரசியல் துறையில் ரானடே, கோகலே, சுரேந்தரநாத் பானர்ஜி, முத்துசாமி ஐயர், வீரராகவ ஆச்சாரியார், சி. சுப்ரமண்ய ஐயர், எஸ். சுப்ரமண்ய ஐயர், ஆனந்தாச்சார்லு, ரகுநாதராவ், வ.வெ.சு.ஐயர், சுப்ரமண்ய பாரதி முதலிய பல தலைவர்கள் பார்ப்பன குலத்தில் பிறந்தவர்களே. சதி, தீண்டாமை போன்ற தீய வழக்கங்களை ஒழிக்கப் பாடுபட்ட ராஜாராம் மோஹன் ராய் ஒரு பிராமணர். திருவாங்கூர் சமஸ்தானத்தில் "ஊட்டுப் பொறை"களுக்கெல்லாம் பூட்டுப்போட்டவர் சர்.ஏ. சேஷய்ய சாஸ்திரியார். தீண்டாமையை ஓட்டல், கள்ளை ஒழித்தல் முதலிய பல சமூகச் சேவைகளைச் செய்த ஸ்ரீ பாலகங்காதர திலகர், காந்திஜியைப் பின்பற்றித் தமது சொத்துகளை எல்லாம் நாட்டுக்கே அர்ப்பணித்த மோதிலால் நேரு, ஜவஹர்லால் நேரு யாவரும் பிராமணர்களேயாவர். மற்றும் மொகலாயரை எதிர்த்துப் போராடிய சிவாஜியின் வளர்ப்புத் தந்தை தாதாஜி கொந்ததேவும் ஒரு பார்ப்பனனே யாகும். (தற்கால சீர்திருத்தத் தலைவர் அம்பேத்காரின் குருவும் ஒரு பிராமணர் என்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது)

தமிழ்நாட்டுச் சமயக் குரவர்களென மதிக்கப் பெறும் அப்பர், சுந்தரர், திருஞான சம்பந்தர், மாணிக்க வாசகர் இந்நால்வரில் அப்பர் தவிர ஏனையோர் யாவரும் பிராமணர்களே. சந்தான

---

1 மேலது நூல் ப.126.

2. மேலது

குரவர்களென மதிக்கப்பெறும், மெய்கண்டதேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்மந்தர், உமாபதி சிவம் என்ற நால்வரில் அருணந்தி சிவாச்சாரியாரும், உமாபதி சிவமும் பார்ப்பனர்கள். வைணவ ஆழ்வார்களிலேயே சிறந்தவரான நம்மாழ்வார் என்ற பிராமணரல்லாதாரைப் பிராமணர்கள் வணங்குகின்றனர். சங்கித சிரோன்மணி தியாகையர் பிராமண குலத்தவரேயாம். தமிழுக்கு இலக்கணம் முதல் முதலில் வகுத்த தொல்காப்பியரும், சங்க நூல்களைத் திரட்டித் தந்த ஸ்ரீ உ.வெ.சாமிநாதய்யரும் பார்ப்பனர்களே யாவார்."[3] இவ்வாறு நம் தமிழ் நாட்டுக்கே பெருமை தேடித் தந்த பெரியோர்கள் பிறந்த ஒரு குலத்தை ஒட்டுமொத்தமாக இகழ்வது நன்றன்று என்பதுதான் கவிஞரின் வாதம்.

## 5. பார்ப்பனச் சூழ்ச்சி

இக்கட்டுரையில் "பிராமணர்களெல்லாம் சூழ்ச்சிக் காரர்களென்றும், பிராமணரல்லாத மற்ற ஜாதியாரெல்லாம் அந்தச் சூழ்ச்சியில் சிக்கிக் கொண்டு திகைக்கின்றார்கள்"[4] என்றும் ஓயாமல் சொல்லிக் கொண்டிருப்பவர்களின் கூற்றையும் மறுக்கின்றார் கவிஞர். இப்படிப் பேசுவது பிராமணரல்லாதாருடைய தன் மதிப்புக்கே தவறு செய்வதாகும் என அவர் கருதுகிறார். இது உண்மையானால் பாரி, சடையப்ப முதலியார், இளங்கோவடிகள், கம்பன் ஒட்டக் கூத்தன், புகழேந்தி, திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, மாம்பழக் கவிராயர், சுப்ரமண்ய பாரதி முதலிய சான்றோர்களும் புலவர்களும், சுயபுத்தி இல்லாதவர்கள், பார்ப்பான் சூழ்ச்சிக்கு இலக்கானவர்கள் என்று கூற வேண்டியதாகிவிடும். ஜாதி, மதம் போன்றவற்றால் இப்போது இங்கு நிலவுகிற தீமைகளுக்கெல்லாம், பிராமணர்கள் மட்டுமல்லாமல் பிராமணரல்லாதாரும் பொறுப்பாளிகளாவர். அக்காலத் தேவைகளுக்கேற்றவாறு இரு வகுப்பாரும் சேர்ந்து செய்த காரியங்களின் பலன்களை நாம் இப்போது அநுபவிக்கிறோம். ஒரு ஜாதி வெறும் சூழ்ச்சியால் மட்டும் மற்ற ஜாதிகளை அடக்கி ஆளமுடியுமா? எனக் கேட்கிறார் கவிஞர்.[5] எனவே கவிஞரது கருத்துப்படி "இங்குப் பேசப்படுகிற பிராமணச் சூழ்ச்சி எங்கே இருக்கலாமென்றால், பிராமணரும் பிராமணரல்லாதாரும் வேறொரு மூன்றாவது மனிதருடைய தயவை நாடி, அவரைச் சந்தோஷப்படுத்தி ஜீவனம் செய்ய வேண்டிய இடங்களில், பிராமணரல்லாதாருடைய சூழ்ச்சியைக் காட்டிலும், பிராமணனது சூழ்ச்சி ஒருக்கால் வெல்லக்

---

3. மேலது நூல், பக்.127-130. 4. மேலது நூல் ப.123. 5. மேலது.

கூடியதாக இருக்கலாம். முக்கியமாக இந்தநாட்டில் இப்போது இருந்து வருகிற ஆட்சிமுறையிலும், அதைத் தழுவி நிற்கின்ற ஸ்தாபனங்களிலும் மட்டும் தான் இந்த சூழ்ச்சிகள் இருந்திருக்க முடியும். மற்றபடி இந்த நாட்டின் வியாபாரத்திலோ, விவசாயத்திலோ கைத்தொழில்களிலோ எந்தச் சூழ்ச்சியையும் எவரும் செய்ய இடமில்லை. இதுவரையிலும் ஆங்கிலப் படிப்பில் முந்திக்கொண்ட பிராமணர்களில் சிலர், அந்நிய அதிகாரிகளைச் சந்தோஷப்படுத்தி, அவர்களுடைய தயவால், நல்ல நல்ல உத்தியோகங்களைத் தேடிக் கொண்டார்களென்றும் அதே காரியத்தை இப்போது பிராமணரல்லாதாரில் சில படித்தவர்களும் செய்ய விரும்புகிறார்களென்றும், ஆனால் முன்னாலேயே அங்குள்ள பிராமணர்கள் அதற்கு முட்டுக்கட்டையாய் இருக்கிறார்களென்பதையும், தவிர இந்த "பிராமண சூழ்ச்சி" என்ற பேச்சுக்கே வேறு அர்த்தம் இருக்கவே முடியாது"[6] எனக் கவிஞர் அறுதியிட்டுக் கூறுகிறார். ஆதலால் "சூழ்ச்சி" என்ற இந்த கூக்குரல் எல்லாம் அரசாங்க உத்தியோகங்களுக்காகத் தான் சுற்றிச் சுற்றிச் சுழன்று கொண்டிருக்க முடியும் என்பது தெளிவாகிறது" என்று அவர் கூறி முடிக்கிறார்.[7]

இது ஓரளவு உண்மை என்பதை வரலாறு காட்டுகின்றது. பிராமணரல்லாதார் உரிமைகளைப் பெறத் துவக்கப்பட்ட ஜஸ்டிஸ் கட்சி அரசு உத்யோகங்களிலும், சட்டசபைகளிலும் பிராமணரல்லாதார் இடம் பெறவே பாடுபட்டனர். அதனால் பிராமணரல்லாதாரிடையே ஏற்கெனவே சற்று முன்னுக்கு வந்திருந்த மேல்ஜாதி வகுப்பினரே (அதாவது செட்டிகள், முதலியார்கள், நாயர்கள் போன்றவர்கள்) அதனால் பயன்பட்டனர். "வகுப்புவாரிப் பிரதி நிதித்வம்" (communal representaion) கொண்டுவந்த அவர்கள் பிராமணர்களல்லாத பிற்பட்ட ஜாதியாருக்கும், மிகப் பிற்பட்ட ஜாதியார்க்கும், செட்யூல்டு வகுப்பினருக்கும் போதுமான பிரதிநிதித்வம் தரவில்லை. எனவே பிற்பட்ட வகுப்பார் முற்பட்ட வகுப்பாருக்கு விரோதமாகவும், பிற்பட்ட வகுப்பாரிடையே சலுகைகளைப் பெற்றோருக்கும் (creamy layer) அவற்றை இன்றும் பெறாத ஏழை எளிய மக்களுக்கும் போராட்டம் நடைபெற்று வருகிறது. பிராமணர்களைவிட, முன்னேறிய பிராமணரல்லாதார் எங்களின் முதல் எதிரிகள் என அவர்கள் கூக்குரலிடுகின்றனர்.

### பிராமணர்களல்லாதார் என்றால் யார்?

இத்தலைப்பில் பிராமணர்களல்லாதார் என்ற ஒரு தனிப்பட்ட வகுப்பே கிடையாது என வாதிக்கிறார் கவிஞர்.

---

6. மேலது நூல், பக்.134-135. 7. மேலது.

பிராமணரல்லாத யாவரும் ஒரே ஜாதியைச் சேர்ந்தவர்களா? ஒரே நிறமா? ஒரே மொழி பேசுகின்றவர்களா? ஒரே விதமான சடங்குகளை மேற்கொள்பவர்களா? கோயில், குளம், குலதெய்வம் என்ற எதிலாவது ஒரே கொள்கையுடையவர்களா? கொள்வது கொடுப்பது, உண்பது உடுப்பது இவற்றுள் ஏதேனும் ஒன்றில் ஒற்றுமை உள்ளவர்களா? எனக் கேட்கிறார் கவிஞர். பிராமணர்களுக்காவது எல்லாருக்கும் பொதுவான சில கொள்கைகளும் சடங்குகளும் இருக்கின்றன. (வேதம் படிப்பது, பூணூல் அணிவது போன்று) ஆனால் பிராமணரல்லாதார்க்கெல்லாம் பொதுவானது என்று சொல்ல ஒன்றுமில்லை. . .சர்க்கார் 'உத்தியோகங்களிலும், அதைச் சார்ந்த இடங்களிலும், ஆங்கிலம் படித்த பிராமணர்களோடு மற்றவர்கள் பிணங்கிக் கொள்ளும் சமயங்களில் தான் இத்தகைய பேச்சு ஓரளவு சாத்தியமாகும். மற்றபடி பிராமணரல்லாதார் என்ற ஒரு சமூகம் இல்லவும் இல்லை, இருக்கவும் முடியாது"[8] இவ்வாறு இல்லாத ஒன்றை இருப்பதாகப் பாவித்துக் கொண்டு, அதற்காகக் கட்சி கட்டிக்கொண்டு போராட்டம் நடத்துவது சற்றும் முறையானதல்ல. எனவே அதில் ஈடுபட வேண்டாமெனத் தமிழர்களைக் கவிஞர் வேண்டிக் கொள்கிறார்.

---

8. மேலது நூல், பக்.138.

# என் கதை

"என் கதை" என்ற நாமக்கல் கவிஞரின் "தன் வரலாறு" அல்லது சுயசரிதையானது தமிழ் நாட்டில் அமோகமான வரவேற்பைப் பெற்ற ஒரு நூல். பள்ளி மாணவர்களுக்கு விருப்பப் பாடமாகப் பல்லாண்டுகளாக இருந்து வந்த நூல். அதற்குக் காரணம் அந்நூல் எழுதப்பட்ட முறையும் நடையுமாகும். கவிஞர் தமது வாழ்க்கையில் நடைபெற்ற எல்லா நிகழ்ச்சிகளையும் காலக்கிரமமாக எடுத்துக் கூறாமல், ஒரு சில சுவையான நிகழ்ச்சிகளை மட்டும், படிப்போரின் இதயங்களைக் கவரும் வகையில் உணர்வு பூர்வமாக எழுதியுள்ளதே அதன் செல்வாக்குக்குக் காரணம். தனது குற்றங்களைக்கூட ஒளிவு மறைவின்றிக் கூறி அவர் படிப்பவர்களின் அநுதாபத்தைப் பெறுகிறார். ஏதோ ஒரு நாவலைப் படிப்பதைப் போன்ற உணர்வை வாசகர்களிடம் ஏற்படுத்துகிறார். இந்நிலையில் காந்திஜியின் மீது அவருக்கு எப்படி ஒரு அளவற்ற பக்தி ஏற்பட்டதென்பதை விளக்குகின்ற ஓரிரு நிகழ்ச்சிகளை மட்டும் ஈண்டுக் குறிப்பிடுவோம்.

உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் போதே கவிஞர், அரவிந்தர், திலகர் போன்ற தீவிரவாதிகளின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு, வன்முறையால் நடத்தப்படும் புரட்சியினால் மட்டுமே இந்தியாவுக்கு விடுதலை கிடைக்கும் என நம்பி ஒரு தீவிரவாதியாகவே வாழ்ந்தார். ஆனால் தென்னாப்பிரிக்காவில் காந்திஜி வெள்ளையர்கள் காட்டிய நிறவெறியை எதிர்த்து அஹிம்சை முறையில் வெற்றி எய்திய நிகழ்ச்சிகள் அவரது உள்ளத்தில் காந்திஜியின் மீது ஒரு பெரும் மதிப்பை ஏற்படுத்தியது.

1914ஆம் ஆண்டில், திருச்சி மாவட்டக் காங்கிரஸ் செயலாளராகக் கவிஞர் நியமிக்கப்பட்டார். உணர்ச்சி மிக்க பேச்சாலும், செயலாலும் அவரது செல்வாக்கு நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே சென்றது. அதன் விளைவாக அவர் 1921 ஆம் ஆண்டு கரூர், நாமக்கல் காங்கிரஸ் வட்டாரங்களின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 1930 வரை அப்பதவியில் நீடித்தார். அப்போது அவர் தமிழ் நாடெங்கும் சூறாவளிப் பயணம் செய்து ஆங்கில ஆட்சிக்கு எதிராகவும், காங்கிரசின் செயல்களைப் பாராட்டியும்

ஆற்றிய சொற்பொழிவுகள் தமிழ் மக்களின் மொத்த ஆதரவையும் நன்மதிப்பையும் பெற்றன.

அரசியலில் கவிஞர் இவ்வாறு அடியெடுத்து வைத்த காலத்தில்தான் காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி இருந்தார். காங்கிரசின் தலைவராகவும் அவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அதுவரை திலகரின் தீவிரவாதத்தை ஆதரித்து வந்த கவிஞர், திலகர் ஆங்கில அரசாங்கத்தால் தண்டிக்கப்பட்டு ஆறு ஆண்டு சிறைவாசம் வழங்கப்பட்ட போது பெரிதும் வருந்தினார். சிறைவாசம் மேற்கொண்ட திலகருக்கு அநுதாபம் கூடத் தெரிவிக்காத கோகலே மீதும் அவரது மிதவாதக் கொள்கை மீதும் அவருக்கு அருவருப்பு ஏற்பட்டது. ஆனால் காந்திஜி, கோகலேயைத் தன் குருவாகவும், வழிகாட்டியாகவும் ஏற்றுக் கொண்டபோது, அவருடைய மனத்தில் ஒரு குழப்பம் ஏற்பட்டது. திலகரையா, அல்லது கோகலேயையா யாரை ஆதரிப்பது? என அவர் கலங்கினார். இப்படி அவர் குழம்பிக் கொண்டிருந்த போது காசியில் "ஹிந்து சர்வ கலாசாலையின் திறப்பு விழா நடைபெற்றது. பண்டித மதன் மோஹன் மாளவியாவால், பல சமஸ்தானபதிகளிடம் லட்சக் கணக்கில் நன்கொடை வாங்கிக் கட்டப்பட்டது அக்கலாசாலை. எனவே பல ராஜாக்களும், ஜமீன்தார்களும், பணக்காரர்களும் அவ்விழாவிற்கு வருகை புரிந்திருந்தனர். அவ்வமயம் காந்திஜியையும் அழைத்துப் பேசச் சொன்னார்கள். காந்திஜி தமது சொற்பொழிவில், நன்கொடை கொடுத்த ராஜாக்களைப் புகழுவதற்குப் பதிலாக "கோடானுகோடி மக்கள் உண்ணக் கஞ்சியும், உடுக்க ஆடையும் இல்லாது தவிக்கும் இந்நாட்டில், இன்னும் உங்களிற் பலபேர் கோடிக்கணக்கான விலைமதிப்புள்ள ஆபரணங்களை அணிந்து கொள்ளும் ஆடம்பரத்தில் வாழ்வது பாபமல்லவா? ஏழை மக்களின் காவலர்களாக இருக்க வேண்டிய நீங்கள் இப்படிச் செய்வது மிகவும் துரோகமான காரியமல்லவா?" என்று கடுமையாகப் பேசிவிட்டார். அதைக் கேட்ட மகாராஜாக்களும் பண்டித மாளவியாவும் கூடப் பெரிதும் வருத்தமுற்றனர். ஆனால் அந்தப் பேச்சைக் கேட்டபின் தான் கவிஞருக்குக் காந்திஜியின் மீது பற்றும் பாசமும் ஏற்பட்டது. மற்ற தலைவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்த போது அவர் ஒருவரே சுயநலமற்ற மகான் என அவருக்குத் தோன்றிற்று. அவரையே தன் தலைவராக அவர் அப்போதிருந்தே ஏற்றுக் கொண்டார்.

1920ஆம் ஆண்டில் கல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரசில், பிரிட்டிஷாரை எதிர்க்க, ஒத்துழையாமை இயக்கம் என்ற அஹிம்சா மார்க்கமே சிறந்தது எனக் காந்திஜி ஒரு தீர்மானம் கொணர்ந்தார். அதை எப்படியும் தோற்கடிக்க வேண்டுமெனத் தீவிரவாதிகள்

முயன்றனர். அக்காங்கிரசில் கலந்து கொள்ளக் கவிஞரும், நாகராஜயங்கார் என்பவரும் தமிழ்நாட்டின் காங்கிரஸ் பிரதிநிதிகளாக அனுப்பப் பட்டனர். இருவரும் காந்திஜிக்கே வாக்களிக்க வேண்டுமெனத் தீர்மானித்தனர். ஆனால் கல்கத்தாவுக்குப் போக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தனி ரயிலில், வ.உ.சிதம்பரம்பிள்ளையும் பயணம் செய்தார். அவர் கவிஞரை அணுகித் திலகர் கட்சிக்கே வாக்களிக்கும்படி பெரிதும் கேட்டுக் கொண்டார். ஆனால் கவிஞர் விநயமாக அவரது வேண்டுகோளை மறுத்துவிட்டார். அதே போன்று காங்கிரசில் ஓட்டெடுப்பு நடந்த போது கவிஞர் காந்திஜியின் அஹிம்சா கொள்கைக்கே வாக்களித்தார். "அன்றுமுதல் இன்றளவும் நான் காந்தி பக்தனாகவே-அல்லது காந்தி பித்தனாகவே இருந்து வருகிறேன். . . .காந்தியம் ஒன்றே நம் நாட்டின் விடுதலைக்கு மட்டுமல்லாமல் உலக நலத்துக்கும் கதி மோட்சம் எனக் கருதலானேன்"[1] எனக் கவிஞர் இந் நூலில் எழுதியுள்ளார்.

### காந்தி காந்திதான்

இத்தலைப்பில் கவிஞர் எழுதியுள்ள கட்டுரையில் காந்திஜி கொடுத்த ஒரு வாக்குறுதியைக் காப்பாற்றுவதில் எவ்வளவு தூரம் கண்டிப்பாயிருந்தார் என்பதைக் கவிஞர் நன்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்.

"காந்தியடிகள், கரூருக்கு இருமுறை வருகை தந்தார். முதல் தடவை வருகை வந்தபோது, நேரமில்லாத காரணத்தால், ரயில்வே நிலையத்துக்கு அடுத்து அமைக்கப்பட்ட மேடையிலிருந்தே சில நிமிடங்கள் பேசிவிட்டு ரயில் பயணத்தைத் தொடர்ந்து விட்டார்.

அடுத்தமுறை தமிழ்நாட்டுக்கு வரும்போது கரூருக்கு வந்து சாவகாசமாக உரையாற்றுவதாக வாக்களித்து விட்டுச் சென்றார். அதே போன்று காந்திஜி இரண்டாவது முறையாகத் தமிழ்நாடு வந்தபோது கவிஞரும் காங்கிரஸ் தொண்டர்ளும் கேட்டுக்கொண்டபடி காந்திஜியின் பயணத்திட்டத்தில், கரூரும், கோபிச்செட்டிப் பாளையமும் இடம்பெற்றன. இவ்விரு இடங்களிலும் தங்கியபின் மலையாளம், கொச்சி, திருவாங்கூர் வழியாக இலங்கைக்குக் காந்திஜி போவதாகத் திட்டமிடப் பட்டிருந்தது. பயணத்திட்டத்தை வகுத்தவர்கள் காந்திஜி கரூர் செல்வதை ஒப்புக் கொண்டதால், கவிஞரும் ஏனைய காந்தி பக்தர்களும் 3000 ரூபாய் பொதுமக்களிடமிருந்து வசூல் செய்து

---

1. மேலது நூல், பக்.153.

சிலபத்திரிகைகளிலும் வெளியிடப்பட்டு காந்திஜியிடம் கொடுக்கத் தயாராயிருந்தனர். இது பற்றிய செய்தி, விட்டன. கரூரைச் சுற்றியுள்ள காங்கிரஸ் தொண்டர்களுக்கும் இச்செய்தி அனுப்பப்பட்டது. இந்நிலையில் காந்தியடிகள் கரூருக்கு வருவதாக விளம்பரப் படுத்தப்பட்ட தேதிக்கு மூன்று நாட்களுக்கு முன், காந்திஜியின் கரூர் வருகை ரத்து செய்யப்பட்டு விட்டதாகப் காந்திஜியின் பயணத் திட்டத்தை வகுத்த ராஜாஜியிடமிருந்து கவிஞருக்கு ஒரு தந்தி வந்தது. அத்தந்தியைக் கண்டு பதறிப்போன கவிஞர், ஓடோடிச் சென்று ராஜாஜியைச் சந்தித்து, எப்படியாவது காந்திஜியின் கரூர் வருகையைப் பயணத்திட்டத்தில் சேர்த்துக் கொள்ளுமாறு மன்றாடினார். ராஜாஜி காந்திஜியின் உடல் நிலையை முன்னிட்டு அவருக்கு இரண்டு நாட்கள் ஓய்வு தேவைப்பட்டதால், அவரது கரூர், கோபிச்செட்டிப்பாளையம் வருகை ரத்து செய்யப்பட்டதாகவும், அதில் மாற்றம் செய்ய முடியாதென்றும் மிகக் கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். இதைக் கேட்ட கவிஞரும் அவரது நண்பர்களும் மனமொடிந்து போனார்கள். பின்னர் ஒருவாறு சமாளித்துக் கொண்டு காந்திஜியையே நேரில் பார்த்து முறையிட்டுப் பார்க்கலாம் எனத் தீர்மானித்தனர். கோபிச் செட்டிப் பாளையத்தாரும் அதேபோன்று தீர்மானித்தனர். இவ்விரு ஊர்ப்பிரதிநிதிகளும் ஒன்று சேர்ந்து காந்திஜி தங்கியிருந்த கோவை ஆர்.கே. ஷண்முகம் செட்டியார் வீட்டுக்குப் போனார்கள். காந்திஜி மதிய உணவு உண்ட பின் சிறிது நேரம் படுத்திருப்பார். அதன்பின் ஒரு மணிநேரம் நூல் நூற்பார். நூற்றுக்கொண்டே தன்னைப் பார்க்க வந்தவர்களோடு பேசிக் கொண்டிருப்பார். அதற்கேற்பக் காந்திஜி உணவுண்கிற வரை காத்திருந்து அவர் நூல் நூற்கத் தொடங்கிய உடன், நாமக்கல் இராமலிங்கமும், கோபிச்செட்டிப்பாளையம் சுப்பணக்கவுண்டரும், அவர்களது தொண்டர்களும் திபுதிபு எனக் காந்திஜியின் அறைக்குள் முன் எச்சரிக்கையின்றி நுழைந்தனர். காந்திஜி திரும்பிப் பார்த்துத் திடுக்கிட்டு அனைவரையும் அமரச்சொல்லி "என்ன சேதி"? என வினவினார். அதற்குள் கோபிச்செட்டிப் பாளையத்திலிருந்து வந்திருந்த நண்பர் ஒருவர், "மகாத்மாஜி! உங்கள் தலைமையில் இந்த அநியாயம் நடக்கலாமா?[2] என அலறினார். காந்திஜி நூற்பதை நிறுத்தி விட்டு என்ன அநியாயம் என வினவினார். பயணக்கமிட்டி முதலில் காந்திஜியின் கரூர், கோபிச்செட்டிப் பாளைய வருகையை ஏற்றுக் கொண்ட கடிதங்களையும், அதை நம்பி அவர்கள் செய்துள்ள ஏற்பாடுகளையும்,

---

2. மேலது நூல், ப.170.

பின் திடீரென்று அவரது வருகை ரத்து செய்யப்பட்டதாக வந்த தந்தியையும் காண்பித்துவிட்டு எப்படியாவது அவர் தங்கள் ஊர்களுக்கு விஜயம் செய்யவேண்டுமென மிகப் பணிவாகக் கேட்டுக் கொண்டனர். உடனே காந்திஜி, பயணத்திட்ட அதிகாரியான ராஜாஜியை அழைத்து "ஏன் இப்படிச் செய்தீர்கள்? எனக்கேட்டார். உங்கள் உடல் நலனை முன்னிட்டே அவ்வாறு செய்தேன்" என ராஜாஜி பதிலளித்தார். அங்கு நான் செல்லப் போவதாக நீங்கள் ஏற்கெனவே வாக்குறுதி அளித்திருந்தீர்களல்லவா? எனக் காந்திஜி கேட்டார். 'ஆம்' என்று அவர் ஒப்புக் கொண்டார். உடனே காந்திஜி ராஜாஜியைப் பார்த்து "வாக்குறுதி, வாக்குறுதிதான். அதை எவ்வாற்றேனும் நிறைவேற்றியே தீரவேண்டும் [3](A promise is a promise, It must be kept at any cost) என்று கூறி பிரயாணத் திட்டத்தை வரவழைத்துப் பார்த்தார். அதில் அடுத்த இரண்டு நாட்களுக்கு ஓய்வு எனக் குறிப்பிடப்பட்டிருந்தது. அதை அடித்துவிட்டுக் காந்திஜி முதல் நாளில் கோபிச்செட்டிப் பாளையத்துக்கும் இரண்டாம் நாள் கரூருக்கும் போவதாக மாற்றம் செய்து விடும்படி ஆணையிட்டார். இதைக் கேட்ட தொண்டர்கள் "காந்திஜிக்கு ஜே!" காந்திஜிக்கு ஜே!" என்று கூவிக்கொண்டே சென்றார்கள். எல்லாரும் போனபின் சுப்பணக்கவுண்டர் நாமக்கல் கவிஞரிடம் வந்து காதோடு காதாகக் "காந்தி காந்திதான்' என்று சொன்னாராம்.[4]

இந்த நிகழ்ச்சி காந்திஜியின் 'சொன்ன சொல் தவறாமை கொடுத்த வாக்குறுதியை எப்படியாவது காப்பாற்ற வேண்டும்" என்ற அருங்குணத்தை வெளிப்படுத்துகிறது. இதை மனத்தில் கொண்டோ என்னவோ கவிஞர் கீழ்க்கண்ட பாடலொன்றைப் பாடியுள்ளார்.

சொல்லுவது எல்லார்க்கும் சுலபமாகும்
    சொன்னபடி நடப்பவர்கள் மிகவும் சொற்பம்
எல்லையின்றி நீதிகளை எழுதுவார்கள்
    எழுதியது பிறருக்கே தமக்கென்றெண்ணார்
தொல்லுலகில் நாமறிந்த தலைவர் தம்முள்
    சொன்னதுபோல் செயல் முயன்றார்
                                        இவரைப்போல
இல்லையெனும் மோகனதாஸ் கரம்சந்த் காந்தி
    இந்தியத்தாய் உலகினுக்கே ஈந்த செல்வம்[5]

---

3. மேலது    4. மேலது நூல், ப.172.

5. நாமக்கல் கவிஞர் பாடல்கள், தொகுப்பும் குறிப்பும், பூம்புகார் பதிப்பகம், சென்னை-108, 2001, ப.441.

## முடிவுரை

இதுகாறும், எடுத்துக்காட்டப்பட்டுள்ள காந்திஜியின் கட்டுரைகளில், காந்திஜியின் முக்கியக் கருத்துகளான, அஹிம்சை, சத்தியம், சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை இயக்கம், கைத்தொழில் வளர்ச்சி, சுதேசியம், தாய்மொழி மூலம் கல்வி, தன்னிறைவு பெற்ற கிராம சுயராஜ்யம், கிராமங்களில் நேர்முகத் தேர்வு மூலமும் அதற்கு மேலுள்ள தாலூகா, ஜில்லா முதலிய தொகுதிகளுக்கு மறைமுகத் தேர்தல் மூலமும் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் மூலமும் அமைக்கப்படும் பஞ்சாயத்து ராஜ்யம், முதலியவை பற்றி நாமக்கல் கவிஞர் எவ்வாறு தமது சுயசரிதையிலும், புதினங்களிலும் கட்டுரைகளிலும் மறைமுகமாக எடுத்தியம்பியுள்ளார் என்பதை ஏறக்குறைய அவரது சொற்களாலேயே எடுத்துக் கூறப்பட்டுள்ளன. கூறியது கூறல் என்ற குற்றம் இந்நூலில் காணப்படுவதற்கு இடமுண்டு. அதை வாசகர்கள் பொறுத்தருள்வார்களென்று நம்புகிறேன்.

இன்றைய இந்திய அரசியலில் கடைப்பிடிக்கப்படும் ஜனநாயக ஆட்சி முறையிலும், பொருளாதாரத் துறையில் கடைப்பிடிக்கப்படும் உலகளாவிய கொள்கையிலும் (globalisation) காணப்படும் தீங்குகளையும், குறைபாடுகளையும் பார்க்கும்போது, காந்திஜியின் சுதேசிய சமதர்மக் கோட்பாடுகள் எவ்வளவு சிறந்தவை என்பது சொல்லாமலே பெறப்படும். அரசியல்வாதிகளும் பொருளாதார நிபுணர்களும் இவை பற்றிச் சிந்தித்துச் செயல்பட்டு நாட்டின் நலனைக் காப்பார்களாக!

### மேற்கோள் நூற்பட்டியல்


1. நாமக்கல் கவிஞர் பாடல்கள், பூம்புகார் பதிப்பகம், சென்னை-108, 2001.

2. நாமக்கல் கவிஞர் பாடல்கள் (3 பாகங்கள்) மணிமேகலைப் பிரசுரம், தி.நகர், சென்னை-17.

3. நாமக்கல் கவிஞர் பாடல்கள், வர்த்தமானன் பதிப்பகம், சென்னை-17, 2003.

## நாமக்கல் கவிஞரின் உரைநடை நூல்கள்

1. மலைக்கள்ளன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை-108, 2001.
2. தாமரைக் கண்ணி அல்லது காணாமற் போன கலியாணப் பெண், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-14, 1991.
3. அன்புசெய்த அற்புதம், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-14, 1991.
4. கற்பகவல்லி, கவிஞர் பதிப்பகம், கோளவன், 1962.
5. மரகத வல்லி, கவிஞர் பதிப்பகம், கோளவன், 1962.
6. மாமன் மகள் (நாடகம்), பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-14, 1954.
7. இலக்கிய இன்பம், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை-14, 1954.
8. என்கதை, பழநியப்பா பிரதர்ஸ், 1977, மணிவாசகர் பதிப்பகம், சென்னை-108, 2001.
9. தமிழ்மொழியும் தமிழரசும், இன்ப நிலையம், சென்னை-4, 1965.
10. தாயார் கொடுத்த தனம், ஜெயம் கம்பெனி, சென்னை, 1953.
11. தமிழன் கண்ட அரசு, பாரதி பதிப்பகம், சென்னை-17, 1987.
12. காந்திய அரசியல் (மொழிபெயர்ப்பு) தமிழ்ப் புத்தகப் பண்ணை, சென்னை, 1953.
13. கவிஞன் குரல், தமிழ்ப் புத்தகப் பண்ணை, சென்னை-17, 1953.
14. ஆரியராவது, திராவிடராவது, தமிழ்ப் பண்ணை, சென்னை-17, 1947.
15. பார்ப்பன சூழ்ச்சியா? தமிழ்ப் பண்ணை, தி.நகர், 1948.
16. கிர. அனுமந்தன், நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை, சாஹித்ய அகாதமி, புதுடில்லி, 2000, 2ஆம் பதிப்பு.



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113.

**அண்மை வெளியீடுகள்**

| | |
|---|---|
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி.யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப்பிள்ளை | 50.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100 | 50.00 |
| நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி - 1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி - 2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி - 3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல் கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| Agreement in Dravidian Languages | 100.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ.நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| பெரியாரின் பண்பாட்டுப் புரட்சி | 25.00 |
| வ.உ.சி. வளர்த்த தமிழ் | 20.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் - நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |

**வெ. எண். 507** **விலை ரூ. 35 /-**

**நாமக்கல் கவிஞரின்**
**உரைநடைப் படைப்புகளில்**
**காந்தியமும் தேசியமும்**